# வேளாளர் யார்?



மூவேந்தர் யார்?

ஆசிரியர்

**இரா. தேவஆசீர்வாதம்**

முன்னாள் டிப்டி கலெக்டர்



இரா. தேவன் பதிப்பகம்

180, யாகப்பா நகர்

தஞ்சாவூர்-7

முதற்பதிப்பு : ஜனவரி 1981


படையல்

*அந்நியர் ஆக்கிரமிப்பில் நிகழ்ந்த*
*நில உடைமைப் போராட்டங்களில்*
*உயிர் நீத்த வேளாண் பெருங்குடியினரின்*

நினைவாக

**விலை ரூ. 12**

நூல் கிடைக்குமிடம்

இரா. தேவ ஆசீர்வாதம்
180 யாகப்பா நகர்
தஞ்சாவூர்-7

தொன் போஸ்கோ அச்சகம், தஞ்சாவூர்-1

## முன்னுரை

தமிழர் நாகரிகம் மிகவும் தொன்மையானது என்பதுவும், ஆற்ரோரங்களிலேயே அது முதன் முதல் தோன்றியது என்பதுவும் அறிஞர் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட கருத்துக்களாகும், இந்த நாகரிகத்தைத் தோற்றுவித்தவர் உழவர் குடியே என்பது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த வள்ளுவப் பெருமகன் 'உழுவான் உலகத்தார்க் காணி' ' சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் ' என்ற வாக்கால் தேற்றம். ' வழங்குவதுள் வீழ்ந்த கண்ணும் பழங்குடி ' என அவர் கூறியதுவும் இவ் உழவர்குடி பற்றியேயாம். குறளுக்கு உரை கண்ட பரிமேலழகர் 'பழங்குடி' என்ற சொல்லுக்கு ' சேர, சோழ, பாண்டியர் என்ருப் போலப் படைப்பு காலந்தொட்டு மேம்பட்டுவரும் குடி ' என்பார். புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயாரிதனர் இவரைக் ' கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்தகுடி ' என்பர். இக்குடியைச் சேர்ந்தவரே சேர, சோழ, பாண்டிய மன்னர் ஆவர். இவரைத் 'தமிழ் கெழு மூவர்' 'தண் தமிழ்க் கிழவர் ' ' வண் புகழ் மூவர் ' எனச் சங்க இலக்கியங்கள் கூறும். இம்மூவரும் ஒரே குடியினரேயாம். இளங்கோ அடிகள் இவரைப் ' பெருநில முழுதாளும் பெருமகன் தலை வைத்த ஒரு தனிக்குடி ' என்று கூறுவார். வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே இவர் தமிழகத்தில் கோலோச்சி வந்தனர் என அறிஞர் கூறுவர்.

இந்த உழவர் குடியினர் வேளாண்மைப் பண்பினல் வேளாளர் எனவும், பின்னர் இடைக்காலச் சோழர் ஆட்சியில் பஞ்சாயத்துப்போன்ற குடும்புகளில் [ஊர்ச் சபைகளில்] அங்கம் வகித்து அவற்றை நடத்தி வந்ததால் வெள்ளாளர் எனவும்

வழங்கலாயினர். ஆற்று வெள்ளத்தை அடக்கி ஆளும் தன்மையினால் வெள்ளாளர் என்ற சிறப்புக்கும் இவர் உரியவர் என்றாலும் அது சாலவும் பொருந்தும் ஆம். இந்த வேளாண் குடியின் வரலாறு பற்றி சுமார் 50, 60 ஆண்டுகளுக்கு முன்பு மறைமலையடிகள் வேளாளர் யாவர்? தமிழர் நாகரிகம், வேளாளர் நாகரிகம் என்ற நூல்களைத் தோற்றுவித்தார். ஆனால் அன்னார் அந்த வேளாண் மரபை இன்று ஊன் உணவு தவிர்த்து வாழும் ஒரு சிறு பிரிவினர் எனப் பிழைபடக் கண்டு இடரற்பட்டுள்ளார், 1977 சூலைத் திங்களில் என்னால் எழுதி வெளியிடப்பெற்ற மூவேந்தர் யார்? என்ற நூலில் பண்டைய வேளாண் மரபை அடையாளம் காட்டியுள்ளேன். எனினும் அதில் இன்றையப் பல்வேறு வேளாளர் பிரிவுகள், அவரது பழக்கவழக்கம் பற்றி நூலின் விரிவை அஞ்சி முழுமையாய் எடுத்துக்கூற இயலவில்லை. இக்குறையை போக்குமுகத்தான் வேளாளர் யார்? என்ற இந்நூலை எழுதியுள்ளேன். நாட்டில் உண்மை தெளிந்து, வேற்றுமை நீங்கி, மக்கள் ஒன்றுபட இந்நூல் துணைபுரியும் என்பது எனது திடமான நம்பிக்கை. தமிழ் மக்கள் இந்நூலை முழுமனதோடு வரவேற்பர் என நம்புகிறேன். நூலில் குறைகள் சில தென்படலாம். அவற்றை அறிஞர் பொறுத்தருள வேண்டுகிறேன்.

நூலை வடிப்பதில் பல்வேறு பிரிவினர் பழக்க வழக்கங்கள் பற்றி நூலில் ஆங்காங்கே எடுத்து இயம்புவது தவிர்க்கமுடியாததொன்றும். ஒரு மரபையும் புண்படுத்தும் நோக்கத்தோடு அவற்றைக் கூறவில்லை என்பதை இங்கு குறிப்பிட விழைகின்றேன்.

இந்நூலைப் படைப்பதற்கு அறிஞர் பலரின் நூல்களிலிருந்து மேற்கோள்கள் பல எடுத்தாண்டிருக்கின்றேன். அந்

நூலாசிரியர்களுக்கும், உரிய பதிப்பகத்தார்களுக்கும் என் நன்றியை உவகையுடன் தெரிவிக்கின்றேன்.

தஞ்சைத் தொன் போஸ்கோ அச்சகத்தார் இந்நூலை மிகவும் குறுகிய காலத்தில் அச்சடித்து உதவியதற்கு அதன் உரிமையாளர்க்கும், அச்சுக்கோர்ப்பாளர்க்கும் மற்றும் நூல் வடிவம்பெறத் துணை நின்ற எல்லா உதவியாளர்க்கும் எனது நன்றி சாலவும் உரித்தாகுக.

எல்லாவற்றிற்கும் மேலாக அறிஞர் பலர் இருந்தும் வரலாற்றுத் துறையிலோ, தமிழ் இலக்கியத்திலோ ஈடுபாடு இல்லாத எனக்கு வேளாண்மாந்தர் பற்றிய உண்மையை உலகுக்கு வெளிப்படுத்தும் பெரும் வாய்ப்பை நல்கிய இறைவனுக்கும், என்னைத் தோற்றுவித்த என் பெற்றோருக்கும் மற்றும் முன்னோருக்கும், உபகாரிகளுக்கும் என்றும் கடன்பாடுடையேன் ஆவன்.

*வாழ்க தமிழ்! வாழ்க தமிழகம்!! வாழிய நற்றமிழர்!!!*

தஞ்சை
4—1—1981

இரா. தேவ ஆசீர்வாதம்.

# பொருளடக்கம்

# முகவுரை

இன்று தமிழகத்தில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட வருள் ஏராளமான சாதிப் பிரிவுகள் இருந்துவரக் காண் கிறோம். அவைகளுள் குறிப்பிடத்தக்கவை பள்ளி, [படை யாச்சி-வன்னியர்] வேளாளர், பறையர், தேவேந்திர குலத் தார், [பள்ளர்] இடையர், சாணர் [நாடார்] கம்மாளர் [கொல் லர், கற்கொல்லர், தச்சர், தட்டார், கன்னர்] கள்ளர், மறவர், செட்டியார், அகம்படியர், செம்படவர், வலையர், [அம்பல காரர்; முத்தரையர், கைக்கோளர் [செங்குந்தர்] சேனைத் தலை வர், குறவர், வேடர், வேட்டுவர் வண்ணார், நாவிதர், [மருத் துவர்] நத்தமர் [மலையமான் சுருதிமான்] பண்டாரம், குயவர், செக்கார் முதலியவை ஆகும். இவைகளில் ஒருசில வகுப்புகள் குறிப்பிட்ட பகுதிகளிலும் பல அனேகமாய் எல்லா மாவட்டங் களிலும் இருந்துவரக் காணலாம்.

இந்த வகுப்புகளில் பல தொழிற்பெயரையும், சில மரபுப் பெயரையும் சுட்டுவதாயுள. தொழிற் பெயர்கள் நாட்டில் நாகரிகம் தோன்றியபோது ஏற்பட்டதெனலாம். ஆனல் மரபுப் பெயர் எப்போது ஏற்பட்டதென்பதுபற்றி ஒருவரும் முறையான ஆராய்ச்சி மேற்கொண்டதாகத் தெரியவில்லை. இடைக்காலத்தில் ஒவ்வொரு சமூகமும் தம் தம் மரபுதான் உயர்ந்ததெனக் காட்ட புராணக் கதைகள் புனைந்துரைக்க லாயின. அண்மைக் காலத்தில் ஒரு சில சமூகங்கள்பற்றி ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்துள்ளன. அமெரிக்க அறிஞர் இராபர்ட், எல். ஹார்ட் கிரேவ் ஜூனியர் தென்னிந்திய நாடார் [Nadars of South India] என்ற நூலும், டாக்டர் S. கதிர்வேல் மறவர் வரலாறு [History of Maravars from 1700 to 1800 AD] என்ற நூலும் இவ்வாசிரியர் தேவேந்திர குலத்தார்பற்றி மூவேந்தர் யார்? என்ற நூலும் எழுதி வெளியிட்டுள்ளனர். கொங்கு நாட்டுக் கவுண்டர், நாட்டுக்கோட்டை செட்டியார், கள்ளர் இன்னும் சில சமூகங்கள்பற்றி நூல்கள் வெளிவந்துள்ளன.

இன்று தமிழகத்திலுள்ள பல்வேறு வகுப்புகளுக்குள் வேளாளரே உயர்ந்தவர் என்ற கருத்து யாவராலும் ஒப்புக்

கொள்ளப்பட்ட ஒன்ரும். மக்கள் எண்ணிக்கையில் இன்றைய வேளாளர் இரண்டாவது இடம் [15 சத விகிதம்] வகிப்பதாக 1891-ஆம் ஆண்டு குடிக் கணக்கிலிருந்து தெரிகிறது. இவருள் 930 உட் பிரிவுகள் உளதாகக் கணக்கெடுத்திருக் கின்றனர். [1]

ஆனால் இவற்றில் பெரும்பாலானவை இடத்துப் பெயராயுள்ளன. இவருள் முக்கியமான உட்பிரிவுகள் கார்காத்த [காரைக்கட்டு] வேளாளர், சோழிய வேளாளர், கொங்கு வேளாளர், தொண்டை மண்டல வேளாளர், துளுவ வேளாளர் ஆகும். நாஞ்சில் நாட்டு வேளாளர், பாண்டிய வேளாளர், வீரக்குடி வேளாளர், நீர்ப்பூசி வேளாளர், நாங் குடி வேளாளர் எனப் பல சிறு பிரிவுகளும் உள.

இவரது பழக்கவழக்கம் பிரிவுக்குப் பிரிவு வேறுபடும். ஒரு சில சைவ, வைணவ சமயங்களைத் தழுவியும், ஒருசில பண் டைய முறைப்படி கிராம தேவதைகளை வழிபட்டும் வரு கின்றன. கொங்கு வேளாளர் ஒரு தனி ரகம். இவர் மற்ற பகுதிவாழ் வேளாளரிடமிருந்து ஏன் தமிழ் மக்களிடமிருந்தே பழக்க வழக்கங்களில் பெரிதும் வேறுபடக் காணலாம். வேளாளரென்போரில் ஊன் உணவு எடுப்பவர், தவிர்ப்பவர் உண்டு, அதேபோன்று வைதீகப் பற்று உள்ளவர், இல்லா தவர் உண்டு. கொங்கு வேளாளர் தவிர்த்து வேறு ஒரு பிரிவுக்கும் தனியாய் குருக்கள், வண்ணார், நாவிதர் இல்லை. தாழ்த்தப்பட்டவர் தவிர்த்து மற்ற மரபினர்களுக்குத் தொழில் செய்யும் வண்ணார், நாவிதர்தான் இவர்களுக்கும் தொழில் செய்கின்றனர். ஒரு சில பிரிவினர்க்குத் தனியாய் பண்டாரம் இருந்தாலும், தெலுங்கு பார்ப்பனக் குருக்களையே நன்மை துன்மைச் சடங்குகளுக்கு அமர்த்தி வருகின்றனர். இறந்த வரைப் பாடை பல்லக்குக்கட்டி இடுகாட்டுக்கு எடுத்துச் செல்வர். பிரேத ஊர்வலத்தின்போது சிலர் தப்பு போடுவ துண்டு. சிலர் சங்கு ஊதுவது, கலம் தட்டுவதோடு சரி. இவர்களுள் பிரேதத்தை எரிப்பவருமுண்டு. அடக்கம் செய் பவருமுண்டு. விவசாயத் தொழிலில் நேரிடையாய் ஈடுபடு பவரும் உண்டு. அவ்வாறு ஈடுபடுவது ஈனம் எனக் கருதி

1 Page 232. Vol. XIII 1891 Madras Census Report— H. A. Stuart].

பிற மரபினரைக்கொண்டு அதை நடத்துபவரும் உண்டு. பலதரப்பட்ட தொழில்களிலும் இவர் ஈடுபட்டு வருவதைக் காணலாம். இத்தகைய வேளாள வர்க்கம் எப்போது எவ் வாறு தோன்றியது ?

ஆங்கிலேயர் ஆட்சியின்போது ஒவ்வொரு வகுப்பு பற்றி யும் குடிக் கணக்கு எடுக்கும்போதெல்லாம் தகவல்கள் சேக ரித்து மாவட்டக் குறிப்புகள் [Dt. Gazetteers and Manuals] தயார் செய்து அவற்றை அரசினரே வெளியிட்டுள்ளனர். இந்தத் தகவல்களை ஆதாரமாய்க் கொண்டு எட்கர் தர்ஸ்டன் என்ற அறிஞர் தென் இந்திய குலங்களும் குடிகளும் [Castes and Tribes of South India] என்ற அரிய நூலை வெளியிட்டுள்ளார். இவற்றில் வேளாளர் பற்றியும், அவரது பிரிவுகள் பழக்கவழக்கங்கள் பற்றியும் தகவல்கள் நிரம்ப அகப் படுகின்றன. ஆனால் பொதுவாய் இவரது தோற்றம்பற்றி அவற்றில் அறிவதற்கில்லை. வேளாளர், வெள்ளாளர் என் ருல் அவற்றின் பொருள் என்ன ? என்றே அறிய முடியாமல் உளது. இம்மரபுபற்றி ஏர் எழுபது, திருக்கை வழக்கம், வேளாள புராணம், வேளாளர் இயல்பு என்ற நூல்கள் தோன்றியுள்ளன. சதக நூல்களிலும், தலபுராணங்களிலும் வேளாளர்பற்றி பேசப்படுகின்றன. வேளாளர்பற்றி எழுந்த நூல்களில் மறைமலையடிகளின் 'வேளாளர் நாகரிகம்' குறிப் பிடத்தக்கது. இந்நூலின் முன்னுரையில் மறைமலையடிகள் கூறுவதாவது : 'முதலாவதாக தமிழருள் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு நாகரிக மேம்பாடுற்று வாழும் வேளாள ரின் தோற்றம், அவரது சமுக அமைப்புபற்றிக் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. கி.மு. 3500க்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களுக்குள்ளேயே பழைமையானதாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் கண்டுள்ள வேளாளர் தொழில், சமுகத் தில் அவர் வகித்த இடம், இவற்றை பார்க்கும்போது, ஒரு காலத்தில் பூமத்தியரேகைப் பகுதிதவிர இதர இடங்களில் வசித்த மக்கள் வேடராகவும், நாடோடி வாழ்க்கையுடையோ ராகவும் அலைந்து திரிந்த காலக்கட்டத்தில், வேளாளரே பயிர்த்தொழில் செய்வதில் தேர்ச்சிபெற்று ஊர்கள், நகரங் கள், வலிமையுள்ள கோட்டைகள் எழுப்பி தங்களுக்குள்

குருக்கள்களையும், அரசர்களையும், வணிகரையும் உண்டாக்கி, கடலில் கலம் செலுத்துவதன்மூலம் இந்தியநாடு முழுவதும் பரவி செழிப்பான ஆற்றோரங்களிலும், கடற்கரைப் பகுதியிலும் வாழலாயினர் !

Maraimalai Adigal says : 'In the first place attention is directed to Velalas the civilized class of the Tamils and to their origin and organization. From references made to them their occupation and social rank in Tolkappiam the most ancient and existing Tamil work in all its entirety the age of which goes back to 3500 B. C. it is shown that at a time when all the people except those who lived all along the equatorial regions were leading the life of hunters or nomads these Vellalas attained perfecttion in the art of agriculture, built towns and strong forts, had been priests and kings and traders and by means of navigation occupied the whole of India settling in the rich and fertile countries along the coasts and river side's [1]

மிகவும் அண்மையில் கமலாகணேசன் என்பவர் வேளாளர் பற்றி சமுதாய வரலாற்றுக் கண்ணோட்டம் [Vellalas A social Historical Perspective] என்ற தலைப்பில் ஒரு நீண்ட கட்டுரை வெளியிட்டுள்ளார். இதன் முகவுரையில் அவர் கூறுவதாவது: 'வேளாளரின் குறிப்பிடத்தக்க அம்சம் அவர் பல நூற்றாண்டு களாக பெரும் நிலப்பிரபுக்களாகவும், விவசாயிகளாகவும் இருந்து வருவதேயாம். இந்தக் கட்டுரை வேளாளர் சங்க காலத்தில் வேளிராகவும், முடிசூடிய வேந்தரின் கீழ் அடங்கிய குறுநில மன்னராகவும், அரசு அலுவலராகவும் பெரும் நிலப் பிரபுக்களாகவும் இருந்தனர் என நிருபிக்க முயற்சிக்கின்றது [2]

The outstanding feature of the caste [Vellala] is that the members are large scale landowners and cultivators whose ownership goes several centuries back in time. This paper attempts to outline the history of the Vellalas as independant chiefs called velirs in the Sangam period

1 Page 12 Preface Velalar Nagarikam Maraimalaiadigal.
2 Page 47 Tamil studies Part I Editor. R. Nagasamy.

as feudatories to the crowned king as functionaries in royal administration and as the top most crust of the land owning gentry. [1]

மறைமலையடிகளும் கமலாகணேசனும் வேளாளர் தோற்றம்பற்றி முறையான ஆராய்ச்சி மேற்கொள்ளாமல் இன்றைய வேளாளரே தமிழக நாகரிகத்திற்கும் மேம்பாட்டிற்கும் காரணமென வலிந்து கூறுவதாகவே நாம் கருத வேண்டியுள்ளது. ஆக இந்த இரு நூல்களும் வேளாளர் தோற்றம்பற்றி அறிய துணை செய்யவில்லை என்பது வெள்ளிடைமலை. இவ்வாசிரியரின் மூவேந்தர் யார் ? என்ற நூலில் வேளாளர் (வெள்ளாளர்) என்ற மரபுப் பெயர் தாங்கிய வகுப்பு ஆரம்பக் கட்டத்தில் தமிழகத்தில் இல்லை எனவும், ஆற்றோரமாகிய மருத நிலப் பகுதியில் முதன்முதல் குடியேறி நிலத்தை வெட்டிக் கொத்தி சீர்படுத்தி வயல்களாக்கி ஆற்றுநீரின் உதவியால் நெல், கரும்பு, வாழை, மஞ்சள், பருத்தி, முதலிய பொருட்களை உற்பத்தி செய்து ஊர்கள், நகரங்கள் அமைத்து சேர, சோழ, பாண்டிய அரசுகளைத் தோற்றுவித்த மள்ளர் (மல்லர்) குடியினர் சங்க காலத்திற்குப்பின்னர் அவரது கொடைப் பண்பினால் வேளாளர் எனவும், இடைக்கால சோழர் ஆட்சியின் போது வெள்ளாளர் எனவும் சிறப்பிக்கப்பட்டதாகவும், நாட்டில் தோன்றிய வைதீகக் கோட்பாடுகளின் காரணமாய் போலிக் குல உயர்வு நிமித்தம் பலதரப்பட்ட மக்கள் பிரிவினரும் தம்மை வேளாளர், வெள்ளாளர் என வழங்க முற்பட்டதாகவும் கண்டுளது. அதில் இன்றைய வேளாளர் தோற்றம், அவரது பிரிவுகள், மற்றும் பழக்க வழக்கங்கள்பற்றி விபரமாய் எடுத்துரைக்கப்படவில்லை. ஆதலால் வேளாளர்பற்றி விரிவான ஆராய்ச்சி மேற்கொள்ளும் நிலை எழலானது. சங்க இலக்கியங்கள், பதினென்கீழ்க்கணக்கு மற்றும் இடைக்கால, பிற்கால இலக்கியங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், மேனாட்டறிஞர் வெளியிட்டுள்ள கருத்துக்கள், மாவட்டக் குறிப்புகள், நாட்டில் கர்ண பரம்பரையாய் வழங்கிவரும் பழமொழிகள், சமூகப் பழக்கவழக்கங்கள் துணைகொண்டு இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

---

1 Page 47 Tamil studies Part I Editor. R. Nagasamy.

# வேளாளர் வந்தேறிகளா ?

வேளாளர் திராவிடர் எனவும், அவர் தமிழகத்தில் இடைக் காலத்தில் குடியேறியவர் எனவும் சில அறிஞர் கூறுவர். ஒரு சாரார் சோழநாடு வேளாளர் பூர்வீகம் எனவும், அங்கிருந்து தொண்டைநாடு, பாண்டியநாடு இவைகளில் குடியேறினர் எனவும் கூறுவர். பிரிதொருசாரார் அவர் கங்கை சமவெளியிலிருந்து இங்கு குடியேறினர் எனவும் அதனால் கங்கை குலத்தவர் என வழங்கி வருவதாகவும் கூறுவர். ஆனால் கொங்கு நாட்டிலுள்ள வேளாளருள் சிலர் தொண்டை நாட்டிலிருந்தும், சிலர் கொங்காணப் பகுதியிலிருந்தும் குடியேறினதாகவும், துளு நாட்டிலிருந்து ஒருசிலர் தொண்டைநாட்டில் குடியேறினதாகவும், ஆகப் பலரும் பலவிதமாய்க் கூறுவர் முதலில் பாண்டிய நாட்டில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் வேளாளர் குடியேற்றம்பற்றிப் பார்ப்போம்.

## பாண்டிய நாட்டில் வேளாளர் குடியேற்றம்

நெல்சன் கூறுவதாவது : "செவிவழிச் செய்தியின்படி வேளாளர் பாண்டிய நாட்டில் குடியேற்றப்பட்டவர் ஆவர். இவரது குடியேற்றம் தொண்டை மண்டலத்தை அதோந்தைச் சக்கரவர்த்தி வென்றதற்குச் சற்று முன்னோ, பின்னோ நிகழ்ந்திருக்கலாம். அக்குடியேற்றம் பெருமளவில் நடைபெற்றிருப்பது சாத்தியமே. பாண்டியன் உக்கிரப்பெருவழுதி நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர் குடும்பங்களை சோழநாட்டின் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து ஏழு பிரிவாக அழைத்து வந்து பாண்டிய நாட்டில் குடியேற்றினான். அவர்கள் நஞ்சை, புஞ்சை நிலங்களில் பயிர்த்தொழில் செய்தனர்.[1]

Nelson says :

" Tradition uniformally declares them [vellalas] to be descendants of foreign immigrants who were introduced by the Pandyas and it appears to be extremely probable

---

1 Page 27—28 Madurai Manual. Part II. J H Nelson

that they are and that an extensive vellala immigration took place at a rather remote period perhaps a little before or after the colonization of Tondai Mandalam by Adondhai Chakravarthi. Ugra Pandya who as will be shown hereafter as one of the earliest and most famous of the pandya Kings sent for vellalars from the neighbourhood of the town of Kaveripumpattinam to people and cultivate his country which was then in a wild and poor state. A body of 48000 vellalas accepted his invitation came to the Madurai country in Seven divisions and cultivated both irrigated and unirrigated lands paying a fixed tax to the king of one sixth of the produce raised by them. [1]

நெல்சன் மேலும் கூறுவதாவது: 'வேளாளர் சிவமதத்தில் ஈடுபாடுடையவராய் இருப்பதற்கு காரணம் அவர்கள் குலசேகர பாண்டியன் காலத்தில் சிவகாமசித்தாந்தம் அல்லது சிவமதத்தை நிறுவுவதற்காக வட நாட்டிலுள்ள காசியிலிருந்து வந்தவர் என்பதாக ஒரு புதிரான செவி வழிச் செய்தி நாட்டில் நிலவி வருகின்றது. ஒருவேளை இவர் மாணிக்கவாசகரால் முதன் முதலில் சிவமதத்திற்கு ஈர்க்கப்பட அதனிமித்தம் அவரிடம் பிரமாணிக்கமும் பற்றுதலும் ஏற்பட்டு அவரைப் பின்பற்றி மதுரை போந்து குடியேறினர் போலும் [2]

Nelson further adds:

'In connection with the devotedness of the vellalars to the Siva faith, there is a curious tradition to the effect that they came to Madurai from Benares in the reign of Kulasehara Pandya with the sole object of establishing there the Sivagana Sidhantha or Saiva rite of faith. Perhaps they were among the earliest and most faithful converts of Manikavasagar who came to Madurai shortly after their conversion.' [2]

---

1 Page 27—28 Madurai Manual. Part II J H Nelson

2 Page 32 Madurai Manuel Par t II. J HNelson

அடுத்து டாக்டர். ஆர். கால்டுவெல் கூறுவதைக் காண்போம்: 'நெல்லை மாவட்டத்தின் பூர்வீகக் குடிகள் பள்ளர், பறையர் ஆவர். ஆரம்ப கட்டத்தில் இவர் வேட்டையாடியும், புஞ்சைப்பயிர் விளைவித்தும் வாழ்க்கை நடத்தினர். வெள்ளாளர் குடியேறின பிறகுதான் நெற்பயிர் தோன்றியிருக்கவேண்டும். நெல்சாகுபடியானது நீரின்றி விளைவிக்க முடியாததொன்ருதலால், நீரைக் கட்டுபடுத்தி ஆளக்கூடிய வெள்ளாளரால்தான் அது சாத்தியமாயிருக்கும் என்பதற்கு வெள்ளம், வெள்ளாளன் என்ற இரு சொற்களின் வேர்ச்சொல் ஒன்ருயிருப்பது சான்ருகும்''[1]

Dr. R. Caldwell says:

'Parayan means beating of drum or a drummer'. Pallan appears to mean a man who works in a low lying land and both these names connect them with somewhat a developed state of society. If they were really the oldest tribes that settled in the district, they must have subsisted mainly by the chase like the rude tribes commonly called vettuvas and partly by the cultivation of dry grains. The cultivation of rice by means of irrigation would seem from etymological reasons to have been specially of the vellalas vel-the root of vellala seems to be identical with vel the root of vellam—water—used for irrigation.[1]

கால்டுவெல் நெல்லைமாவட்டத்திலுள்ள வேளாளர் புதிதாய் குடியேறியவர் என்றும், அவர் குடியேறின பிறகுதான் நெற்பயிர் தோற்றுவிக்கப்பட்டதென்றும் கூறுகிருர். நெல்சன் பாண்டிய நாட்டிலுள்ள காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து பாண்டியன் உக்கிரப் பெருவழுதியால் குடியேற்றப்பட்டவர் என்று செவிவழிச் செய்தி நிலவுவதாகக் கூறுகிருர். நெல்சன் தமது கூற்றுக்கு ஆதாரமாக திருப்பத்தூர் நியாயதிபதி ஒருவர் கொடுத்ததாகக் கூறப்படும் கீழே காணும் தகவல்களை எடுத்தாண்டுளார். சோழ நாட்டிலிருந்து குடியேறிய வேளாளர்

1 Page 4 History of Tinnelvely Dr. R. Caldwell

அங்கு வாழுங்காலை சிலகாலம் சென்றபின் சோழநாட்டின் வல்லம் பகுதியிலிருந்து விரட்டப்பட்ட கள்ளரும் வல்லம்பரும் தெற்கு நோக்கி சென்று, வேளாளர் நாட்டில் புகுந்து அவருடன் பொருதி வெற்றி கண்டு, அவரை விரட்டிவிட்டு அப்பகுதியில் குடியேறினர். அவ்வாறு விரட்டப்பட்ட வேளாளரில் முதற் கூற்றத்தைச் சேர்ந்தவரில் ஒருசாரார் திருப்பத்தூரிலும், இரண்டாவது கூற்றத்தைச் சேர்ந்தவரில் ஒருசாரார் திருவாடானைப்பகுதியிலும், மூன்றாவது கூற்றத்தைச் சேர்ந்தவரில் ஒருசாரார் சீவைகுண்டத்திலும் குடியேறினர். இக்குடியேற்றம்பற்றி ஒரு பழம்பாடல் கூறுவதாவது :

'அன்னமிடும் உக்கிரப் பெருவழுதி அம்புவியை
ஆளும் நாளில், அரிதான நற்குடி நாற்பத்தெண்ணாயிரம்
ஆராய்ந்து தேடிவைத்த நன்னிலந்தன்னில்
ஏழு கூற்றம் பதினெட்டு நாடு வெற்றிந்தி வாழ்கின்ற
திருமிழலைக் கூற்றம், மிருந்தமிழ்த்தார்க்கூற்றம்
பிந்தியான் அருப்பூர்க்கூற்றம் பரமாளத் திருக்கானைக்கா
கூற்றம்.
முத்தமிழ்சேர் தொழுவூர்கூற்றம் முதன்மையான கொடும்
பாளூர்க்கூற்றம்
எத்திசையான் இளையான் குடிக்கூற்றம்'

இங்கு கூறப்பட்டுள்ள ஏழு கூற்றங்களும் பதினெண் நாடுகளும் எவை? எவை? மிழலைக் கூற்றம் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. இதன் தலைவன் வேள் எவ்வி ஆவான். வேள் பாரி இவனது உறவினன் என்பர். கொடும்பாளூர் என்பது இடைக்கால சோழர் ஆட்சியின் படைத் தலைவரில் ஒருவர் இருந்த இடம். இதிலிருந்த தலைவர் கொடும்பாளூர் வேள் என வழங்கியதாகக் கூறுவர். பாண்டிய நாட்டின் வேளாள நாட்டிலிருந்து துரத்தப்பட்டவர் திருவாடானைப் பகுதியில் காணப்படும் அரும்புகோத்து வேளாளர் எனவும், சிவைகுண்டத்தில் குடியேறியவர் கோட்டைப் பிள்ளைமார் என வழங்கி வருபவர் எனவும் கூற ஒரு சாரார் முன் வரலாம். [இப்பிரிவுகள்பற்றி பின்னர் பார்ப்போம்.] இவர்கள் தவிர்த்து வேறு கூற்றத்தினர் பற்றிய விபரம் யாது? என்பதுபற்றி

அறிவதற்கில்லை. நிற்க, பாண்டியன் உக்கிரப் பெருவழுதியையும், வேளாளன் எனப்படும் ஏகவீரன் என்ற ஒருவனையும் தொடர்புபடுத்தி திருவிளையாடற் புராணத்தில் ஒரு செய்தி காணப்படுகிறது. அச்செய்தியாவது : 'நாட்டிலே மழையின்றி பஞ்சம் ஏற்பட சேர சோழ பாண்டிய மன்னர் மூவரும் தேவலோகத்திலிருந்து தேவேந்திரனிடம் மழை வரம் வேண்டச் சென்றனர். தேவேந்திரன் மூவேந்தரையும் தன்னை நாடி வந்த காரணம் பற்றி வினவ, சேரனும், சோழனும் தங்கள் தங்கள் நாடுகளில் மழையின்மையால் பஞ்ச நிலைமை ஏற்பட்டுள்ளதாகவும், அதைப் போக்க மழை வரம் வேண்டுமெனவும் விண்ணப்பித்துக்கொண்டனர். அவரது வேண்டுகோளுக்கிணங்கி தேவேந்திரன் அவ்விருவருக்கும் மழை வரம் அருளினான். ஆனால் பாண்டியன் தேவேந்திரனை மதியாது அவனுக்குச் சமமாக அவனது அருகில் சிம்மாசனத்தில் அமர்ந்தான். பாண்டியனது கர்வத்தைக் கண்ட தேவேந்திரன் அவன்மீது மனதிற்குள் வெறுப்படைந்தான். எனினும் அதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளாமல் பாண்டியன் தாங்கமுடியாதிருக்கும்படியாக அவனது கழுத்தில் ஒரு பெரிய முத்து மாலையை அணிவித்தான். ஆனால் தேவேந்திரன் எதிர்பார்த்ததற்கு மாருகப் பாண்டியன் அந்த ஆரத்தைத் தாங்கிக்கொண்டான். சேரனும் சோழனும் மழை வரத்துடன் தங்கள் தங்கள் நாடுகளுக்குத் திரும்பினர். அவரது நாடுகளில் மழை பொழிந்து சுபிட்சம் ஏற்பட்டது. பாண்டியன் மழை வரம் பெருமல் நாட்டிற்கு கோபத்துடன் திரும்பி வந்தான். அதனால் அவனது நாட்டில் பழைய பஞ்ச நிலையே நீடித்தது.

ஒரு நாள் பாண்டியன் பொதியமலை அருகில் வேட்டையாடிக் கொண்டிருந்தான். அது சமயம் புஷ்பகலாவிருத்தம், சங்கரா நிமித்தம், துரோணர், நான்முகி என்ற நான்கு மேகங்களும் பொதிய மலையிலே தவழ்ந்து மேய்ந்து கொண்டிருந்தன. பாண்டியன் அவற்றைப் பிடித்துக் கட்டி விலங்கிட்டுக் கொண்டுவந்து சிறையில் அடைத்தான். இதையறிந்த தேவேந்திரன் பாண்டியன்மீது வெகுண்டு, தனது படைகளோடு அவனுடன் போர் தொடுத்தான். ஆனால் அவன்

பாண்டியனை வெல்ல முடியாமல் தோல்வியே கண்டான். தான் வைத்திருந்த வச்சிராயுதத்தைப் பாண்டியன் செலுத்திய வளை தூக்கி எறிந்துவிட்டதுடன், அவனது முடியையும் கீழே வீழ்த்திச் சிதைத்துவிட்டது. அதனால் தேவேந்திரன் சோர்வுற்று தேவலோகம் திரும்பி பாண்டியன் மேகங்களை விடுதலை செய்தால் மழைவரம் அருளுவதாக அவனிடம் தூது அனுப்பினான். ஆனால் பாண்டியன் தேவேந்திரனுடைய வார்த்தையை நம்பவில்லை. தேவேந்திரனின் நண்பனான ஏகவீரன் மேகங்களுக்குப் பதில் தான் பிணையாய் இருப்பதாகப் பாண்டியனிடம் உறுதிமொழி அளித்தான். ஏகவீரன் உறுதிமொழியைப் பாண்டியன் ஏற்றுக்கொண்டு மேகங்களைச் சிறையினின்று விடுதலை செய்தான். மேகங்கள் மேலெழுந்து சென்றன. அன்றிலிருந்து பாண்டிய நாட்டில் மழை பொழிய சுபிட்சம் ஏற்படலானது [1]

பாண்டிய நாட்டில் வேளாண்மைகாண மக்கள் குடியேற்றம் பற்றி கரிவலம் வந்த நல்லூர், கல்வெட்டு கூறும் செய்தியாவது: 'தேவேந்திரக் குடும்பன பாலாத்துப்படி முன் எடுத்த துவாராயுகத்தில் உக்கிரப் பெருவழுதியும், சோழனும் சேரனும் உலகம் வறுமைப்பட்டு இருக்கிற காலத்தில், தேவேந்திரன் பக்கல் மழை வரம் கேட்க போனவிடத்தில், பகவானும் மனம் மகிழ்ந்து இரும் என்ன, சோழனும் சேரனும் வணங்கி இருக்கப் பாண்டியன் தேவேந்திரனோடேகூட இருக்க, தேவேந்திரனும் வரிசை செய்தாற்போலே கவடு நினைக்க பாண்டியனும் கோபித்து எழுந்து தேவ கன்னிகைகள் மக்கள் நாலு குடும்பத்தாரைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு செந்நெல் விதையும், கன்னல் விதையும், கதலி விதையும், பனை விதையும் முதலான பலவித்தும் ஒரு ரிஷபமும் ஒரு சாவியும் கொண்டு பூமியில் வந்தான். நால்வரில் முதல்வனுக்கு தேவேந்திரக் குடும்பப் பட்டமும் கட்டி மூன்று பேருக்கும் வாரியன், அக்கசாலை, [இளந்தாரியன்] என்ற வரிசைப்பட்டமும் கட்டி ஒரு நாளையில் பன்னீராயிரம் கிணறு வெட்டி வேளாண்மை கண்டபடியினாலே ராஜாவும் மனம் மகிழ்ந்து வெள்ளையானையும்,பகல்பந்தம், பாவாடை இரட்டை சிலம்பும்

1 திருவிளையாடற்புராணம். இந்திரன் முடி மேல் வளை எறிந்த கதை).

இரட்டைக் கொடுக்கும், நன்மைக்குப் பதினாறுகால் பந்தக்காலும், துன்மைக்கு இரண்டு தேரும், பஞ்சவன் விருதும், பதினெட்டு மேளமும் கட்டளையிட்டு நடக்கிற காலத்தில் பறையர் தங்களுக்கு இந்த வரிசை உண்டென்று நடப்பிவித்தார்கள். ஆனபடியினாலே ஐந்து சாதிக்கும் பிள்ளை என வேந்தலிலிருக்கும் அனுமக்கொடி அடைஞ்சானும் [வாகைக்குளம்] குட்டிக் குடும்பனும், அல்லகர்த்தா குடும்பனும் கூட்டிக்கொண்டு சமூகம் ஏறி விண்ணப்பித்துக் கொள்ள, ஆதிபூர்வராஜாக்கள் கொடுத்த பட்டயம் பார்த்துப் பறையர்களுக்கு உண்டான வரிசை நன்மைக்கு மூன்று கால் பந்தலும், இருசிலம்பும் [சீவிலிபுத்தூர் கல்வெட்டுப்படி ஒரு சிலம்புமே காணப்படுகிறது] ஒரு கொடுக்கும், ஒத்தமாராப்பும், ஒருபந்தமும், கீழ்ப் பாவாடையும், மஞ்சியில் தண்டியக் கொம்பில்லாத வீடும் துன்மைக்குக் கட்டணமும் பட்டையப்படிக்குக் கட்டளையிட்டோம். குடும்பிகளுக்குக் குதிரைக் குடையும் யிட்டு, இந்த இரண்டு கோட்டை விதைப்பாடும் கொடுத்து இந்த வரிசைப்பிரகாரம் கட்டளை இடுவித்தோம். இதற்கு அதிகம் பண்ணினவர்கள் கங்கைக் கரையில் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்களாகவும் [1] சீவிலிபுத்தூர் கல்வெட்டும் இதற்கு ஆதாரமாயுள்ளது.[2] ஆகப்பாண்டியன் உக்கிரப் பெருவழுதி பாண்டியநாட்டில் சோழ நாட்டின் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து நாற்பத்தொண்ணாயிரம் வேளாளரை அழைத்து வந்து குடியேற்றியதாக பழம்பாடல் கூறும் செய்தியையும், தேவலோகத்திலிருந்து தேவ கன்னியின் புத்திரராகிய தேவேந்திர குலத்தாரை அழைத்துவந்து வேளாண்மை கண்டதாக கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுக்கள் கூறும் செய்தியையும் கண்டோம். கால்டுவெல் வேளாளர் குடியேறிய பின்தான் தமிழகத்தில் நெல் சாகுபடி தோன்றியதாகக் கூறுகிறார். ஆனால் தேவேந்திர குலத்தார் என வழங்கும் பள்ளர் சமூகம் பெரும்பாலும் நெற்பயிர் சாகுபடியில் தம்மை முழுமையும் ஈடுபடுத்தி வருவது நாம் அறிந்ததே. உக்கிரப் பெருவழுதியுடன் இவர் தொடர்புடையதாகக் கல்வெட்டுகள் சான்றுபகர்கின்றன

1 ARE 432/1914. தென் இந்திய கோயில் கல் வெட்டுகள்
2 ARE 588/1926. பாகம்11 சாசனம் எண் 863 D 3226

எனினும் இக்கால வேளாளரில் ஒரு சாரார் தம்மை அம்மன்ன னுடன் தொடர்புடையவர் என்பதற்கு பழம் பாடலையும், திரு விளையாடற் புராணத்தையும் செவிவழிச் செய்தியையும் ஆதா ரம் காட்டுவர். ஆனால் இவற்றில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. அடுத்து தொண்டைமண்டலக் குடியேற்றம் பற்றிப் பார்ப்போம்.

## தொண்டை மண்டலத்தில் வேளாளர் குடியேற்றம்

வி. கனகசபை பிள்ளை கூறுவதாவது: 'சோழன் கரிகாலன் தொண்டை மண்டலத்திலுள்ள அருவாளரை வென்று, அப்பகுதியை வேளாளர் படைத்தலைவர்களுக்குப் பகிர்ந்தளித்தான். இந்தலைவர்களின் வழிவந்தோரில் சிலர் ஆங்கிலேயர் ஆட்சியில் சமீன்தார்களாய் இருந்தனர் [செங்கற் பட்டு மாவட்டம் செய்யாறு சூணம்பட்டு சமீன்தார்கள் இவர் களில் குறிப்பிடத்தக்கவர்கள்]. வடுகம் அல்லது ஆந்திர நாட்டை வென்றவர் வேளம்மா என வழங்கினர். அங்குள்ள பெரிய சமீன்தார்கள் வேளம்மா வகுப்பைச் சேர்ந்தவர். கர்நாடக நாட்டில் வெள்ளாளர், பெல்லாளர் அரச மரபைத் தோற்றுவித்துப் பல நூற்றாண்டுகள் அங்கு ஆண்டனர். வேளாளர் கங்கை குலம் அல்லது கங்கை வம்சம் என வழங்கி வருகின்றனர். பிளினி, பெட்டோம்லி போன்றோர் குறிப் பிட்டதுபோல், கங்கை சமவெளிப் பகுதியில் ஆட்சிபுரிந்த செல்வாக்கும், பலமும் வாய்ந்த கங்கைவீடு அரசமரபினர் வேளாளரின் முன்னோரே.[1]

ஸ்டூவர்ட் கூறுவதாவது: 'சோழர் காலத்தில் தொண்டை மண்டலம் 1900 ஊர்களைக் கொண்ட 75 நாடுகளையும், 24 கூற்றங்களையும் கொண்டதாய் இருந்தது. இந்த 24 கூற்றங் களில் 14 கூற்றங்கள் தற்போதுள்ள செங்கற்பட்டு மாவட்டத் தினுள் அடக்கம். தொண்டை மண்டலத்தில் 60,000 மக்கள் கொண்ட 12,000 குடும்பங்கள் குடியேறினதில் உத்தேசமாய் 35,000 மக்கள் கொண்ட 7,000 குடும்பங்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் தங்கினர். இவரில் கொண்டைகட்டி வேளாளர்

1. 1800 ஆண்டுகளுக்கு முன்பு. வி. கனகசபை பிள்ளை.

அதோந்தைச்சக்கரவர்த்தியால் குடியேற்றப்பட்டவர். சோழியர் சோழநாட்டிலிருந்து அதோந்தைச் சக்கரவர்த்தியுடன் வந்தவர். துளுவ வேளாளர் துளுநாட்டிலிருந்து வந்தவர்.[1]

(The country of Tondaimandalam was in Chola times divided into 24 Kottams which were subdivided into 75 Nadus or districts containing 1900 townships. Of these Kottams 14 fell within the limits of the present Chengalpat district and it has been calculated that out of 12,000 Vellala families containing 60,000 souls which was originally settled in these 7,000 families or 35,000 souls was the proportion which Colonized Chengalpat Kondaikattus are said to have been settled by Adondhai Chakravarthi when he conquered Tondaimandalam, Cholia Vellalas are those who came with Adondhai Chakravarthi when he conquered Tondaimandalam and Tuluva Vellalas are those who were imported from Tuluva Country.)[1]

கே. வி. சுப்ரமணிய அய்யர் கூறுவதாவது: 'சோழன் கரிகாலன் கங்கைப் பகுதியிலிருந்து சூத்திரக் குடும்பங்களை அழைத்து வந்து தொண்டை நாட்டின் 24 கூற்றங்களில் குடி அமர்த்தி அவர்களுக்கு பெரும் சன்மானங்களை வழங்கினான். இதற்கு ஆதாரமாக தொண்டைமண்டலச் சதகம் 97-வது செய்யுளில் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. அவர் கங்கை சமவெளிப் பகுதியிலிருந்து குடியேறியதால் கங்கை குலம் என வழங்குகின்றனர்[2]

பாண்டிய நாட்டில் நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர் குடியினர் குடியேற்றம்பற்றிப் பழம் பாடல் ஒன்று நிலவுவது போன்று தொண்டைநாட்டிலும் நாற்பத்தெண்ணாயிரம் நற்குடியினர் குடியேற்றப்பட்டதாக பெரிய புராண ஆசிரியராகிய சேக்கிழார் புராணத்தில் அடியிற்கண்ட ஒரு செய்யுள் (12) காணப்படுகின்றது.

1 Page 31.Chengnlpat District Manueal. Stewart 1879

2 Historical Sketches of Ancient Dekkan.
K. V. Subramania Ayyar.

'நாடெங்கும் சோழன் முனந்தெரிந்தே ஏற்றும்
நற்குடி நாற்பத்தெண்ணாயிரத்து வந்த கூடல் கிழான்
புரிசைக்கிழான், குழவுசீர் வெண்குளப்பாக்கிழான்
வரிசைக்குளத்துழான் முன்நெடுபுகழாரிவருஞ்
சிறந்துவாழச் சேக்கிழார்குடியிலிந்தத் தேசம் உய்ய
பாடல்புரி அருண்மொழித் தேவரும் பினந்தம்
பாலருயவரும் வந்துதித்தார்'

சேக்கிழார் புராண ஆசிரியர் உமாபதி சிவாச்சாரி ஆவர். இவர் கி. பி, 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பர். இவர் கூற்றுப்படி சேக்கிழார் தொண்டைமண்டலத்தில் குடியேற்றப்பட்ட நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் வேளாளரைச் சேர்ந்தவர். இச்செய்யுளில் கண்டுள்ள சோழன் கரிகாலன் கி. பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்றே கூறுவர். அம்மன்னன் காலந்தொட்டு நாலஞ்சாதி வேளாளர் சில உரிமைகளை அனுபவித்து வந்ததாக விசயநகர ஆட்சி காலமாகிய 1574-ஆம் ஆண்டுக்குரியதாக்க கருதப்படும் ஒரு செப்பேடு திருவண்ணாமலைமடத்திலிருந்து கிடைத்ததாகக் கூறுவர்.[1] கி. பி. 18, அல்லது 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் தொண்டை மண்டல சதகத்தில் நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர் குடியினர் குடியேற்றப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. இங்கு குறிப்பிடும் நாற்பத்தெண்ணாயிரம் குடியினர் இன்று தொண்டை மண்டலப் பகுதியில் காணப்படும் கொண்டைகட்டி வேளாளர் எனப் பலரும் கூறுவர். கங்கை குலம் என்று உரிமை பாராட்டுபவரும் இவரேயாவர். செய்யாறு, சூணாம்பட்டு சமீன்தார்களும் இம்மரபைச் சேர்ந்தவரே என்பர். கொங்கு நாட்டிலும் நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர் குடியினர் குடியேற்றப்பட்டதாக ஒரு செய்தி கொங்கு மண்டல சதகத்தில் காணப்படுவதால் இந்த நாற்பத்தெண்ணாயிரம் எண்ணிக்கைபற்றி தீர ஆராயவேண்டியுள்ளது. அதேபோன்று கங்கை குலம்பற்றியும் ஆம், நிற்க, ஈண்டு

1 (தென் இந்தியக் கோயிற் கல்வெட்டுகள் பாகம் III-R 336)

தொண்டை நாட்டில் சோழன் கரிகாலனால் குடியேற்றப்பட்ட தாகக் கூறப்படும் மரபினர் யார்? என்பதுபற்றி அறிய முயல் வோம். சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப் படையில் தொண்டைமண்டலத்தில் நடைபெற்ற குடியேற்றம் பற்றி செய்திகள் இல்லாமல் இல்லை. இக்குடியேற்றம்பற்றி எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதைக் கீழே காண்போம்.

'பண்டை காலத்தில் நகரம் அல்லது ஊரின் பல்வேறு பிரிவினரும் எவ்வாறு தனித்தனியாய் வாழ்ந்து வந்தனர் என்பதுபற்றி பெரும்பாணாற்றுப்படையில் சித்திரிக்கப்பட் டுள்ள காஞ்சிமா நகரத்தை உற்று நோக்குவோம். இந் நகரத்தின் உட்பகுதியில் பார்ப்பனர் குடியிருப்பு இருந்தது. இவற்றைச் சூழ்ந்து மள்ளர் அல்லது பள்ளர் மற்றும் கள் வினைஞர் தெருக்கள் இருந்தன. இவற்றிற்கு அப்பால் வெகு தூரத்தில் ஒரு கோடியில் இடையரின் பள்ளியும் அதற்கு அப் பால் ஒதுக்குப்புறமாய் எயினர் மற்றும் அவரது தலைவர்களது குடியிருப்புகளுமாகிய (எயினர் சேரி) பறைச்சேரிகளும் இருந் தன. மள்ளர் தெருக்களை ஒட்டி திருவெட்கா கோயிலும், மன் னன் இளந்திரையன் அரண்மனையும் காட்சியளித்தன.'[1]

M. Srinivasa Ayyangar says :

' But by way of introduction, it is highly desirable to present before the readers a description of an ancient town or village in which the regional classification of the tribes explained above is clearly discernible. We shall first take the city of Kanchipuram as described in the Perumpanattup-padai—a Tamil work of the 3rd or 4th century A D. In the heart of the town were the Brahmin quarters where neither the dog nor the fowl could be seen. They were flanked on the one side by the fishermen (வலைஞர்) street and on the other by those of traders (வணிகர்) and these were surrounded by the cheris of Mallar or Pallar (உழவர்) and the toddy drawers (கள்ளடு மகளிர்). Then far removed

1. Page 76 Tamil studies M. Srinivasa Ayyangar.

from them were situated at one extremity of the city the Pallis of Idayars and beyond them lay the isolated Paracheri of the Eyinars and their chiefs. Next to the Mallar [உழவர்] street were the temples of Tiruvekka and the Palace of the King Ilanthirayan [1]

பெரும்பாணாற்றுப் படையின்படி தொண்டை நாட்டில் சோழ மன்னரால் குடியேற்றப்பட்டவர் மள்ளர் அல்லது பள்ளர் என எம். சீனிவாச அய்யங்கார் கூறுகிறார். இந்த இலக்கியத்தில் தொண்டைமண்டலப் பகுதியில் மல்லர் பேரூர்கள், [செ. 254 வரி] மல்லர் மன்றம் [செ. வரி 43] இருந்ததாகக் கண்டுளது. இதில் வேளாளர் குடியேற்றப்பட்டதாக ஒரு இடத்திலும் செய்தி இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. சேக்கிழார் இயற்றிய திருக்குறிப்புத் தொண்டர் புராணத்திலும் தொண்டை மண்டலத்தில் மல்லர் [மள்ளர்] மூதூர்கள் இருந்ததாக அடியிற்காணும் செய்யுள் செப்புவதை அறிக.

'நீடுதண்பணை உடுத்த நின் மருங்கின், நெல்லின்
கூடு துன்றிய இருக்கைய விருந்தெதிர் கொள்ளும்
பீடுதங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கும்
மாடம் ஓங்கிய மருகின் மல்லர், மூதூர்கள்.' [செ. 28]

'பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய் போல்
மள்ளர் வேணி லின் மணல்திடர் பிசைந்து கைவருட
வெள்ள நீலிரு மருங்கு கால் வழி மிதந்தேறிப்
பள்ள நீள் வயல் பருமடை உடைப்பது பாலி' [செ. 22]

ஆக சங்க காலத்தில் தொண்டைநாட்டில் மள்ளர் குடியிருந்ததாகப் பெரும்பாணாற்றுப்படை கூறுவதையும், பின்னர் பல்லவர் காலத்திலும் அந்த மள்ளர் குடியிருந்தனர் என திருக்குறிப்புத் தொண்டர் புராணம் கூறுவதையும் கண்டோம். சேக்கிழார் பெரிய புராணத்தில் தொண்டை நாட்டில் வேளாளர் குடியேற்றம் நடைபெற்றதென்பதற்குச் சான்று இல்லை.

---

*1 Page 76. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

இச்சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்தவன் என்பர். இக்காலத்தில் தொண்டை மண்டலத்தில் தமிழகத்திற்கு வெளியேயிருந்து வேளாளர் குடியேற்றப் பட்டனர் எனில், அவரது மொழி வேறுபட்டிருக்கவேண்டும் ஆனல் அது அவ்விதம் இருப்பதைக் காணேம். ஆதலால் வெளிநாட்டிலிருந்து இடைக்காலத்தில் வேளாளர் தொண்டை நாட்டில் ஏன் தமிழகத்தின் இதர பகுதிகளில் குடியேற்றப் பட்டனர் என்ற கூற்று ஏற்பதற்கன்று. தொண்டைமண்டல சதகத்திலும் சேக்கிழார் புராணத்திலும் தொண்டை மண்டலத்தில் நாற்பத்தெண்ணுயிரம் நற்குடி வேளாளர் குடியேற்றப்பட்டனர் என்று கண்டிருப்பது கட்டுக்கதை யேயாம். இவற்றில் எவ்வித உண்மையும் இருப்பதற்கில்லை.

சோழிய வேளாளர் சோழநாட்டிலிருந்து தொண்டை நாட்டில் குடியேற்றப்பட்டனர் என்பதற்கு எவ்விதச் சான்று களும் இல்லை எனலாம். அடுத்து துளுவ வேளாளருக்கு வருவோம்.

இன்றைய துளுவ வேளாளர் தென் கன்னடத்திலிருந்து கி. பி. 9 அல்லது 10-ஆம் நூற்றுண்டில் தொண்டை மண்டலத்தில் குடியேற்றப்பட்டிருக்கலாம் என நெல்சன் கூறுகிருர். டாக்டர். பாஸ்கர் ஆனந்த சாலடோர் என்பவர் இதுபற்றிக் கூறுவதாவது: 'தொண்டை மண்டலத்தின் சில பகுதிகளில் குலோத்துங்கச் சோழன், அவன் மகன் அதோநந்தைச் சக்கர வர்த்தி ஆட்சியின்போது துளுவ வேளாளர் குடியேற்றம் பற்றி பழஞ்செய்திகள் வழக்கில் உள்ளன. ஆனல் இச்செய்திகள் கி. பி. 10 அல்லது 11-ஆம் நூற்றுண்டில் நடைபெற்ற தாகவே அறிவிப்பதாயுள்ளன. [1]

Dr. Basker Anand Saletore says: 'Indeed the tradition o Tondaimandalam refer to the colonization of some parts

---

1 *Page.54. Ancient Karnataka Vol 1, (History of Tuluvas) Dr. Baskar Anand Saletore, M.A., Ph.D. Poona Central Book House 1936*

of that country by the Tuluva vellalar in the days of Kulothunga Chola Deva and of his son Adondhai Chakravarthi. But these activities of the Tuluva people refer to the 10th and 11th century AD when they had become conspicuous in the annals of both the Tamil and the Karnataka lands. [1]

டாக்டர் கால்டுவெல் துளு நாட்டிலிருந்து இடைக்காலத்தில் தமிழகத்தில் குறிப்பாகத் தொண்டை நாட்டில் குடியேற்றம் நடைபெற்றிருப்பது சாத்தியமில்லை என்கிறார். அவர் கூறுவது பின்வருமாறு:

'சென்னைக்கு அருகில் குறும்பர் அல்லது நாடோடி இடையர்களைத் துரத்திவிட்டு அப்பகுதியில் துளு நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட வேளாண்குடி அமர்த்தப்பட்டு, அவர்க்கு நிலங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டதாகச் செவிவழிச் செய்திகள் நிலவுவதாக எல்லிஸ் என்பவர் நில உரிமைகள்பற்றி எழுதிய ஆராய்ச்சிக் குறிப்பில் கண்டுளது. இச்செய்தியானது சென்னைக்கருகில் குடியிருக்கும் வேளாளரில் சிலர் தம்மைத் துளுவ வேளாளர் என வழங்குவதிலிருந்து உறுதிப்படுகிறது. ஆனால் அவ்வாறு வந்தவர் எண்ணிக்கை கணிசமாய் இருப்பதற்கில்லை. ஏனெனில் சென்னைக்கருகில் வழங்கும் பேச்சு வழக்குத் தமிழுக்கும், இதரப் பகுதியில் வழங்கும் பேச்சு வழக்குத் தமிழுக்கும் இடையே காணப்படும் வேற்றுமையை ஒப்பு நோக்கும்போது, சென்னைப் பகுதியில் நிலவும் பேச்சு வழக்குத் தமிழ் துளு மொழிக் கூறுபாடுகள் சிறிதும் இன்றி தெலுங்கு மொழிக் கூறுபாடுகள் அதிகம் கலந்திருக்கக் காணலாம் [2] ஆக தொண்டை மண்டலப் பகுதியில் வாழும் துளுவ வேளாளரிடையே வழக்கில் உள்ள தமிழில் துளு மொழிக் கலப்பு இல்லாததால் அவர் துளு நாட்டிருந்து வந்தவர் என்ற கருத்து வலுவிழந்து விடுகின்றது. மேலும் துளு நாட்டில் வேளாளர் என்ற ஒருவகுப்பு இருப்பதாகத் தெரியவில்லை. இது பல காரணங்களால் துளு நாட்டிலிருந்து வேளாளர் தொண்டை

1 *Page. 54. Ancient Karnataka Vol 1. (History of Tuluvas) Dr. Baskar Anand Saletore, M. A., Ph. D. Poona Central Book House 1936.*

2 *Page 32. A Comparative G ammar Dr. R. Caldwell,*

மண்டலத்திலோ, பிற பகுதியிலோ குடியேற்றப்படவில்லை என முடிவு கொள்ளலாம். அடுத்து கொங்கு நாட்டில் வேளாளர் குடியேறப்பட்டனரா? என்பதுபற்றிப் பார்ப்போம்.

## கொங்கு நாட்டில் வேளாளர் குடியேற்றம்.

சோழன் பூர்வ பட்டயம் கூறுவதாவது: ''கரிகால் சோழன் தொண்டை நாட்டிலிருந்து, இன்னும் சில வேளாளக் குடியினரையும், கைக்கோளரையும், செட்டிகளையும் முறையே வெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலி, கச்சிவீரன் என்னும் காஞ்சிபுரத்தான், கஸ்தூரி ரெங்கன் செட்டி இவர்கள் தலைமையில் அழைத்து வந்து கொங்கு நாட்டில் குடியேற்றினான். [1]

கொங்கு மண்டல சதகத்தில் நாற்பத்தெண்ணாயிரம் வேளாளக் குடும்பங்கள் கொங்கு நாட்டில் குடியேற்றப்பட்டதாக கண்டுளதுபற்றி ஏற்கனவே கூறியது நினைவிருக்கத்தக்கது. இச்சதகம் கி. பி. 18 அல்லது 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்பர். சோழன் பூர்வ பட்டயமும் அந்நிய மரபினரின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டதே எனலாம். இது சோழர் காலத்தில் ஏற்பட்டதென்பதற்கு ஆதாரம் இல்லை. எனினும் இப்பகுதியில் வாழும் கவுண்டர்கள் [இவரைத்தான் கொங்கு வேளாளர் என்பர்]. இடைக்காலத்தில் இங்கு குடியேறியவர் என ஒரு கருத்து நாட்டில் நிலவி வருகின்றது. இவர் குடியேறிய காலை ஏற்கனவே இங்கிருந்த பழங்குடியினராகிய வேட்டுவர்க்கும் இவர்க்கும் கலகங்கள் மூண்டதாகவும், இங்குள்ள வண்ணார், நாவிதர் முதலிய தொழிலாளர் ஒருவரும் இவருக்குத் தொழில் செய்யக்கூடாதெனப் பண்டைக் குடிகள் தடுத்ததாகவும், அதன் காரணமாய் தம் மரபினர்க்குள்ளிருந்தே ஒரு சிலரைப் பறைத் தொழில், வண்ணாரத் தொழில், நாவிதத் தொழில் செய்ய நியமித்ததாகவும், அதனால் இன்று அவர்க்குத் தொழில் செய்யும் கொங்குப் பறையர், கொங்கு வண்ணார், கொங்கு நாவிதர் ஏற்கனவே கவுண்டர்

---

1 சோழன் பூர்வ பட்டயம் *Madras Government Oriental Manuscript Library.*

[கொங்கு வேளாளர்] மரபினரிலிருந்தே நியமனம் பெற்றவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். இம்மரபினர் ஒரே குடியைச் சேர்ந்தவரல்லர். இவர் மத்தியில் பல பிரிவுகள் இருக்கக் காண்கிறோம். இவர்கள் பல்வேறு காலத்தில் சிறு சிறு கூட்டமாய் தமிழகத்தின் இதர பகுதியிலிருந்து இங்கு வந்து குடியேறியிருக்கவேண்டும். கஸ்தூரி ரெங்கன் செட்டி, சடையப்ப பிள்ளையன் இவர்களைக் குல முதல்வராகக் கொள்வதால், கி. பி. 12-ஆம் நூற்றாண்டிற்குப்பின் இப்பகுதியில் இவர் குடியேறினரா? என்ற கேள்வி எழுகின்றது. இம்மரபினர் வாழும் பகுதி பெரும்பாலும் முல்லை நிலமேயாகும். காட்டுப் பயிர் [புஞ்சை தோட்டப் பயிர்] தான் இவர் செய்து வருகின்றனர் என்பதுவும், கால்நடை பேணுபவராகக் காணப்படுவதுவும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

## நற்குடி நாற்பத்தெண்ணாயிரம்

பாண்டிய நாட்டிலுள்ள வேளாளர் சோழநாட்டிலுள்ள காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தும், தொண்டை நாட்டிலுள்ள வேளாளரில் ஒருசாரார் கங்கைப் பகுதியிலிருந்தும், இன்னொரு சாரார் சோழநாட்டிலிருந்தும், இன்னும் பிறிதொரு சாரார் துளுநாட்டிலிருந்தும், கொங்கு நாட்டிலுள்ளவர் பிற பகுதியிலிருந்தும் குடியேற்றப்பட்டவர்கள் என்ற கூற்றுக்கள் பற்றி ஏற்கனவே கண்டோம். இந்த மூன்று நாடுகளிலும் தவறா நாற்பத்தெண்ணாயிரம் நற்குடியினர் குடியேற்றப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் சோழநாட்டு வேளாளர் பற்றி இம்மாதிரி குடியேற்றக் கதை வழக்கில் உள்ளதாகத் தெரியவில்லை. இதுபற்றி வெங்குசாமி ராவ் கூறுவதாவது:

'வேளாளர் தென்னாட்டில் குடியேறியது பற்றிப் பலவிதமான செவிவழிச் செய்திகள் வழக்கில உள்ளன. ஆனால் அவை ஒவ்வொன்றும் ஒரு சிறு பிரிவினரைப் பற்றியே குறிப்பதாக உள்ளதேயன்றிப் பொதுவாய் இன்றைய எல்லா வேளாளப் பிரிவுகள் தோற்றம் பற்றி குறிப்பிடுவதாகக் கொள்வதற்கில்லை.' [1]

---

*1 Page 181. Tanjore Dt. Manual Vengusamy Rao 1883*

Vengusamy Rao says : 'Various traditions are extant regarding vellala settlements of the south but each refers to one of the minor divisions and none explains the origin of the class as a whole' [1]

அவர் மேலும் கூறுவதாவது 'அனேகமாய் சோழநாடே வேளாளரின் தாயகமாய் இருக்கவேண்டும். தமிழகத்தின் இதரப்பகுதியிலுள்ளவர் வேற்றிடங்களிலிருந்து குடியேறியவர். தொழில் காரணமாய் இவர் வேளாளர் என வழங்கலாயினர்.' [2]

Vengusamy Rao adds 'Probably so the cola country was the birth place of the vellalas and the foriegn immigrants in other parts of the Tamil country acquired the name from analogy of occupation. [2]

ஆக வெங்குசாமி ராவ் கூற்றுப்படி சோழநாடே வேளாளரின் தாயகமாம். மற்றப்பகுதியிலுள்ளவர் பண்டைய வேளாண்குடியைச் சேர்ந்தவர் அல்ல. அவர் புதிதாய்க் குடியேறியவர். காலப்போக்கில் வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டு வேளாளர் என வழங்கலாயினர் என்பதே ஆம். ஆனால் பண்டையநாளில் வேளாண்மைத் தொழில் சோழநாட்டில் மட்டுமின்றி சேரநாட்டிலும், பாண்டியநாட்டிலும் நடைபெற்று வந்ததாகவே சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. ஆதலால் இவரது கூற்று ஏற்புடைத்தன்று.

சேக்கிழார் புராணம், தொண்டைமண்டலச் சதகம், கொங்குமண்டலச் சதகம், பழம்பாடல், சோழன் பூர்வபட்டயம் இவற்றில் நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் குடிகள் பற்றிக் குறிப்புகள் உள்ளதுபற்றி ஏற்கனவே கண்டோம். ஆனால் சில கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் நாற்பத்தெண்ணாயிரவர், நாற்பத்தெண்ணாயிரத்தேவர், நாற்பத்தெண்ணாயிரம் பூமி, நாற்பத்தெண்ணாயிரம் பிள்ளை, நாற்பத்தெண்ணாயிரம் பட்டர் என்ற வாசகங்கள் காணப்படுகின்றன.

---

1 *Page 181. Tanjore Dt. Manual T. Vengusamy Rao 1883*
2 *Page 180. Tanjore Dt. Manual T. Vengusamy Rao 1883.*

## நாற்பத்தெண்ணுயிரவர் [1]

'ஸ்வஸ்திஸ்ரீருக்கு வைரத்தேவர்க்கு செல்லா நின்ற யாண்டு நூற்றுமுப்பத்தேழு அவ்வாண்டு நகரம் செய்து நாற் பத்தெண்ணுயிரவரும், பட்டர்களிருவரும் வெச்ச விளக்கினிக் கும்'

## நாற்பத்தெண்ணுரம் பிள்ளை [2]

'திருபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீகுலோத்துங்கச் சோழ தேவர்க்குயாண்டு 204-வதுஅருங்குன்றங்கிழான் நாற்பத் தெண்ணுயிரம் பிள்ளையும் மங்கையர்க்கரசியாரும், இருபத்தி நாலாவது பஞ்சத்திலே'.

## நாற்பத்தெண்ணுயிரம் பெருப்பள்ளித்தேவர் [3]

(மூன்ரும் குலோத்துங்கனுடைய 9 ஆம் ஆட்சியாண்டுக் கல் வெட்டு) 'திருநறுங்கொண்ட நாற்பத்தெண்ணுயிரம் பெரும் பள்ளித்தேவர்க்கு திருநாமத்துக்காணியாக நிலமளித் துள்ளான்.'

## நாற்பத்தெண்ணுயிரம் பூமி [4]

'நிகரிலி சோழமண்டலத்து எழுபத்தெட்டு நாடுகளும், ஜயங்கொண்ட சோழமண்டலத்து நாற்பதெண்ணுயிரம் பூமி யும், பெரும்படை வலங்கை மகா சேனைக்கு வழங்கியப்பட்ட இராஜேந்திர சோழப் பதினெண்பூமியும் உள்பட்ட நாடுகளில்.

---

*1 TAS Vol VIII, P. 39 பூதாடி தாழக்காவு கல்வெட்டு*

*2 SII. Vol VIII. 157*

*3 ARE 381 | 1902*

*4 E P Carnatica 458/1911 பக். 308. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும். Dr. K. K. பிள்ளை.*

## நாற்பத்தெண்ணாயிரம் பட்டர் [1]

'இக்குடி நாற்பத்தெண்ணாயிரப் பட்டருமிவ்வனைவோம் இந்நாட்டுப் பெருநாளில் வெள்ளாள பெருநர்க் கிழவன் திருவடிகள்.'

நாற்பத்தெண்ணாயிரம் போன்று மூவாயிரத்து எழுநூற்றுவர், நானாதேசி ஐநூற்றுவர், எண்ணாயிரவர், தில்லை மூவாயிரவர், திருச்செந்தில் ஆறாயிரவர், திருவெண்காடு ஈராயிரவர், நாங்கூர் நாலாயிரவர் என சில வகுப்பார் தமிழகத்தில் இருந்துவருவதாக அறிகின்றோம். நாட்டுக்கோட்டைச் செட்டியார் தமது முன்னோர் எண்ணாயிரவர் சோழநாட்டின் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து பாண்டியநாட்டின் செட்டிநாட்டில் குடியேறியதாகக் கூறுவர். மதுரைப் பகுதியில் வாழும் காசுக்காரச் செட்டியார் தம்மை ஆயிரம் வைசியர் குடியினர் என்பர். சேக்கிழாரின் திருஞான சம்பந்தர் புராணத்தில் எண் பெருங்குன்றத்து எண்ணாயிரவரும் [2] என்று வருவது கவனிக்கத்தக்கது. இந்த எண்ணாயிரவர் சமணத்துறவிகளைக் குறிக்கும் எனலாம். தென்னாற்காடு மாவட்டத்தில் 'எண்ணாயிரம்' என்ற ஒரு ஊர் இருப்பது நாம் அறிந்ததே. இது போன்ற எண்ணிக்கை பற்றி கே. வி. சுப்பிரமணிய அய்யர் கூறுவதாவது 'தட்சிணத்தில் பல இடங்களில் மக்கள் குடியேறினது பற்றிப் பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. பல்லவதிலக நந்திவர்மன் திருவெள்ளாறை கல்வெட்டு. [Epigraphlca Indica Vol X] அதனுள் குறிக்கப்பட்டுள்ள தர்மத்தை ஊரிலுள்ள மூவாயிரத்து எழுநூற்றுவர் பாதுகாக்கவேண்டுமென்று கூறுகின்றது. இன்னும் சில கல்வெட்டுகள் இதேபோன்று நாற்பத் தெண்ணாயிரம், எண்ணாயிரம் என்ற மக்கள் குடியைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. மூன்று, நான்கு நூற்றாண்டுகளுக்குப் பின்னாலுள்ள சிலர் தம்மை மூவாயிரத்து எழுநூற்றுவர், நாற்பத்தெண்ணாயிரவர்,

---

1 திருத்துறைப்பூண்டி கல்வெட்டு தமிழக அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை

பெரிய புராணம் 'திருஞானசம்பந்தர் செய். 855'

எண்ணூயிரவர் என வழங்கியது முன்பு அந்த எண்ணிக்கை யுள்ள குடிகள் குடியேற்றப்பட்டனர் என்றும், பிற்காலத்தில் அவ்வெண்ணிக்கையைச் சேர்ந்தவர் என்றும் கூறிக்கொண்ட ஒரு சாரார் அவர் வழிவந்தவர் என உரிமை பாராட்டுவதா யும் பொருள்படுகின்றது. இம்மாதிரி கூற்றுக்கள் தில்லை மூவாயிரவர் என்று வழங்குவதிலிருந்து புலனாகும்[1]

K. V. Subramania Ayyar says' Inscriptions speak of men settled in various parts of Dekkan. The Tiruvellara inscription of Dantivarman of the pallava Tilaka family published in the Epigraphica Indica vol X says that 3700 of the village has to protect the charity recorded etc.Other ins--criptions refer to similar collections of 48,000,8300 etc. That latter members living 3or4 centuries after called themselves as belonging to 3700, 48,000 and 8000 goes to prove that they must refer to bodies of men who came and settled in places with which the members are found associated with and to these later members traced thair descent. In the expression Thillai Moovayiravar another such instance is found. [1]

கே. வி. சுப்பிரமணிய அய்யர் கூறுவதுபோன்று 48,000, 8000, 3700, 3000 எண்ணிக்கையுள்ள குடிகள் ஒரு காலத்தில் குடியேறினர் எனவும், அதனால் அவர் வழிவந்தோர் பின்னாளில் தம்மை அந்த எண்ணிக்கையுடையவர் என்று கொள்வதாகக் கூறுவதும் ஏற்கத்தக்கதன்று. இடைக்காலத் தில் பார்ப்பனர், தெலுங்கர், கன்னடியர், ஈழவர் போன்றோர் குடியேறினர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள. ஆனால் இன்று வேளாளர் என வழங்குவோர் பிறமொழி பேசும் பகுதியிலிருந்து இடைக்காலத்தில் தமிழகத்தில் குடி யேறினர் என்பதற்கு எவ்விதச் சான்றுகளும் இருப்பதாகத் தெரியவில்லை. அனேகமாய் இன்று 48,000, 8000 எனப்

---

*1 Page 392. Historical Sketches of Ancient Dekkan. K. V. Subramania Ayyar.*

பலவாறு கூறுபவர் இடைக்காலத்தில் பௌத்த, சமண மதங்களிலிருந்து சிவ, வைணவ மதங்களில் சேர்ந்தவர் என்றே கருதவேண்டியுளது. கி. பி. 7-ஆம் நூற்ருண்டில் பல்லவர் ஆதரவில் வைதீக மறையைத் தமிழகத்தில் பரப்ப முயற்சிகள் நடைபெற்றதை வரலாறு படித்தோர் அறிவர். எண்ணுயிரம் சமணரை மதுரையில் கழுவேற்றினர் என்பதெல்லாம் வெறும் கட்டுக்கதை என்றே கருதவேண்டியுளது. சமணத்திலிருந்து அனேகமாய் எல்லோருமே சிவமதத்தில் சேர்ந்துவிட்டனர் என்பதில் ஐயமில்லை. பார்ப்பனரில் எண்ணுயிரவர் [அட்டசகசர்] என்ற ஒரு பிரிவு இருந்துவருவது கவனிக்கத் தக்கது. இன்றைய வேளாளர் மற்றும் செட்டிகளில் ஒரு சாரார் இடைக்காலத்தில் சமண மதத்திலிருந்து சிவமதத்தில் சேர்ந்தவர் என்பதாகச் சில அறிஞர் கருதுகின்றனர். நாட்டுக்கோட்டை செட்டிகளில் எண்ணுயிரம் பேர் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்தவர் எனக்கூறுவது நினைவிருக்கத் தக்கது. சென்ற நூற்ருண்டில் கிறித்துவ மறையில் பலர் சேர்ந்து கல்வி, உத்தியோகம் மற்றும் சலுகைகள் பெற்று முன்னேறியதுபோன்று, இடைக்காலத்தில் பிற மதங்களிலிருந்து சிவமதத்திற்கு ஈர்க்கப்பட்டு கோயில்கள், மடங்கள் மற்றும் அந்நிய ஆட்சியாளரை அண்டித் தொழில் செய்து, கல்வி, பொருளாதாரத்தில் மேம்பாடுற்றவர் தம்முன்னேர் கூட்டம் கூட்டமாய் மதம் மாறினதையும், தாம் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர் என்பதையும் நினைவு கூறு முகத்தான், தம்மை அந்த எண்ணிக்கையுள்ளவர் என வழங்கலாயினர் என நாம் முடிவுகொள்ளலாம். பாண்டிய, தொண்டை, கொங்கு நாடுகளில் குடியேறினதாகக் கூறப்படும் 48,000 நற்குடி என்பவர், உண்மையில் 48,000 குடிகளைக் குறிப்பதாக நாம் கொள்வதற்கில்லை. இந்து சமயத்தில் முப்பத்திமுக்கோடித் தேவர்களும் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளும் உண்டு என்பது நாம் அறிந்ததே. கல்வெட்டுகளில் கண்டுள்ள நாற்பத்தெண்ணுயிரவர், நாற்பத்தெண்ணுயிரம் பிள்ளை, நாற்பத்தெண்ணுயிரம் பூமி, நாற்பத்தெண்ணுயிரத் தேவர், நாற்பத் தெண்ணுயிரம் பட்டர் என்பவையெல்லாம் ஒரு தெய்வத்தைக் குறிப்பதாகவே கருத இடமாகிறது. ஆக நாற்பத் தெண்ணுயிரம் என்பது ஒரு ஐதீகப் பேச்சே. அதே

போன்றுதான் தில்லை மூவாயிரவர், செந்தில் ஈராயிரவர், மூவாயிரத்து எழுநூற்றுவர், ஆயிரம் வைசியர் எல்லாம் வேளாளர் கங்கை குலத்தைச் சேர்ந்தவர் என ஒரு சாரார் வாதிப்பர். இக்கூற்றுபற்றி அடுத்து ஆராய்வோம்.[1]

## வேளாளர் கங்கை குலம் பற்றிய கதை.

பழங்காலத்தில் பரமசிவனும், பார்வதியும் கைலாயத்தில் இருக்கும்போது ஒருநாள் தனிமையை நாடி மறைவிடத்தில் ஒதுங்கினர். அது சமயம் தேவர்களையெல்லாம் தோற்றுவித்த விஷ்வகர்மா அங்கு செல்ல, அவரது தனிமை கலைய நேரிட்டது. அதனால் கோபங்கொண்ட பரமசிவனும், பார்வதியும் அவரைப் பூலோகத்தில் அவரது எதிரியாய்த் தோன்ற இருக்கும் மனிதனின் ஆதிக்கத்திற்கு உள்ளாவர் எனச் சபித்தனர். அதற்கு விஷ்வகர்மா அவன் தோன்றும் இடம் தெரிந்தால் அவனை ஒரே அடியால் நிர்மூலமாக்கிவிடுவதாகவும், ஆதலால் அந்த இடத்தைத் தனக்குக் காண்பிக்கும்படியும் பரமசிவனையும், பார்வதியையும் வேண்டினார். அதற்குத் தெய்வ தம்பதிகள் கங்கைக்கரையில் பூமாதேவியின் வயிற்றிலிருந்து அந்த மனிதன் தோன்றுவான் என்றனர். அதன்மேல் விஸ்வகர்மா, தனது உடைவாளை எடுத்துக்கொண்டு வான ஊர்தியில் ஏறி கங்கைக் கரையில் வந்து இறங்கி, உலகத்தில் தோன்ற இருக்கும் தனது எதிரியின் வரவை ஆவலோடு எதிர்நோக்கித் காத்திருந்தார். ஒரு நாள் தனக்கு அருகில் பூமிவெடிப்பதையும், அதனுள்ளிருந்து அரசு மணிமுடிதாங்கிய ஒரு கிரீடம் வெளிப்படுவதையும் கவனித்த விஸ்வகர்மா அது தனது எதிரியின் தலை எனத் தவருகக் கருதி தனது உடைவாளால் அதை வெட்டினார். அந்த வெட்டு பூமியினுள்ளிருந்து வெளிவரும் மனிதன் தலையில் அணிந்திருந்த கிரீடத்தைத் தான் துண்டிக்க முடிந்தது. [அந்த மனிதனே யாதொரு காயமுமின்றி, தன் கழுத்தில் மலர் மாலைகளுடனும், கையில் பொற் கலப்பையுடனும், கிரீடம் இழந்த தலையுடனும் பூமியிலிருந்து தோன்றினன். இவனைக்கண்ட விஸ்வகர்மா, கோபாவேசத்

---

1 *Page 392. Historical Sketches of Ancient Dekkan K.V. Subramania Ayyar.*

துடன் அந்த மனிதனே அங்கேயே கொன்றுவிடும் நோக்கத்தோடு கட்டிப்பிடித்தார். அப்போது பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய திருமூர்த்திகளும் பூமியின் எட்டு மூலேகளேயும் பிடித்துத் தாங்கி நிற்கும் உபதேவர்களும், தங்கள் மகிமைப் பிரதாபத்தோடு தோன்றி அந்த மனிதனுக்காகப் பரிந்து விஸ்வகர்மாவை நோக்கி ' நீர் ஒரேவெட்டிஞல் பூலோக மனிதனே நிர்மூலமாக்குவதாக வாக்குக் கொடுத்தீர்; ஆனுல் அவ்விதம் செய்ய உம்மால் முடியவில்லே. மறுதரம் அவனே நீர் தாக்குவது என்ன நியாயம்? முதல் முயற்சியில் வெற்றி பெறவில்லேயாதலால் அவனுக்கு எவ்விதத் தீங்கும் செய்யாமலிருப்பதுவே முறையாகும், என்றனர். அதன்மேல் விஸ்வகர்மா, தனது பிடியைத் தளர்த்தி, அந்த மனிதனுடன் சமாதானம் செய்துகொண்டு, தனக்குப் பிறக்கும் பஞ்ச சாதியினராகிய தட்டார், தச்சர், கொல்லர், கற்கொல்லர், கன்னர் இவர்கள் உலகத்தில் தோன்றும் மனிதர்க்கு ஊழியம் செய்ய வேண்டுமென்கிற நிபந்தனேக்கு உட்பட்டார். பரமசிவனும், பார்வதியும் மற்றத் தெய்வங்களும் பூமியிலிருந்து தோன்றிய மனிதனுக்குப் பூமி புத்திரர், [பூமியைக் காப்பாற்றியவர்] கங்கைகுலம், [கங்கைக் கரையில் தோன்றியதால் கங்கை வழிவந்தவர்]. மேழித் தேவர் [கையில் கலப்பையுடன் தோன்றியவர்] என மூன்று பெயர்களே வழங்கி, கிரீடத்தை இழந்துவிட்டதால் மணிமுடி தரிக்கும் மன்னராக முடியாதென்றும், ஆனுல் அவனும் அவனது மரபினரும் உழுது பிழைக்கவேண்டுமென்றும், அவரில் ஒருவன் மன்னர் முடி தரிக்கும் விழாவில் முடி எடுத்துக்கொடுக்கும் உரிமை பெறுவன் என்றும் ஆசிகூறி அவனுக்குப் பூணூல் அணிவித்தும், அவன் மூலம் மனித சந்ததிகள் பல்கிப் பெருகும்படியாக இந்திரன், குபேந்திரன் பெண்களே அவனுக்கு மணம் செய்துவைத்து, பூமியில் உழவு தொழில் நடத்துவதற்காக சிவபெருமான் தான் அமர்ந்திருந்த வெள்ளே எருதுவையும், தர்மராசா அமர்ந்திருந்த வெள்ளே எருமையையும் வழங்கினர். வெள்ளே எருதுகளால் நிலத்தை உழுதுவரப் பணிக்கப்பட்டதால் வெள்ளாளன் என்ற பெயர் ஏற்பட்டது. திருமணச் சாந்திமுகூர்த்தச் சடங்கு முடிந்தபின் சிவபெருமான், பார்வதி முதலானேர் தேவலோகம் சென்றனர்.

இந்திரன் மகள்மூலம் 54 மகன்களையும், குபேந்திரன் மகள்மூலம் 52 மகன்களையும் பெற்றெடுத்தான். இந்த 106 மகன்களுக்கும் குபேரன் மகன் நல குபேரரது பெண்களை மண முடித்துக் கொடுப்பதற்கு ஒரு நிபந்தனை விதித்திருந்தான். அதன்படி முப்பத்தைந்து மருமகன்கள் நிலத்தை உழுது பயிர்த்தொழில் செய்யவேண்டும். முப்பத்தைந்துபேர் வணிகத் தொழில் நடத்தவேண்டும். அவர்கள் வெள்ளான்செட்டி என வழங்குவர். மற்றும் முப்பத்தைந்து பேர் கோசெட்டி என வழங்குவர். அவர்கள் ஆநிரைகளைப் பேணுவர். அவரில் மிஞ்சிய ஒருவனை அந்த மூன்று தொழில்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்படி பணித்தான். ஆனால் அவன் அவை ஒன்றையும் ஏற்கவில்லை. அதனால் அவனை அகம்படியன் அதாவது அந்நியன் என வழங்கினர். அவனுக்கு இரண்டாயிரத்து ஐநூறு குழந்தைகள் பிறந்தன. அவர்கள் அகம்படி வேளாளர் என்ற பெயருடன் ஒரு தனிச் சாதியாய் வாழ்ந்து வரலாயினர். [1]

இக்கதை வேளாளர் கங்கை குலம் என்பதற்கு ஆதாரமாகத் தோற்றுவிக்கப்பட்டாலும் அதனுள் வணிகர், இடையர், அகம்படியர் இடம்பெற்றிருப்பது குழப்பத்தை உண்டு பண்ணுவதாயுளது. பூமியில் பயிர் செய்பவர் பூவைசியர், வணிகத்தொழில் செய்பவர் தனவைசியர், ஆநிரையைப் பேணுபவர் கோவைசியர் வேளாளருள் அடங்குவதாகத் தமிழ் அகராதிகள் கூறும். இதன்படி ஆயரும் வணிகரும் தம்மைக் கங்கை குலம் எனக் கூறவேண்டும். ஆனால் அவர்கள் அவ்விதம் கூறக் காணோம். எனவே இன்று வேளாளர் என வழங்குவோர் கங்கைப் பகுதியிலிருந்து தெற்கே தமிழகம் போந்து குடியேறியதால் கங்கை குலம் என வழங்குவது வெறும் புனைந்துரையே. பின்னர் ஏன் வேளாளரில் ஒரு சாரார் தம்மை கங்கை குலம் எனப் பெருமை பாராட்டுகின்றனர்? இவ்வினாவிற்கு நாம் விடை காண முயல்வோம்.

---

1 *Page 362. 64. Castes and Tribes of South India Vol. VII- E. Thurston.*

சேக்கிழார் சிவனடியார் ஆவர். இவரது பெரிய புராணத்தில் அறுபத்திமூன்று நாயன்மார்களில் பதினொருவர் வேளாண் குடியினர் எனக் கண்டுளது. இந்தப் பதினொருவரில் ஒருவரைக்கூட இவர் கங்கை குலத்தவர் எனக் கூறக் காணோம். நிற்க சேக்கிழாரை நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் வேளாண் குடியைச் சேர்ந்தவர் என்றும் [1] கங்கை குல திலகர் என்றும் [2] சிவாச்சாரியர் கூறுவர். திருக்கழுக்குன்றம் தல புராணத்தில் வேளாளரை மண் குலம், இந்திர குலம், கங்கை குலம் எனக் கண்டுளது. இத்தலபுராணம் மிகவும் பிற்காலத்தது. இதில் காணப்படும் மண் குலம் என்பது குயவரையும் இந்திர குலம் என்பது மருத நில மக்களையும் கங்கை குலம் என்பது இன்றைய வேளாளரில் ஒரு சாராரையும் குறிப்பதாக உளது. நெல்லை மாவட்டத்தில் விஜயமங்கலத்தில் காணப்படும் கி பி. 1754-ஆம் ஆண்டைச் சேர்ந்ததெனக் கூறப்படும் ஒரு கல்வெட்டில் 'காராளகுல திலகமான கங்கா குலத்தரசரான பிள்ளைமார் கட்டளையாக' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. [3]

இக்கல்வெட்டு நாயக்கர் காலத்தைச் சேர்ந்ததென்பது குறிப்பிடத்தக்கது. நாயகக்கரின் தென்பாண்டி நாட்டுப் பிரதிநிதிகள் தங்களைக், கங்கை குலம் என்றும் பிள்ளைமார் (பிள்ளையன்) என்றும் வழங்கியிருக்கின்றனர் என இதனல் தெரிகிறது. தண்டிகைக் கனகராயன்பள்ளில் காரைக்காட்டைச்சேர்ந்த கனகராயன் கங்கை குலாதிபதி [செய். 34] என்று கண்டுளது. கி. பி. 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய சதக நூல்களில் கங்கை குலம் இடம்பெற்றுள்ளதாகத் தெரிகிறது. வேளாளர் புராணத்திலும் இப்பெயரைக் காணலாம். இன்று வேளாளர் என வழங்குபவரில் ஒரு சாரார் தம்மை கங்கை குலத்தவர் என பின்னாளில் வழங்க லுற்பட்டனர் போலும். இப்பெயர் சமயச் சார்புடையது எனலாம். சிவ

1 *சேக்கிழார் புராணம் செ. 12*

2 *சேக்கிழார் புராணம் செ. 52*

3 *தென் இந்தியக் கோயிற் சாசனங்கள் முதல் பாகம் சாசனம் 109.8.* R 5378-1

மதத்தினர் தெய்வமாகிய சிவபெருமானின் நிரந்தர இருப்பிடம் நதிகளில் புனிதமாகக் கருதப்படும் கங்கையின் உற்பத்தி இடமாகிய கயிலாயம் என வழங்கும் இமய மலையாகும். சிவபெருமானைச் சிவனடியார்கள் கங்கைவார்ச் சடையன் எனக் கூறிவருவது [2]

'அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயிராய்
ஆவுரித்துத் தின்னும் புலையரேனும்
கங்கைவார்ச் சடையர்க் கத்தன் பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'

[திருநாவுக்கரசர் தேவாரம்]

'கங்கைவாய்ச் சடையன்' (பெரிய புராணம் கழற்சிங்க நாயனார் புராணம் செ.1)
என்ற மேற்கோள்களால் விளங்கும்.

ஆக கங்கை குலம் என்பது பிற்கால வழக்கு. சிவமதத்தைச் சேர்ந்தவரில் வைதீகப் பற்று உள்ளவர் தம்மை கங்கை குலம் என வழங்க முற்பட்டதாகக் கருதவேண்டியுளது. அஃதன்றி இவர் இவ்வாறு வழங்குவதனால் கங்கைப் பகுதியிலிருந்து இங்கு குடிபோந்தவர் எனக் கொள்வது சரியாகா. அடுத்து இவருக்கும் துவாரகையை ஆண்ட இருங்கோவேள் மரபினர்க்கும், சாளுக்கிய மரபினர்க்கும் வேளம்மா மற்றும் ஹாய்சல நாட்டை ஆண்ட பெல்லாளர் மரபினர்க்கும் தொடர்பு உண்டா? என்பதுபற்றிப் பார்ப்போம்.

## வேளாளர், பெல்லாளர் ஒரே மரபா?

துவாரகையில் ஆட்சி புரிந்தவர் ஆயர் குலத்தவர் என்பர். அவர் வேளாண் மரபினர் அன்று. வேளாண் மாந்தர் உழவர் குடியினர் எனக்கொண்டால், அவரை இருங்கோவேள் மரபினர் எனக் கொள்ள முடியாது. மைசூர்ப் பகுதியிலுள்ள பெல்லாளர் வெள்ளாளர் எனத் திரிந்து வழங்குகின்றனர் என்பதற்கு இருவர் பேசும் மொழி தடையாயுள்ளது. முன்னவர் கன்னடமொழி பேசுபவர். பின்னவர் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர். பெல்லாளர் பற்றி பேராசிரியர் எம். மாரியப்பா பட் கூறுவதாவது: 'பெல்லாளர் மைசூர்ப்பகுதியில் கி.பி. 13அல்லது14-ஆம் நூற்றாண்டுகளில் ஆட்சிபுரிந்தவர்

என அறிகின்றோம். கன்னடமொழி இதற்குச் சில நூற்றுண்டு களுக்கு முன்பே வழக்கில் இருந்ததாகத் தெரிகின்றது. ஆத லால் பெல்லாள மரபினர் தமிழகத்தில் குடியேறி வெள்ளாளர், வேளாளர் என வழங்கினால் அவர் கன்னட மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருக்கவேண்டும். ஆனால் அவர் அவ்விதம் இல்லாமல் தமிழ் மொழியையே தாய் மொழியாகக் கொண்டி ருப்பதால் இவர் பெல்லாளர் மரபினர் எனக் கொள்வதற் கில்லை. துளு நாட்டில் பல்லாளர் என்ற பெயர் வழக்கில்இல்லை என்றும் பயிர்த்தொழில்செய்தவர் வெள்ளாளர் என வழங்கி காலப்போக்கில் இது பல்லாளர் என மாறினதாகவும், பல்லாளர் என்பது வயலை உடையவர் எனப் பொருள் கொண்டு வயலை உடைய பல்வேறு பிரிவினரும் பல்லாளர் என வழங்கிய காலக் கட்டத்தில் ஹாய்சல மன்னர் நில உடைமையாளரை வெல்ல, அவ்வாறு வென்றதன் அடையாளமாக தம்மை பல்லாளர் என வழங்கலுற்றனரா? எனவும் பலவித கருத்துக்கள் எழுகின் றன. ஆனால் இவற்றிற்கு எவ்வித ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் இன்று பெல்லாளர் என்ற வகுப்பு கருனடகத்தில் இல்லை. ஏதோ ஒரு மரபினர் பெல்லாளர் என்ற பட்டம் தரித்து ஆட்சிபுரிந்து, அவரது ஆட்சி முடிந்த பின் அப்பெயரும் வழக்கொழிந்து விட்டதென்றே நாம் கருத வேண்டியுள்ளது. [1]

## வேளாளர், வேளம்மா ஒரே மரபா ?

ஆந்திர நாட்டின் சாளுக்கிய மரபினர் எனக் கூறப்படும் வேளம்மா வகுப்பிற்கும் இன்றைய வேளாளர்க்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. வேளம்மா என்பவர் ஆந்திர நாட்டில் கஞ்சம், விசாகப்பட்டினம், கிரிசாகுளம், கரீம்நகர், நைசாமாபட் முதலிய மாவட்டங்களில் காணப்படுவது உண்மையே. இவர் பல பிரிவினராயும், வேளாண்மைத் தொழில், நெசவுத்தொழில், சாயங்காச்சுதல், துணி வியாபாரம்

---

1 Tamil-Tulu early contacts and a glimpse into occupations among Tuluvas. Prof.M. Mariappa Bhat.M.A.,L.T., டாக்டர் ஆர். பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா மலர்

முதலிய பலதொழில்களில் ஈடுபடுபவராகவும் இருந்து வருகின்றனர். இந்த வேளம்மா மரபினர் சாளுக்கிய அரச மரபினர் எனக் கருதுவதற்கு எவ்வித ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. இவரும் தமிழகத்திலுள்ள இன்றைய வேளாளரும் ஒருவரல்ல என்பதுபற்றி வட ஆற்காடு மாவட்டக் குறிப்பில் கண்டுள்ளதாவது : வேளம்மா வகுப்பினர் விசய நகர மன்னருடன் தெற்கே வந்தவர். காவற்காரராக நியமனம் பெற்று அவரிலிருந்து சிலர் பாளையக்காரராக உயர்ந்தனர். அவர்கள் தற்போது பாளையக்காரரின் எடுபிடிகளாகவோ, அல்லது விவசாயிகளாகவோ இருந்து வருகின்றனர். மாவட்டத்தின் தெற்கேயுள்ள தாலுகாக்களிலுள்ள வேளாளரிடமிருந்து பிரித்துக் காட்டத் தம்மைத் தெலுங்கு வேளாளர் எனக் கூறி வருகின்றனர். ஆனல் இவருக்கும் இங்குள்ள வேளாளருக்கும் எவ்விதத் தொடர்போ ஒற்றுமையோ இருப்பதாகத் தெரியவில்லை. [இவர்கள் நாயுடு என்ற குலப் பட்டம் பூண்டு வருகின்றனர். இவர்களும் வேளாளரும் ஒரே வகுப்பு எனக் காட்டுவதற்காகத் தம்மை தெலுங்கு வேளாளர் என வழங்குவதாக எடுத்துக்கொள்வதற்கில்லை. மேலும் வேளாளர் தம்மைத் தமிழகத்திலுள்ள பார்ப்பனரல்லாதவருள் உயர்ந்தவர் என்று கூறிவருவதற்கு ஒப்ப, தாமும் தெலுங்கு மரபினரில் உயர்ந்தவர் என்று காட்டிக்கொள்ளவும், அவ்விதம் கூறுவதாகவும் கொள்வதற்கில்லை. உண்மையில் இவர் தெலுங்கரில் உயர்ந்த வகுப்பினர் அல்ல. இதை மனத்திற் கொண்டே இவர் தமிழகத்திலுள்ள வேளாளரை அரவ (தமிழ்) வேளம்மா என அழைக்கின்றனர்.] [1]

H. A. Stewart says : 'The Velamas seem to have come south with the Vijayanagar Kings and to have been made Kavalgars from which position some rose to be Poligars. Now they are chiefly the hangers-on of Poligars or Cultivators. To distinguish them from the Vellalas in the

---

*1 North Arcot Dt. Manual H. A. Stewart.*

Southern Taluks they call themselves as Telugu Vellalas but it seems very improbable that the Velamas and Vellalas ever had any connection with one another. [The Velamas style themselves as Telugu Vellalas not because they are at the top of the Telugu castes as the Vellalas are of the Tamil Castes. For the same reason Vellalas are called 'Arava [Tamil] Velamas'. [1]

ஆக இதுவரை நாம் கண்டவற்றிலிருந்து வேளாளர் கங்கைப் பகுதியிலிருந்தோ, அல்லது துளு நாட்டிலிருந்தோ சோழன் கரிகாலனாலோ அல்லது வேறு தமிழ் மன்னர்களாலோ குடியேற்றப்பட்டவர் அல்ல எனவும், வேளம்மா, பெல்லாளர், வேளாளர் இவர்களுக்குள் எவ்விதத் தொடர்பும் இல்லை எனவும் முடிவு கொள்ளலாம்.

வேளாளர் வந்தேறிகள் அல்ல என்கும்போது, அவர் தமிழகத்தின் தொல் குடியினரா? என்ற கேள்வி எழுகின்றது. இவ்வினாவிற்கு விடை காணுமுகத்தான் இன்றைய வேளாளர் பிரிவுகள் மற்றும் அவரது பழக்க வழக்கங்கள்பற்றி அடுத்து ஆராய்வோம்.



1 *North Arcot Dt. Manual H. A. Stewart.*

# இன்றைய வேளாளர் பிரிவுகள்

பண்டை நாளில் தமிழகம் சேர, சோழ, பாண்டிய நாடுகள் எனப் பிரிந்திருந்தாலும், இடைக்காலத்திலிருந்து சேர நாட்டின் கீழ் பகுதி கொங்கு நாடு எனவும், சோழ நாட்டின் வடபகுதி தொண்டை நாடு அல்லது தொண்டை மண்டலம் எனவும் வழங்கி வந்தன. இப்பகுதிகளில் வாழ்பவருள் வேளாளர் என உரிமை பாராட்டுபவர் அந்தந்தப் பகுதிக்குத் தக்கவாறு தம்மைப் பாண்டியவேளாளர், சோழிய வேளாளர், கொங்கு வேளாளர், தொண்டைமண்டல வேளாளர் என வழங்குவது நியதி. ஆனால் நடைமுறையில் நாம் காண்பது வேறு. இவருள் ஒரு சாரார் மட்டும் தம்மைப் பாண்டிய வேளாளர், சோழிய வேளாளர், கொங்கு வேளாளர், தொண்டை மண்டல வேளாளர் என வழங்கி வருகின்றனர். பெரும்பாலோர் தம்மைக் கார்காத்த வேளாளர், கொண்டைகட்டி வேளாளர், நீர்பூசி வேளாளர், கொடிக்கால் வேளாளர், கரையாண் வேளாளர், காணியாள வேளாளர் எனப் பலவாறு வழங்கி வரக்காண்கிறோம். இப்பல்வேறு பிரிவுகள் தோற்றம்பற்றிக் கீழே காண்போம்.

## பாண்டிய நாடு

கன்னியாகுமரி, திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை, புதுக்கோட்டை மாவட்டம் வெள்ளாற்றிற்கு தெற்கே உட்பட்ட பகுதி பாண்டிய நாட்டினுள் அடக்கம். இங்கு வேளாளர் என வழங்குபவர் தம்மைப் பிள்ளைமார் என்று கூறி வருவதுடன், பிள்ளை என்ற குலப் பட்டம் பூண்டு தம்மைப் பாண்டிய வேளாளர், நாஞ்சில் நாட்டு வேளாளர், நாங்குடி வேளாளர், கோட்டை வேளாளர், நீர்பூசி வேளாளர், காரைக் கட்டு [கார்காத்த] வேளாளர், அரும்புகோத்து வேளாளர், அகமுடைய வேளாளர் எனப் பலவாறு வழங்கிவருவது கண்கூடு,

## பாண்டிய வேளாளர்.

இவர் பெரும்பாலும் மதுரை, திருநெல்வேலி நகர்ப்புறப் பகுதிகளில் காணப்படுகின்றனர். பயிர்த்தொழில் செய்வதில் இவர் ஈடுபடாமல், தையற்தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். இவர் மேஸ்திரி என்றும் வழங்குவதுண்டு. ஏற்கனவே பாணர் வகுப்பைச் சேர்ந்தவரென்றும், ஊர்ப்புறங்களிலுள்ள இவரது உறவினர் தம்மைப் பறையர் [1] என்றே இப்போதும் மரபு கூறி வருவதாகவும் அறிகின்றோம். இவரது இல்லத்தில் வண்ணார், நாவிதர், செக்கார் எவரும் உணவு எடுப்பதில்லை- [2] கன்னியாகுமரி மாவட்டம், நெல்லை மாவட்டம், செங்கோட்டைப் பகுதிவாழ் பாணர் வகுப்பார் செடியூல் வகுப்புப் பட்டியலில் இடம்பெற்றுள்ளனர். [3] மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களைச் சேர்ந்த பாணர்களுள்ளும் கன்னியாகுமரி, நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த பாணர்களுள்ளும் கொள்வினை, கொடுப்பினை உண்டு. பாணர் என்பதுவும், பாண்டிய வேளாளர் என்பதுவும் ஒன்றே என இம்மரபினர் பிற்பட்டோர் நலக் குழுவின் முன் ஒப்புக்கொண்டுள்ளனர். [4]

## நாஞ்சில் நாட்டு வேளாளர்.

இவர்கள் கன்னியாகுமரி மாவட்டத்தில் மட்டும் காணப்படுகின்றனர். ஏற்கனவே பாண்டிய நாட்டிலிருந்து இங்கு இவர் குடியேறினர் என்றும், பாண்டிய மன்னருக்கும் திருவனந்தபுரம் மன்னருக்கும் இடையே நாஞ்சில் நாடு உரிமை பற்றி தாவா ஏற்பட்டபோது, நாஞ்சில் நாட்டு வேளாளர் திருவனந்தபுரம் மன்னருக்கு விசுவாசம் தெரிவிக்குமுகத்தான் தம்து பண்டையப் பழக்கவழக்கங்களை விட்டுவிட்டதாகக் கூறு

---

*1 Page 84. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

*2 தென்னிந்தியக்குலங்களும்,குடிகளும். ந.சி.கந்தையாபிள்ளை.*

*3 தமிழக அரசு செடியூல் வகுப்புப் பட்டியல் இணைப்பு II.*

*4 பக். 134 தமிழ்நாடு பிற்பட்டோர் நலக் குழு அறிக்கை— பாகம் 2, 1970. தமிழ்நாடு அரசு 1971.*

வர்.[1] 1900 ஆண்டு வரை கேரளாவிலுள்ள நாயர்(நம்பியார், மேனன், பிள்ளை, குருப்) போன்று மருமக்கத்தாய முறையைப் பின்பற்றி வந்தனர் [தாய்வழி வாரிசு உரிமை]. தேவரடியார் மத்தியில் பிறந்தவரில் ஆடவர் தம்மை நாஞ்சில் நாட்டு வேளாளர் என வழங்கலுற்றனர் என தர்ஸ்டன் கூறுவார்.[2] இவர் ஏற்கனவே கணக்குப்பிள்ளை என்ற குலப்பட்டம் பூண்டு வந்தனர். ஒருசிலர் சமீப காலமாய் பிள்ளை என்ற பட்டம் தரித்து வருகின்றனர். மாடன், இசக்கி இவரது குலதெய்வம். அம்மன் கோயில் கொடை சிறப்பாகக் கொண்டாடுவர், வில்லடிப்பாட்டு பாடுவர். நாயர் பெண்களுடன் சம்பந்தம் வைத்துக்கொள்வர். விடுமுறி எழுதிக் கொடுத்துவிட்டு மண உறவை ரத்து செய்துகொள்வர். அவ்வாறு ரத்து செய்தவர் நாஞ்சில் நாட்டு வேளாளர் அல்லது பாண்டிய வேளாளருடன் சம்பந்தம் [உறவு] வைத்துக்கொள்வர். தாய்மாமன் சிறிய தாயார் பெண்களுடன் மண உறவு வைத்துக்கொள்வர்.[3] தர்ஸ்டன் இவர்பற்றிக் கூறுவதாவது : 'வட திருவாங்கூரில் உள்ளவர் தென் திருவாங்கூரிலுள்ளவரிடமிருந்து பழக்க வழக்கங்களில் வேறுபடுகின்றனர். ஆனால் இங்குள்ளவரில் பலர் நாயர் பழக்கவழக்கங்களைப் பின்பற்றிவருவதுடன், நாஞ்சில் நாட்டு நாயர் என மரபுப் பெயரை மாற்றியும்வருகின்றனர். தென் திருவாங்கூரில் காணப்படும் தேவரடியார் வகுப்பு அங்குள்ள பூர்வீகக்குடியினரே. இவர் தேவரடியார் எனப் பொருள்படும் தேவடியாள், தாசி என வழங்கியதுடன், குடுக்கர் என்றும் பெண்டுகள் என்றும் வழங்கி வந்தனர்.

---

1 *Page 244. Castes and Tribes of South India Vol . V E. Thurston]*

2 *Page 140. Castes and Tribes of South India Vol II: E. Thurston]*

3 தென்னிந்தியக்குலங்களும் குடிகளும். ந. சி. கந்தையாபிள்ளை *[Page 244. Castes & Tribes of South India Vol V. E. Thurston]*

குடுக்கர் என்பது வீட்டுக்கு உரியவர். [இவ்வீடுகள் அரசாங்கத்தினல் கட்டப்பட்டு வாடகையின்றி வழங்கப்பட்டவை.] பெண்டுகள் என்பதைவிட குடுக்கர் என்ற பெயரே பெரிதும் வழக்கில் இருந்ததாக அறிகின்ரேம். இவருள் ஆடவர் தேவடியான் என வழங்கியுள்ளனர். ஆனல் இந்நாளில் இவர் தம்மை நாஞ்சில் நாட்டு வேளாளர் என்று கூறுவதையே விரும்புவதுடன், அண்டைப்பகுதிவாழ் வேளாளர்போன்று பிள்ளை என்ற குலப்பட்டத்தையும் தரித்து வருகின்றனர். [1]

Thurston says ' But in South Travancore Dasis are an indigeneous class. The female members of this caste are besides being known by the ordinary name of Tevadiyal and Dasi both meaning servant of God are called Kudukkar those meaning belonging to the house [i. e. given rent free by the Sirkar] and Pendugal or women-The former of these designations being more popular than the latter. Males are called Tevadiyan thongh many prefer to be known as Nanchilnad Vellalas. Males like the Vellalas take the title of Pillais. [1]

நாங்குடி வேளாளர் :

இவர் நெல்லை மாவட்டம் சீவைகுண்டம் வட்டாரம் மூடித்தானந்தல் மற்றும் 10-15 ஊர்களில் காணப்படுகின்றனர். தம்மைச் செவளேப்பிள்ளைமார் என்றும் கூறுவதுண்டு. கி. பி. 13-ஆம் நூற்ருண்டில் இராமனுதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர் பகுதியிலிருந்து நெல்லைமாவட்டத்தில் குடியேறினதாகவும், கொண்டையன் கோட்டை மறவரும் தாமும் ஒரே மரபினர் என்றும் சொல்வதுண்டு. இவரது பழக்க வழக்கம் இதர வேளாளரிடமிருந்து பெரிதும் வேறுபடக் காணலாம். ஊன் உணவு எடுப்பர். மறவர் போன்று தாய்வழியில்

---

1 *Page 140. Castes and Tribes of South India Vol II. E. Thurston*

வம்சா வழி கொண்டாடுவர். பெண்களுக்குச் சொத்துரிமை உண்டு. பெண் வீட்டாரே தாலி செய்யவேண்டும். புதுத் தம்பதிகளுக்கு பெண் வீட்டாரே வீடுகட்டிக் கொடுக்க வேண்டும். பெண்களுக்கு ஒரு வீடும் இதர சொத்தில் பங்கும் உண்டு. கணவனுக்கும் மனைவிக்கும் பிணக்குகள் ஏற்பட்டால் கணவன் ஊர்ப் பொது இடமாகிய அம்பலத்தில் (ஊர்ப் பொது சத்திரம்) போய் இராத் தங்குவர். பெரும்பாலான தமிழ் மரபினர்களைவிட நல்ல உயரமாய் இருப்பதைக் காணலாம். பாதுகாப்புப் படையிலும், காவற் துறையிலும் இவரில் பெரும்பாலோர் சேர்ந்து பணிபுரிந்து வருகின்றனர். சீவைகுண்டம் கோட்டைப் பிள்ளைமார் தம்மரபைச் சேர்ந்தவர் என்று இவர் உரிமை பாராட்டுவர். [1] ஆனால் இம்பரபுப் பெண்டிரை சீவைகுண்டம் கோட்டைப் பிள்ளைமார் தம் கோட்டைக்குள் அனுமதிப்பதில்லை. [2] கொண்டைகட்டி வேளாளர் போன்று மன்னர்க்கு முடிசூட்டு விழாவில் முடி எடுத்துக் கொடுக்கும் உரிமை தங்களுக்கு உண்டு என்பர். இவரது பழக்க வழக்கம் மற்ற மரபினரிடமிருந்து வேறுபடுவதிலிருந்தும், தாய் வழியில் வம்சா வழி கொண்டாடுவதிலிருந்தும், இவர் நாயக்கர் ஆட்சியின்போது படைத் தொழிலில் உதவும் பொருட்டு மறவர் போன்று பிற பகுதியிலிருந்து நெல்லை மாவட்டத்தில் குடியேற்றப்பட்டவர் என நாம் கருத இடமாகிறது. இவர் நஞ்சைப் பயிர் சாகுபடியில் நேரிடையாய் ஈடுபடாமல் புஞ்சைப் பயிர் சாகுபடியிலேயே ஈடுபட்டு வருகின்றனர். தமிழக அரசு இவரைப் பிற்பட்டோர் வகுப்புப் பட்டியலில் சேர்த்துள்ளனர்.

## கோட்டை வேளாளர்.

நெல்லை மாவட்டம் சீவைகுண்டம் வடபகுதியில் மண் கோட்டை எழுப்பி அதனுள் வாழும் சில குடும்பத்தார் தம்மைக் கோட்டை வேளாளர் என வழங்கி வருகின்றனர். இவரைக் கோட்டைப் பிள்ளைமார் என்றும் கூறுவர். இக் கோட்டைக்குள் இருக்கும் ஒரு கல்வெட்டில் 'பிள்ளை

---

1 *Page 246 Casts and Mribs of South India Vol. V E. Thurston*

2 *தென் இந்தியக் குலங்களும் குடிகளும் ந.சி. கந்யையாப்பிள்ளை*

மார்' என்று பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். நாங் குடி வேளாளர் போன்று, பெண்வழியிலேயே கிளைவழி கொண் டாடுகின்றனர். பாண்டிய மன்னர் பட்டமேற்கும் விழாவில் முடிசூடுவதற்கு முடியை எடுத்துக் கொடுக்கும் உரிமை தங் களுக்கு இருந்ததாகக்கூறுவர். கொத்தன்மார், கொத்தடிமை கள், பஞ்ச சாதியினர் சமீபகாலம் வரை கோட்டைக்குள் குடி இருந்ததாகவும், பின்னர் அங்கிருந்து வெளியே குடி ஏற்றப் பட்டதாகவும் தெரிகிறது. அரும்பு கோத்து வேளாளர் போன்று, திருமணமான பெண்கள் தம் பெற்றோர் இல்லத் திலேயே தங்கிவிடுவர். அவரது கணவன்மார்தான் அங்கு போய் வந்து, இருக்கவேண்டும். தகப்பனார் சொத்தில் பெண்களுக்குப் பாதிப் பங்கு உண்டு. [1]

இம்மரபுப் பெண்டிர் கோட்டைக் குள்ளிருந்து வெளியே வருவதில்லை. கோட்டைக்கு வெளியே அதன் அருகில் குடி யிருந்துவரும் கொத்தன்மார். [கட்டிடவேலை மற்றும் இதர பணிகள் செய்பவர்] குருக்கள், கம்மாளர், மற்றும் மானயம் பெற்றுள்ள தொழிலாளரும் (நாங்குடி வேளாளர் மற்றும் கர்ப்பவதிகள் தவிர்த்து) எல்லா மரபுப் பெண்டிரும் கோட்டைக் குள் போய் வரத் தடை இல்லை. தேவேந்திர குலத்தார் ஆண், பெண் இருபாலரும் தாராளமாய் உள்ளே அனுமதிக்கப் படு கின்றனர். இவ்வகுப்பார் வைதீகப் பற்று அதிகம் உள்ளவர். கைம்பெண்டிர் கடுமையான கட்டுப்பாட்டுக்குள்ளாக்கப்பட்டு கணவன் காலமான சிறிது காலத்திற்குள்ளேயே உயிர்விடும் நிலையில் உள்ளனர். இவர் தெலுங்கர் காலத்தில் இங்கு குடி யேற்றப்பட்டிருக்கலாம் என அனுமானிக்கவேண்டிய நிலையில் உள்ளோம். நாங்குடி வேளாளர் மற்றும் மறவர் போன்று, பெண் வழியில் கிளை கூறுவதையும். பெண்டிர்க்குச் சொத் துரிமை பாராட்டி வருவதையும் கருத்திற்கொண்டுபார்த்தால், இவர் தமிழரல்லாத வேற்று மரபினரே என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இம்மரபைச் சேர்ந்தவர் இதர பகுதியில் காணப் படாதது கவனத்திற்குரியது.

---

*1 Page 335 Castes and Tribes of South India Vol. IV E. Thurston*

## அரும்புகோத்து வேளாளர்.

இவர் இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானைப் பகுதியில் சுமார் 10-12 ஊர்களிலும், திருச்சி மாவட்டத்தில் ஒரு சில ஊர்களிலும் காணப்படுகின்றனர். அரும்புகட்டி வேளாளர் எனவும் இவர் வழங்குவர். இப்பெயர் பூ கட்டும் தொழிலை உணர்த்துகிறதென்பது யாவரும் அறிந்ததே. நாலைந்து நூற்றாண்டுகளுக்குமுன் தொண்டை மண்டலப் பகுதியிலிருந்து இங்கு குடியேறினதாகக் கூறுவர். பொதுவாய் அரசு பணியில் ஈடுபடார். பெண்டிர் இடுப்பிற்குமேல் உடை அணிவதில்லை. நாங்குடி வேளாளரில் கோட்டைப் பிள்ளைமார் போன்று மணம் ஆன பெண் கணவன் இல்லத்திற்குச் செல்லாமல் தன் பெற்றோர் (தாய்) வீட்டிலேயே தங்கிவிடுவர். நாயர் போன்று கணவன்தான் மனைவி வீட்டிற்குப் போய் வந்து இருப்பர். குழந்தைகள் பராமரிப்பு நாயர் போன்று தாய் மாமனைச்சாரும். தகப்பனுக்கு இதில் பொருப்பு இல்லை எனலாம். [1]

திருச்சி மாவட்டத்திலுள்ள இம்மரபினர் பூகட்டும் வேலையில் ஈடுபட்டுவருவதாகத் தெரிகிறது.

## அகப்படிய வேளாளர் :

இவர் அகம்படியர் வகுப்பிலிருந்து வேளாளராக மாறினவர் என்பது வெளிப்படை. 'கள்ளர், மறவர், கனத்தால் அகம்படியர் மெள்ள மெள்ள வந்து வேளாளராகி முதலீ என்று சொன்னர்' என்ற பழமொழி நாட்டில் வழக்கில் உள்ளது நினைவு கூரத்தக்கது. அகம்படியர் என்ற வகுப்பே இடைக்காலத்தில் தோன்றியது. இடைக்காலச் சோழர் காலக் கல்வெட்டுகளில் அகம்படியர் என்பது பணிசெய் மக்களையே குறிப்பதாயுளது, கி. பி. 13-ஆம் நூற்றாண்டு வரை சோழ

---

*1 Madras census Report 1891—Page 32. Selections from the old records of Madurai Dt. 1836—54—Report of Turn Bull. Asst. Surveyor Madurai Manual J. H. Nelson*

நாட்டில் அகம்படியர் ஒரு தனி சாதியாக உருவெடுக்கவில்லே. [1] எனவே கி. பி. 13-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே அகம்படியர் என்ற ஒரு தனி சாதி உருப்பெற்று, அதன்பின் அவருள் ஒருசாரார் தம்மை வேளாளராக வழங்கிவந்திருக்கின்றனர் எனலாம். இம்மரபுபற்றி வழங்கும் புராணக் கதை முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. தர்ஸ்டன் குறவர் தம்மை அகம்படிய வேளாளர் என வழங்குவதுடன், பிள்ளை என்ற குலப்பட்டமும் பூண்டு வருவதாகக் கூறுகிருர். [2] இவர் அநேகமாய் கற்குறவராக இருக்க வேண்டும். பெரும் கோயில்கள் கட்டுவதற்கு கற்குறவர் ஈடுபடுத்தப்பட்டிருக்க வேண்டும். வேளாளர் போன்று தொண்டைமண்டலப்பகுதி வாழ் அகம்படியர் முதலி என்றும், தென் மாவட்டங்களில் குறிப்பாகத் தஞ்சை, திருச்சிப் பகுதிகளில் உள்ளவர் பிள்ளை என்றும் பட்டம் தரித்து வருவது சிந்தனைக்குரியது.

நீர்பூசி வேளாளர்.

இவர் பெரும்பாலும் நெல்லை மாவட்டத்தில் காணப்படுகின்றனர். சிவமதத்தைச் சார்ந்தவர். நெற்றியிலும் மார்பிலும் தோள்பட்டைகளிலும் திரு நீற்றை (விபூதி) பட்டை பட்டையாய்ப் பூசுவதால் நீர்பூசி வேளாளர் எனவும் [3] ஊன் உணவு தவிர்ப்பதால் சைவப் பிள்ளைமார் எனவும் வழங்குவர். இவர் சமணத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாறினவர் என்று கருத ஏதுவாகிறது. [4]

---

*1 Concordance of the names in the cola inscriptions by Noboru Karasimea y. Subbarayalu and Torn Matsui.*

*2 Page 377 castes and tribes of South India Vol. VII E. Thursuon*

*3 Page 416. Castes & Tribes of South India Vol. V. E. Thurston.*

*4 Page 105-6. Studies in Indian History with special reference to Tamil Nadu Dr. R. K. Pillay.*

[In Tamil country for example the people known as Nirpusum vellalar were originally jains and even now they abstain from food at night.][1]

பொதுவாய் இவர் ஊன் உணவு தவிர்த்தாலும் ஒருசிலர் ஊன் உணவு எடுப்பதுண்டு. நன்மை துன்மைச்சடங்குகள் நடத்திவைப்பதற்கு இவர்க்கெனத் தனியாய் பண்டாரம் இருந்து வந்தாலும்,தெலுங்குப் பார்ப்பனரையே குருக்களாக அமர்த்தி வருகின்றனர், வைதீகப்பற்று அதிகம் உள்ளவர். நஞ்சைப்பயிர் சாகுபடியில் நேரிடையாய் ஈடுபடுவதில்லை. புஞ்சைப்பயிர் சாகுபடியில் ஒருசிலர் ஈடுபடுவதுண்டு. ஆனல் மோழியைப் பிடித்து நிலத்தை உழுவது இழுக்கு என்று கருதுபவர். கல்வி அறிவில் பாப்பனருக்கு அடுத்த இடம் வகிக்கின்றனர். பெரும்பாலும் கிராம கருணீகராவும், அரசு அலுவலராகவும், கோயில், மடம், வணிகர் இவர்களிடம் கணக்கெழுதும் தொழில் புரிபவராகவும் இருந்து வருகின்றனர். கன்னியாகுமரி மாவட்டம் சுசீந்தரம் கோயில் பற்றி ஆய்வு செய்த டாக்டர் கே. கே. பிள்ளை இப்பகுதிவாழ் சைவ வேளாளர் பூ தொடுப்பது, பதிகம் பாடுவது போன்ற பணிகளைச்செய்து வருவதாகவும், இவர் எங்கிருந்து எப்போது சுசீந்திரம் பகுதியில் குடியேறினர் என்றும் திட்டமாய் கூறுவதற்கில்லை என்றும், சுசீந்திரம் கோயில் தோன்றியதிலிருந்து அக்கோயில் பணி செய்வோரில் இவரும் பங்கு கொண்டு வருவதாகத் தெரிவதாகவும், கோயிலில் காணப்படும் கி. பி. 10-ஆம் நுற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் பூ தொடுப்பவர் பற்றி செய்திகள் காணப்படுவதாகவும் கோயில்களில் தேவாரம், பதிகம் பாடுவதற்காக இராசராச சோழன் காலத்தில் வேளாளர் நியமிக்கப்பட்டதாகவும், சுசீந்திரத்தைப் பொறுத்தமட்டில் கோவிலுக்குப் பூ தொடுப்பதற்காக இவர்கள் குடியேற்றப்பட்டதாகவும், அனேகமாய்

1. Page 105-6. Studies in Indian History with special reference to Tamil Nadu Dr.R.K Pillay.

கி.பி. 17-ஆம் நூற்ருண்டிற்கு முன் கோயில் திருப்பதிகம் பாடும் பணி ஏற்பட்டிற்குமென்றும் கருதுகிருர். [1]

காா்காத்த வேளாளர் [காரைக்கட்டு வேளாளர்]

இவர் பாண்டிய நாட்டில் பெரும்பான்மையும், இதர மா வட்டங்களில் சிறு பான்மையும் காணப்படுகின்றனர். தென் மாவட்டங்களில் இவரைக் காரைக்கட்டுப் பிள்ளைமார் என்றே பெரும்பாலும் வழங்குகின்றனர். 1891-ஆம் ஆண்டு குடிக் கணக்கில் காரைக்கட்டு வேளாளர் என்றே பதிவாகியுள்ளது. கார்காத்தார் என்ற பெயர் இடம்பெறக் காணேம். இவர் ஒரே சீரான பழக்கமுடையவரன்று. இடத்துக்கு இடம் இவரது பழக்க வழக்கம் வேறுபடக்காணலாம். தம்மைக் காராளர்— காராகிய மேகத்தை ஆளுபவர் என்றும், காராகிய மேகத்தை நம்பிப்பயிர் செய்பவர் என்றும் கூறுவதுண்டு. திருவிளை யாடற்புராணத்தில் வரும் ஏக வீரன் தங்களின் முன்னேன் என்றும் இம்மரபினர் பேசியும் எழுதியும் வருவது நாம் அறிந்ததே. ஆனல் இக்கதை நம்பத்தக்கதன்று. இது இடைக்காலத் தில் தோன்றியது. மேலும் இந்த ஏக வீரனேடு தொடர்புடைய பாண்டியன் உக்கிரப் பெருவழுதி புராண காலத்தவன். நெல்லை மாவட்டம் கரிவலம்வந்த நல்லூர்[2] முகவை மாவட்டம் சீவிலிபுத்தூர் [3] கல்வெட்டுகள் இவன் தேவலோகத்திலிருந்து தேவ கன்னியின் புத்திரராகிய தேவேந்திர குலத்தார் நால்வரை செந்நெல், கன்னல், கதலி, பனை முதலிய வித்துக்க ளுடன் அழைத்துவந்து பூமியில் வேளாண்மை கண்டதாகச் செப்புவதுபற்றி ஏற்கனவே கண்டோம். செங்கோட்டுப்பள்ளு என்ற நூலும், மூவேந்தர் வேண்டுகோளின் மேல் தேவேந்திர குலத்தார் குல முதல்வன் தேவலோகம் சென்று நெற்பயிரைக்

---

1 Page 246 Suschendram Temple. Dr. K. K. Pillay. Page 15 TAS 111.

2 [ARE 432/1914]

3 [ARE 588/1926]

கொண்டுவந்து பூமியில் பயிர் செய்வித்ததாக செவிவழிச் செய்தி நிலவுவதாகக் கூறுகின்றது. இவற்றிலிருந்து உக்கிரப் பெருவழுதியோடு தொடர்புடைய ஏகவீரன் தேவேந்திர குலத்தைச் சேர்ந்தவன் எனக்கருத இடமாகிறது. நிற்க. காரைக்காட்டார் என்ற பெயர் மிகவும் அண்மைக் காலத்தில் வழக்கில் வந்ததாக அறிகின்றேம். தமிழ் இலக்கியங்களிலோ கல்வெட்டுகளிலோ இப்பெயர் இடம்பெறவில்லை. ஏற்கனவே கூறியதுபோல் 1891-ஆம் ஆண்டு குடிக்கணக்கில் காரைக் கட்டு வேளாளர் என்றே கண்டுளது. கி. பி. 17, 18-ஆம் நூற்ருண்டுகளில் தோன்றிய பள்ளு நூல்களில் காரைக்காட் டார் என்ற பெயர் இடம்பெற்றுளது என்பது,

'விருதுக்கே காரைக்காட்டார் வழக்கிட்டு
மேழிசேர முன் வாங்கிக் கொண்டார்கள்'
[முக்கூடற்பள்ளு செ. 74]

'சதுர விதரன் சுமுகன் காரைககாட்டான்
மரபில் தழைத்த மேகம்'
[முக்கூடற்பள்ளு மு. அருணசலம் உரை மேற்கோள்செய்யுள்]

'காரைக்காட்டார் வரங்கூறல்'
[தண்டிகைக கனகராயன் பள்ளு 34]

என்ற மேற்கோள்களால் தெளிவு.

இவர்கள் காரைக்காட்டிலிருந்து வந்தவர் என மேலே கண்ட பாடல்கள் உணர்த்துவதாயுள்ளன.

'செஞ்சிக்கும் கூடலுக்கும், தஞ்சைக்கும் ஆணை செல்லும்
செங்கோல் வடமலேந்திரன் எங்கள் ஊரே.'
[முக்கூடற்பள்ளு. செ. 14]

இதில் காணும் வடமலேந்திரன் வடமலையப்பனைக் குறிக் கும். முக்கூடற்பள்ளில் கண்டுள்ள காரைக்காட்டார் தென் பாண்டி நாட்டில் நாயக்க மன்னரின் பிரதிநிதியாய் இருந்து ஆட்சிசெய்த வடமலையப்பன் மரபைச் சேர்ந்தவர். தண்டி கைக் கனகராயன் வேளாண் மரபைச் சேர்ந்தவன் என்றும் விசய நகரம் அதைத் தொடர்ந்த நாயக்கர் ஆட்சியின்போது வேளாண் மரபினர் செல்வாக்கு இழந்து இலங்கையிலுள்ள

யாழ்ப்பாணப் பகுதியில் குடியேறினதாகவும், அவ்வாறு குடியேறினவருள் இவனும் ஒருவன் என்றும் டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவார்.[1] இவரது கூற்று சரியன்று. கார்காத்தார்பற்றி சொல்லின் செல்வர் ஆர். பி. சேதுப்பிள்ளை கூறுவதைப் பாருங்கள்: 'கார்காத்த வேளாண் மரபினர் பொருந்து செல்வமும், கல்வியும் பூத்தவர். மதுரை நகரில் நாயக்க மன்னர் அரசு செலுத்திய காலத்தில் அவர் ஆணையில் தென்பாண்டி நாட்டில் ஏற்றமும் தோற்றமும் பெற்றிருந்தார்கள்'[2] தண்டிகைக் கனராயன் பள்ளுக்கு உரை செய்த தண்டிகைக் கனக சபாபதி பிள்ளை தண்டிகைக் கனகராயன் மரபினர் தம்மைக் கார்காத்த வேளாளர் என வழங்கி வருவது பற்றிக் கூறுவதாவது: காரைக்கட்டு வேளாளர் என்பது ஐதீகப் பேச்சு. இவர்களே கார்காத்த வேளாளர் எனவும், முகிலுக்கு அபயங்கொடுத்த பாண்டி நாட்டு ஐதீக மரபினர் என மயங்குவர். முகிலுக்கு அபயங்கொடுத்த கார்காத்த வேளாளர் என்னும் தொடர் மொழியுடன் மயங்கி அல்லது மருவி, இக்காரைக்காட்டாரையும் கார்காத்தார் என வழங்கி வந்திருக்கலாம். பட்டினப் பாலையில் சொல்லியபடி 'காடு கொன்று நாடாக்கி கோயிலொடு கொடுகுடி நிறீயிகிய' ஆறு காடுகளில் ஆற்காடு ஆறு காடு கடாரணியம்—காரைக்காடு [கிருஷ்ணாரணியம்] ஒன்றாகும். காரைச் செடி அடர்ந்திருந்ததால் அது அப்பெயர் பெற்றது. கார்காலத்தில் செழித்து வளரும் செடி ஆதலால் காரை எனப்படும். கார் எனும் பதம் முதலில் கறுப்பு எனப் பொருள்படுதலால் கிருஷ்ணாரணியம் காரைக்காட்டின் வடமொழிப் பெயராய் வழங்குகிறது. செங்கற்பட்டிலிருந்து காஞ்சிபுரத்திற்கு கிழக்காகத் திருக்கச்சி நெறிக் காரைக்காடு எனும் பெயருடைய ஒரு சிவ ஸ்தலம் உளது......கி. பி. 12, 13-ஆம் நூற்றாண்டில் கச்சி நெறிக் காரைக்காடும் அதன் மருங்கிலுள்ள பிரதேசங்களுள் சிறந்த நகரியாய் அதியுன்னத நிலையில் இருந்தது.[3]

---

1 *Page 139. South India and Ceylon Dr. K. K. Pillay.*

2 *தமிழ்நாட்டுப் பட்டினங்கள் ஆர். பி. சேதுப் பிள்ளை.*

3 *தண்டிகைக் கனகராயன பள்ளு—தண்டிகைக் கனக சபாபதி பிள்ளை உரையுடன்.*

ஆர். பி. சேதுப் பிள்ளையும் டாக்டர் கே. கே. பிள்ளையும் குறிப்பிடும் வடமலையப்ப பிள்ளையன், தண்டிகைக்கனகாரயன் செட்டிவகையருக்கள் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள காரைக் காட்டுப்பகுதியைச் சேர்ந்தவர் எனவும், இவர்கள் தெலுங்கர் ஆட்சியின்போது தென்பாண்டி நாட்டிலும், இலங்கையில் யாழ்பாணப் பகுதியிலும் மற்றும் தமிழகத்தின் இதரப்பகுதிகளி லும் தெலுங்கருக்கு உதவியாக அரசுப்பணிகளில் அமர்த்தப் பட்டு ஏற்றம் பெற்றவர் எனவும், மிகவும் சமீபகாலமாய் கார் காத்த வேளாளர் என வழங்கி வருவதாக நாம் கருத வேண்டி யுள்ளது. இவரைப்பின்பற்றி தமிழகத்தில் பல்வேறு பிரிவின ரும் தம்மை வேளாண் மரபினர் என்றும், பிரிவுபற்றி வினவும் போது கார்காத்த வேளாளர் என்றும் உயர்வாகக் கூறி வருவது கண்கூடு. பாண்டியநாட்டில் இப்பெயர் தோற்றம் பெற்று தமிழகம் முழுவதும் பரவியுள்ளது. பிரான்சிஸ் என் பவர் இப்பெயர்பற்றி கூறுவதாவது : 'பாண்டியநாட்டிலுள்ள வேளாளரில் கார்காத்தார் அல்லது காரைக்கட்டு வேளாளர் என வழங்குபவர் தங்கள் தோற்றம்பற்றி புராணக்கதையை ஆதாரமாகக் காட்டினும் அப்பெயர் உண்மையில் காரைக் காடு என்னும் ஒரு பகுதியைச் சேர்ந்தவர் என உணர்த்துவ தாகவே நாம் கருதவேண்டியுள்ளது. [1]

(The Pandya Vellalas are sub-divided into Karakattas or Karaikattus who notwithstanding the legends about their origin are probably a territorial subdivision named from a place called Karaikadu.) [1]

ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போன்று இம்மரபுப்பெயர் தரித்திருப்பவர் ஒரே சீரான பழக்கவழக்கமுடையவரன்று. இடத்துக்கு இடம் அவை வேறுபடக்காணலாம். நெல்லைமாவட் டத்திலுள்ள கார்காத்தார் மத்தியில் நடைபெறும் விளக்கிடு கலியாணம்பற்றி எஸ். எம். லெட்சுமணன் செட்டியார்

---

1 *Madras census Report* 1901-*W. Francis.*

[சோமலே] கூறுவதாவது : 'நெல்லை மாவட்டத்திலுள்ள கார் காத்தார் மத்தியில் விளக்கிடு கலியாணம் என ஒரு சடங்கு நடைபெறுகின்றது. விளக்கிடு கலியாணம் என்பது ஒவ்வொரு தமிழ் ஆண்டிலும் தை மாதம் முதல் தேதியில் நடைபெறும் ஒரு சடங்காகும். இந்த விழாவில் இம்மரபைச்சேர்ந்த 7 அல்லது 9 வயது நிரம்பிய எல்லாப் பெண்கள் கழுத்திலும் தங்கச் சங்கிலியில் ஒன்பது தங்க மணிகளும், பத்து சிவப்புப் பளவ மணிகளும் கோர்த்த நவமாலை எனும் ஒரு அணிகலனைப் பெண்ணின் கழுத்தில் அவளது தாயைப் பெற்ற தாத்தா அல்லது பாட்டி, தாய் மாமன் அல்லது அவரது மனைவி கட்டுவர். பார்ப்பனக் குருக்கள் இந்த சடங்கை நடத்தி வைப்பர். செப்பு விளக்கில் அந்தப் பெண் திரி ஏற்றி வைப்பாள். கழுத்தில் அணிந்த நவமாலையை அவளது திருமணம் முடியும் வரை கழற்றக்கூடாது. திருமணம் ஆனபின்னும் விளக்கிடு கலியாணத்தின் ஞாபகார்த்தமாய் அந்த மாலையின் ஒரு சிறு பாகமேனும் திருமாங்கல்யத்துடன் கழுத்தில் இடம் பெறவேண்டும். [1]

மதுரை மாவட்டம் பழனிப் பகுதி வாழ் வேளாளர் பற்றிப் பார்ப்போம், இங்குள்ள கார்காத்தாரின் விதவைகள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். கணவன்மார் உறவினர் வீட்டிற்கு விருந்தினராக வருகைதந்தால் அவ்வீட்டுப் பெண்டிர் அவ்விருந்தினருடன் கூடி அவரை மகிழ்விக்கவேண்டும். கணவனின் குடும்பத்திற்கு வெளியே பெண்கள் சோரம் போனால் அப்பெண்கள் சாதிக்குப் புறம்பாக்கப்படுவர். இவ்விதம் புறம்பாக்கப்படும் பெண்களை அப்பகுதி வாழ் குன்னவர் மணஞ்செய்து கொள்வர். இம்மரபினர் குன்னவர் வீட்டில் உணவு எடுப்பர். இவரது பழக்கவழக்கத்திலிருந்து , பண்டைய நாளில் இவர் மத்தியில் கூட்டுக் கணவர் முறை வழக்கில் இருந்ததாக அனுமானிக்கவேண்டியுளது. [2]

---

1 *Page 80. Folklore of Tamil Nadu S. M. Lakshmanan Chettiar.*

2 *Page 232. 1891. Madras census Report.*

An interesting account written by Leiutenant Ward in 1824 of the Karaikat Vellalas of Palani Hills is referred to in the Madurai Manual. Widows are free to remarry. And wives are accustomed it is supposed to grant the last favour to their husbands' relatives. Adultery outside the husbands' family entails expulsion from caste. This custom is probably the survival of fraternal polyandry. [1]

இவர் மத்தியில் வாழும் குன்னவரும் இம்மரபைச் சேர்ந்தவர் என்றே கருதப்படுகிறது. இவரது சிறுவருக்கு வயது வந்த பெண்ணைத் திருமணம் செய்வித்து மணமகன் தக்க வயது அடையும் வரை அப்பெண் தம்மரபினருள் தான் விரும்பும் ஆடவருடன் கூடிக் குழந்தைகள் பெறலாம். இம்மாதிரிப் பிறக்கும் குழந்தைகளை அவளது கணவன் தனது சொந்தக் குழந்தைகளாக ஏற்றுக்கொள்ளவேண்டும். இன்னுமொரு விசித்திரப் பழக்கமும் இவரது மத்தியில் நிலவுவதாக அறிகின்றோம். ஒரு குடும்பத்தில் பெண்மட்டும் இருந்து ஆண் வாரிசு இல்லாவிடின், அந்தப் பெண்ணைக் கிரமப்படி ஒரு வாலிபனுக்குத் திருமணம் செய்துவைக்காமல், ஒரு சிறு பையனுக்கு அல்லது அந்த வீட்டின் வாசற்படிகளில் ஒன்றுக்கு மணம் முடித்து வைப்பர். இம்மாதிரி மணம் முடிக்கும் பெண்ணின் கழுத்தில் திருமாங்கல்யம் அணிவிப்பதில்லை. மாறாக அவளது வலது மணிக்கட்டில் ஒரு வெள்ளிக் காப்பை அணிவர். தன் சாதிக்குள் தான் விரும்பும் ஆடவருடன் கூடிக் குழந்தைகள் பெற்றுக் கொள்ளலாம். இம்மாதிரிப் பிறக்கும் குழந்தைகள் அவளது பெற்றோருக்கு வாரிசாவர். மதுரை மாவட்டத்தில் இம்மாதிரியான முறையை பின்பற்றியதன் மூலம் பத்துப் பனிரெண்டு வயதுப் பையன்களுக்கு

1 Page 232. 1891. Madras census Report.

மூன்று நான்கு வயதுக் குழந்தைகள் இருந்ததாக வாரிசு உரிமை வழக்குகள் அனேகம் தாக்கலானதாகவும், அவைகளுக்கு முடிவு காண்பதில் சிரமம் ஏற்பட்டதாகவும் தெரிகிறது[1]

Census of Madras Presidency 1871 Surgeon Major W. R. Cornish Vol. I When an estate is likely to descend to a female in default of male issue she is forbidden to marry an adult but goes through the ceremony of marriage with some young male child or in some cases with a portion of her father's dwelling house on the understanding that she shall be at liberty to abuse herself with any man of her caste to whom she may take a fancy and her issue so begotten inherits the property which is thus retained in the woman's family. Numerous disputes originate in this singular custom and Madura Collectors have some-times been puzzled not a little by evidence adduced to show that a child of three or four years was the son or daughter of a boy of ten or twelve. [1]

அடுத்து திருச்சி மாவட்ட இம்மரபினரின் பழக்க வழக்கம் பற்றிப் பார்ப்போம். இங்கும் சிறு பெண்களுக்கு விளக்கிடு கலியாணம் நடைபெறுவதாகத் தெரிகிறது. பெண்களை 7 அல்லது 9 வயது நிரம்பியவுடன் அல்லது அவளது திருமணத்திற்கு முன்னதாக இச்சடங்கை நடத்தி வைக்கின்றனர். ஒரு முகூர்த்த நாளில் கணேசரையும், சூரியனையும் தன் பெற்றோர் இல்லத்தில் அப்பெண் வணங்க வேண்டும். அவளது தாய் மாமன் அவளுக்கு ஒரு புதுப்புடவையும் தங்க மணியும் பவள மணியும் கோர்த்த ஒரு அணிகலனைப் பரிசாக வழங்குவர். அச்சடங்கில் கலந்து கொள்ளும் உறவினர் அப்பெண்ணுக்குப் பரிசுகள் அளிப்பர். திருமணத்திற்குப் பிறகும்

---

*1 Page 35 Madura Manual Part II. J. H. Nelson, and*

*Census of Madras Presidency 1871 Surgeon Major W. R. Cornish Vol. I*

இந்த அணிகலனை அப்பெண் அணிந்துவர வேண்டும். இவ் அணிகலனைக் கொடிச்சி மணி என வழங்குவர். [1]

'It is said that among the Karaikattu Vellalas a peculiar ceremony called Vilakkidu Kalyanam or the auspicious ceremony of lighting the light (lamp) is performed for girls in the seventh or nineth year or later but before the marriage. The ceremony consists in worshipping Ganesa and the sun at the house of the girl's parents. Her maternal uncle gives her a necklace of Gold-beads and Coral and a new cloth. All the relations who are invited to be present make gifts to the girl. The women of this section wear this ornament which is called Kodichimani [Hooked Jewel] even after marriage.' [1]

திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் வட்டாரத்தி லுள்ள இம்மரபினர் பெண்கள் ஏழு அல்லது எட்டு வயது நிரம்பும்போது தாய் மாமன்மார் அவர்களது கழுத்தில் தாலீ அணிவிப்பர். இங்குள்ளவரைக் கலப்பு (இப்பந்தி) சாதி என்றும் ஏற்கனவே இவர் எருது மாட்டு வியாபாரம் நடத்தி வந்தனர் என்றும் அதனால் இழப்பமாய் எருது மாட்டு வேளாளர் என வழங்கி வரலாயினர் என்றும் கூறுவர். [2]

The members of the Karaikat subdivision in Udayarpalayam Taluk are rather looked down by others as being a mixed race and also as some-what contemptuously called as Yeruthu Mattu Vellalar [Pack-bullocks] because in their profession and calling they formerly used pack-bullocks. They have a curious custom by which a girl's maternal uncle ties a thali (marriage badge) round the neck when she is seven or eight. [2]

1 *Page 380 Castes and Tribes of South India Vol. VII-E. Thurston & Trichy Dt. Gazetteer F. R. Hemingsway.*

2 *Page 101 Trichirapalli Dt. Gazetter. F. R. Hemingsway 1909.*

இவர் சமண சமயத்திலிருந்து இந்துக்களாய் மாறினவர் என 1891-ஆம் ஆண்டு குடிக்கணக்கில் கண்டுளது. உடையார்பாளையம் பகுதியில் காணப்படும் நயினர், நாயனர், காரைக்காட்டார் என்பவர் ஏற்கனவே சமண சமயத்திலிருந்து இந்துக்களாய் மாறினவர் என ஹெமிங்ஸ்வே என்பவர் கூறுகிருர். [1]

In the Madras census report of 1891—Vellala is reported as a caste of Jain. In this connection it is noted by Mr, Hemingsway that the Nainars, Nayanars and the Karaikattans of the Udayarpalayam Taluk are thought to be converted to the Hindu faith. [1]

இம்மரபினர் முன்னுளில் நேரிடையாய்ப் பயிர்த்தொழிலில் ஈடுபடுவதில்லே. ஏற்கனவே அடிமைகளாயிருந்த புலேயர்களே ஆண் ஒன்றுக்கு முப்பது பணமும், பெண் ஒன்றுக்கு ஐம்பது பணமும் கொடுத்து அவரை விலேக்கு வாங்கி பயிர்த்தொழில் செய்ய வைத்துக் கொள்வதுண்டு. ஆண்களேவிட பெண்களுக்கு அதிகப் பணம் கொடுப்பதன் காரணம் நிலச்சுவான்தார் அப்பெண்களுடன் கூடிப் பண்ணேத் தொழிலுக்கு உதவ குழந்தைகள் உற்பத்தி செய்ய வாய்ப்பு இருந்ததேயாம். [2]

தெலுங்கர் ஆட்சியிலும் அதற்குப் பின் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படும் வரையுள்ள இடைப்பட்ட காலத்திலும், நிலச்சுவான்தாரிடம் வழி வழியாய் அடிமைகள் இருந்து வந்தனர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. இம்மரபினர் மத்தியில் நிலவும் விளக்கிடு கலியாணம் தேவரடியார் இடையே நடைபெற்ற பொட்டுக் கட்டும் பழக்கத்தை ஒத்திருப்பதாகத் தெரிகிறது. அச்சடங்கின்போது தேவரடியார் வகுப்பார் தம் உறவினரைக் கூட்டி அவரது முன்னிலேயில் பெண்ணின் தாய் மாமன் அல்லது அவரது பிரதிநிதி அப்பெண்ணினது நெற்றி

---

1 Page 389 Castes and Tribes of South India Vol. VII. E.Thurston

2 Page 380 Castes and Tribes of South India Vol. VII. E. Thurston

யில் தங்க மணி கோர்த்த ஒரு கயிற்றைக் கட்டி அவளைத் தூக்கிப் பந்தலில் குழுமியிருக்கும் சபையார் முன் ஒரு பலகையில் உட்கார வைப்பர் என்பது கவனத்திற்குரியது. மேலும் பெண்களை கோவிலில் பொட்டுக் கட்டுவது பெண்கள் 9 வயது நிரம்பும்போது அல்லது அதற்கு முன்னதாகவே நடைபெற்றதென்பதுவும் அறியத்தக்கது. [1]

The relations (of the dancing girl) are invited on an auspicious day and the maternal uncle or his representative ties a Golden bead on the girl's fore-head and carrying her places her on a plank before the assembled guests. [1]

இம்மரபினர்க்கென கார்காத்த வேளாளர் சங்கம் ஒன்று இருந்து வருவதாகத் தெரிகிறது.

## சோழ நாடு

திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், புதுக்கோட்டை மாவட்டத்தில் வெள்ளாற்றுக்கு வடக்கேயுள்ள பகுதியும், தென்னாற்காடு மாவட்டத்தில் ஒரு சிறு பகுதியும் இதில் அடக்கம். இங்கு சோழியர், கொடிக்கால்காரர், வெள்ளான் செட்டி, காணியாளர், ஆறு நாட்டார், சித்தக்காட்டூர், பஞ்சுக்காரச் செட்டி. சோழபுரம் செட்டி, நாயனூர், ஏழூர் நாட்டார், கணக்கிலி நாட்டார், இசை வேளாளர், பண்டாரம், அரும்பு கோத்து வேளாளர், கொ ா ங் கு வே ள ா ள ர், துளுவ வேளாளர், தொண்டைமண்டல முதலியார், [கொண்டைகட்டி வேளாளர்] பூந்தமல்லி வேளாளர், காரைக்கட்டு அல்லது கார்காத்த வேளாளர், எனப் பல பிரிவுகள் இருந்துவரக் காண்கிறோம். இவர்களில் காரைக்கட்டு வேளாளர், அரும்புகோத்து வேளாளர்பற்றி ஏற்கனவே கண்டோம். கொங்கு வேளாளர்பற்றி கொங்கு நாட்டின் கீழும், கொண்டைகட்டி வேளாளர், பூந்தமல்லி வேளாளர், துளுவ வேளாளர்பற்றித் தொண்டைமண்டலத்தின் கீழும் காண இருப்பதால் சோழ நாட்டிற்கே உரித்தானவர் என உரிமை பாராட்டுபவர்பற்றி ஈண்டு ஆராய்வோம்.

---

1 Page 139 Castes & Tribes of South India Vol. II. E. Thurston.

## சோழிய வேளாளர்

இவருள் பெரும்பான்மையோர் சோழ நாட்டிலும், சிறு பான்மையோர் சேலம், செங்கற்பட்டு, சென்னை மாவட்டங்களிலும் வாழ்ந்து வருகின்றனர். சைவசமயச் சார்புடையவர். சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களில் உள்ளவர்க்கும் இதரப்பகுதியில் உள்ளவர்க்கும் இடையே எவ்விதத் தொடர்பும் இல்லை எனத் தெரிகிறது.[1] இவருள் ஒருசிலர் சைவ உணவு எடுப்பர். பண்டாரம் மடத்துத் தம்பிரான்கள், ஆதி சைவரைச் சேர்ந்த ஓதுவார் இம்மரபைச் சேர்ந்தவர் என்பர். இம்மரபினர் தோற்றம் பொதுவாய் சந்தேகத்திற்கு இடமானதென்றும், சோழ நாட்டில் பல்வேறு பிரிவினருள் குல உயர்வு கருதி வேளாளர் என வழங்க முற்படுபவர் பொதுவாய் தம்மைச் சோழிய வேளாளர் என்றே கூறி வருவதாகவும் மேனாட்டு அறிஞர் கருதுகின்றனர்.[2]

'The Solias (Cholias) are mumerous and ubiquitous. They are generally regarded as of doubtful descent, since paravenus who wish to be considered as Vellalas usually claim to belong to this subdivision'[2]

இம்மரபினர் 1975-ல் தமிழக அரசு பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளனர். சோழிய வேளாளர் சங்கம் ஒன்று செயல்பட்டு வருதாகக் தெரிகிறது.

## கொடிக்கால் வேளாளர்

இவர் சோழியரில் ஒரு உட்பிரிவு என்பர். பிற்பட்டோர் வகுப்புப் பட்டியலில் சோழிய வேளாளரைச் சேர்த்தபோது கொடிக்கால் வேளாளரையும் அதன் ஒரு உட்பிரிவாகக் கண்டுள்ளனர். இவர் தமிழகம் முழுவதும் பரவலாகக்காணப் படுகின்றனர். கொடிக்கால் தொழிலில் ஈடுபடுபவர் கொடிக்

1 பக்கம் 137. தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2. 1970.

2 Page 386 castes and Tribes of South India Vol.VII. E.Thurston & Page 101 Trichirappalli Dt. Gazetteer 1909 F.R. Hemingsway I.C.S.

கால்காரர், வெற்றிலைக்காரர் எனவும் கீரை சாகுபடி செய்ப வர் கீரைக்காரர் எனவும் வழங்குவர். சாணாரிலும் கொடிக் கால்காரர் என ஒரு பிரிவு உண்டு. சேனைத்தலைவர் என்ற வகுப்பாரும் கொடிக்கால் தொழிலில் ஈடுபட்டு வருவதுவும், அவர் தம்மை கொடிக்கால் பிள்ளைமார், இலைவாணியர் இல்லத்துப் பிள்ளைமார் என வழங்கி வருவதுவும் நம்மில் பலர் அறிந்ததே. பண்டைய நாளில் போர்க்காலங்களில் போர்க் கம்பத்தை நடுவதற்காக ஈடுபடுத்தப்பட்டவர் கொடிக்கால் காரர் [1] [ *Flagman, flag-bearers of fightingmen*] என அக் காலத்தில் வழங்கியதாகத் தெரிகிறது. ஆனால் பிற் காலத்தில் வெற்றிலை, கீரை, வாழை முதலிய பயிர் கள் செய்வதில் ஈடுபட்டவர் தம்மைக் கொடிக்கால்காரர், கீரைக் காரர், இலைவாணியர், வாணியச் செட்டி, இல்லத்துப்பிள்ளை மார் எனவும் பின்னர் காலப்போக்கில் கொடிக்கால் வேளாளர், சோழிய வேளாளர் எனவும் உரிமைப் பாராட்டலாயினர். சோழன் கரிகாலன் ஈழத்திலிருந்து பன்னீராயிரம் பேரைச் சிறைப்பிடித்துக் கொணர்ந்து காவிரிக்குக் கரை கண்டான் என வரலாறு கூறுகின்றது. இந்தப் பன்னீராயிரவரின் சந்ததி யினர் என்ன ஆயினர்? அவர் ஈழத்திற்குத் திரும்பினர் எனக் கூறுவதற்கில்லை. இவர் ஆற்றோரங்களில் குடி அமர்த்தப் பட்டதால் அனேகமாய் கொடிக்கால் பயிர்த் தொழிலில் ஈடு பட்டு ஆரம்பத்தில் ஈழவர் என்றும், பின்னர் காலப்போக்கில் கொடிக்கால்காரர், கொடிக்கால் பிள்ளைமார், கொடிக்கால் வேளாளர் என வழங்கி வந்திருக்கவேண்டும் நாயன்மார் களில் ஒருவராகிய ஈழகுலச்சான்றார் நாயனார் இக்கூட்டத்தைச் சேர்ந்தவராயிருக்கலாம். இது ஆராய்ச்சிக்குரியது. கொடிக் கால் வேளாளருக்கெனச் சாதிப் பஞ்சாயத்துகள் இருந்து வருவதாகத் தெரிகிறது.[2]

---

*1 page 295 Castes and Tribes of South India Vol. III E. Thurston.*

*2 Page 101 Trichirappalli Dt. Gazetteer 1909 F.R. Hemingsway I. C. S.*

## வெள்ளான் செட்டி

சோழிய வேளாளர் என வழங்குபவரில் வணிகத் தொழிலில் ஈடுபடுபவர் தம்மை வெள்ளான் செட்டி என வழங்குவர். ஒரே குடும்பத்தில் உள்ளவரில் ஒரு சாரார் செட்டி என்றும், இன்னொரு சாரார் பிள்ளை என்றும் குலப்பட்டம் பூண்டு வருவது கண்கூடு. தெலுங்கு கோமுட்டிச் செட்டிகள் கூட்டம் தமிழகத்தில் பெருகவும் இவர் வேறுபல தொழில்களில் ஈடுபடலாயினர் போலும் [1]

## காணியாளர்

இவர் மிகவும் சிறுபான்மையினர். பெரும்பாலும் நிலச் சுவான்தார்கள். ஊர் அம்மன் கோயில்களின் உற்சவத்தின் போது பலியிடப்படும் மிருகங்களின் இரத்தத்தை இம்மரபு ஆடவர் சுமந்து செல்லவேண்டும். [2]

## ஆறு நாட்டார்

இவரை மொட்டை வேளாளர் என்றும் கூறுவர். ஆறு நாடுகளில் இருப்பதால் ஆறு நாட்டார் எனவும் முகத்தில் தாடி மீசை வைத்துக்கொள்ளாமல் தலையில் மட்டும் கொஞ்சம் முடி வைத்துக்கொள்வதால் மொட்டை வேளாளர் எனவும் பெயர் பெற்றனர் என்பர். இவர் மத்தியில் அகமணப் பிரிவுகள் உண்டு. கோத்திரத்திற்கு வெளியேதான் திருமண உறவு வைத்துக்கொள்வர். விதவைகள் வெள்ளைப் புடவை உடுத்துவர் ; ஆபரணம் ஒன்றும் அணியார். உடன் பிறந்த சகோதரியின் பெண்ணை மணப்பதில்லை. பந்தர ரெட்டி மரபினர்போன்று பெண்கள் தங்கக் கொடியில் திருமாங்கல் யத்தை அணிவர். ஆறு நாடுகளில் சிறு குடி நாடு நாமக்கல்

---

2 Page 378 Castes and Tribes of South India Vol. VII E. Thurston

1 Page 386. 87 Castes and Tribes of South India Vol. VII. E. Thurston.

தாலுக்காவிலும், ஓமாந்தூர் நாடு முசிறிக்கருகிலும் இருக்கின்றன. மற்ற நான்கு நாடுகள் எவை? என்பதுபற்றித் தெரியவில்லை. இவர் மத்தியில் சாதிப் பஞ்சாயத்து முறை செயல்பட்டு வருகின்றது. அண்மையில் இவரது சாதி மாநாடு திருச்சியில் நடைபெற்றது பலர் அறிந்ததே.

சித்தக்காட்டூர் வேளாளர்

இவர் சித்தக்காட்டூர் பகுதியில் வாழ்ந்து வருவதால் இவ்வாறு வழங்கி வருகின்றனர் போலும். ஊன் உணவு எடார். [2]

பஞ்சுக்காரச் செட்டி

இவர் உடையார்பாளையப் பகுதியில் இருந்து வருகின்றனர். ஊன் உணவு எடுப்பர். பஞ்சு வியாபாரம் செய்ததால் இப்பெயர் பெற்றனர் எனலாம். ஆனால் தற்காலத்தில் இத்தொழிலில் இவர் ஈடுபடுவதாகத் தெரியவில்லை. [3]

சோழபுரம் செட்டி

ஏற்கனவே கும்பகோணம் வட்டாரம் சோழபுரத்தில் வணிகத்தில் ஈடுபட்டோர் இப்பெயர் பெற்றனர் எனலாம். ஊன் உணவு எடுப்பர். தற்போது இவர் கும்பகோணம் மட்டுமின்றி மாயூரம், நாகப்பட்டினம், திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் பகுதியிலும் காணப்படுகின்றனர். [4]

---

1 *Page 101 Trichirappalli Dt. Gazetteer. 1909 F.R. Hemingsway I. C. S. & Page 386. Castes and Tribes of South India Vol. VII. E. Thurston.*

2 *Page 101 Trichirappalli Dt. Gazetteer. 1909 F.R. Hemingsway I. C. S.*

3 *Page 101 Trichirappalli Dt. Gazetteer 1909 F.R. Hemingsway I. C. S.*

4 *பக்கம் 136, தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2. 1970*

நாயனார் :

இவர் மிகவும் சிறுபான்மையினர். உடையார்பாளையம் பகுதி காரைக்காட்டார் போன்று சமண சமயத்திலிருந்து இந்து மதத்திற்கு மாறியவர். இவர் ஊன் உணவு எடுப்பதில்லை.

ஏழூர் நாட்டு வேளாளர்

ஏழு ஊர்களில் முக்கியமாய் காணப்படுவதால் ஏழு நாட்டார் எனப் பெயர் பெற்றனர் எனலாம். இவர் மிகவும் சிறுபான்மையினரே.

இரத்னகிரி வேளாளர்

இவரை மலைகண்டான் வேளாளர் எனவும் வழங்குவர். குளித்தலை வட்டாரத்தில் இரத்னகிரி குன்றுக்கு அருகில் உள்ளனர். காலையில் எழுந்த உடன் அந்தக் குன்றை நோக்கி கண் முழிப்பதாகவும், அதிலுள்ள தெய்வத்தை வழிபடுவதாகவும், அதனால் இரத்னகிரி வேளாளர் என்பது வழக்கில் வந்ததாகவும் கூறுவர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் இவ்வகுப்பைச் சேர்ந்த சுமார் 2500 நபர்கள் இருப்பதாகத் தெரிகிறது. [1]

ஊத்துநாட்டு வேளாளர்

இவர் ஊத்தூரைத் தலைமையிடமாகக்கொண்டு அதன் சுற்றுப்புறங்களில் வசித்து வருவதால் இப்பெயர் பெற்றனர் என்பர். ஊத்தூரிலுள்ள சிவன் ஆலயத்தைப் பிரத்யேகமாய் வழிபடுவர்.

கணக்கிலி நாட்டார்

இவர் மிகவும் சிறுபான்மையினர். கணக்கிலி நாட்டில் குடியிருப்பதால் இப்பெயர் பெற்றனர் எனலாம். இவர்

1 பக். 135 தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2. 1970

சாதாரணமாய் மற்றப் பிரிவினருடன் மண உறவு வைத்துக் கொள்வதில்லை. ஆனால் பெண்கள் எண்ணிக்கை இவர் மத்தியில் அதிகம் இல்லாததால் மற்றப் பிரிவுகளிலிருந்து பெண்கள் எடுக்க ஆரம்பித்திருக்கின்றனர்.

### தட்சிண நாட்டார்

தென்னாடு அதாவது திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து சோழ நாட்டில் குடியேறியவர் இவ்வாறு வழங்கினர். ஆனால் இப்பெயர் சமீபகாலமாய் மங்கி வருகின்றது. இவர் ஊன் உணவு தவிர்ப்பர்.

### பண்டாரம்

இன்றைய வேளாளர்க்கென நன்மை துன்மைச் சடங்குகள் நடத்தி வைப்பவர் இவ்வாறு வழங்குகின்றனர். இவர் ஊன் உணவு எடுப்பதில்லை. சிலர் பூணூல் தரித்துக்கொள்வர். அய்யா என்ற பட்டம் பூண்டு வருவர். இக்காலத்தில் திருமணச் சடங்குகளுக்கு இவருக்குப் பதிலாக தெலுங்குப் பார்ப்பனக் குருக்களையே இன்று வேளாளரென்போர் தருவிக்கின்றனர்.

### இசை வேளாளர்

இவர் மேளக்கார வகுப்பைச் சேர்ந்தவர். சின்னமேளம், பெரிய மேளம் என இரு பிரிவுகள் இவர் மத்தியில் உள. பெரிய மேளம் என்பவர் தெலுங்கர் படையெடுத்த காலை அவருடன் தமிழகம் வந்தவர். இவர் மேளம் மட்டும் வாசிப்பர். இவர் நாவித வகுப்பைச் சேர்ந்த தெலுங்கர் என்பர், இசை நடனம் இவற்றில் ஈடுபாடு இல்லை. சின்ன மேளம் என்பவர் சில நூற்றாண்டுகளுக்கு முன்பு தெலுங்கு நாட்டிலிருந்து வந்த குச்சிப்பிடி நடனக் குழுவைச் சேர்ந்தவர் என ஒரு சிலர் கூறுவர். இவரும் மருத்துவரும் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், நாவிதத் தொழிலைவிட்டுவிட்டு கலைத் தொழில் மட்டும் மேற்கொண்டதாகவும் கூறுவாருமுண்டு. தமிழகத்தின் வட மாவட்டங்களில் நாவித வகுப்பார் மேளம் வாசித்து வருவது பலரும் அறிந்ததே. தேவ தாசி ஒழிப்புச் சட்டம் அமுலுக்கு

வரும்வரை இம்மரபுப் பெண்டிர் கோயில்களில் தேவரடியாரா கப் பணிபுரிந்து வந்ததுடன் பரத்தையர் தொழிலும் கலைத் தொழிலும் நடத்தி வந்தனர். இவர் தஞ்சை மாவட்டத் திலேயே பெரும்பாலும் காணப்படுகின்றனர், கைக்கோளர், செங்குந்தர் மரபினரிலிருந்தும் குடும்பத்திற்கு ஒரு பெண் வீதம் கோயில்களில் பணிவிடை செய்ய சிறு வயதிலேயே கோயிலுக்குப் பொட்டுக் கட்டுவதுண்டு.[1] இவர் மூலம் தோன்றிய ஆண்கள் மேளம் வாசிப்பர். அதனால் இவருக்கு மேளக்காரர் என்ற பெயரும் ஏற்பட்டது. எனவே இசை வேளாளர் என்பவர், தெலுங்குநாட்டிலிருந்து இங்கு குடியேறி யவர் தவிர்த்து, இங்குள்ள மருத்துவர், செங்குந்தர், கைக் கோளர் இவர்களிலிருந்து ஆலயங்களுக்குப் பொட்டுக்கட்டின பெண்கள் மூலம் தோன்றியவரும் அடங்குவர் எனலாம். இசை வேளாளர், கைக்கோளர், செங்குந்தர் இவரிடையே கொள்வினை, கொடுப்பினை, வழக்கில் இருப்பதாகத் தெரி கிறது[2] கொங்கு நாட்டிலும், தொண்டை நாட்டிலும் தேவ ரடியாராக நியமனம் பெற்றவர் செங்குந்தர், கைக்கோளர் வகுப்பைச் சேர்ந்தவர் என்பதால், இவரைப்போன்று இப் பகுதியிலுள்ள மேளக்காரர் முதலி என்ற குலப் பட்டம் தரித்து வருகின்றனர்.[3]

The title of Mudali is used chiefly by the offsprings of Devadasis [Dancing Girls] Kaikkolas and Vellalas.[3]

தென் மாவட்டங்களிலுள்ள இசை வேளாளர் பிள்ளை என்ற குலப் பட்டம் பூண்டு வருகின்றனர். இசை வேளாள ரில் வசதி படைத்தவர், இதர வேளாளர் பிரிவிற்குள் மண உறவு வைத்துக்கொள்வதுண்டு. கைக்கோளர், செங்குந்தர் போன்று வேளாளர் மரபிலிருந்து பெண்களை தேவரடியாராக

---

1 *Page 37 Castes and Tribes of South India Vol. III. E. Thurston.*

2 *பக்.185 தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2. 1970.*

3 *Page 84 Castes and Tribes of South India Vol. V. E. Thurston.*

கோயிலுக்குப் பொட்டுக்கட்டும் பழக்கம் பெருவழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. ஆக இசை வேளாளர், மேளக்காரர், கைக்கோளர், இன்றைய வேளாளர் இவர்களிடம் ஒரு பொதுத் தன்மை இருந்துவந்ததாக நாம் முடிவுகொள்ள வேண்டியுளது. [1]

Some of these (Devadasis) affix to thier names the terms of Pillai and Mudali which are the usual titles of the two castes (Vellalas and Kaikolas) from which most of the dasis are recurited and try to live down the stigma attaching to their birth. [1]

அச்சுக்கரை வேளாளர்

இவர் தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம், திருத்துறைப் பூண்டி வட்டாரங்களில் சுமார் 30 ஊர்களில் இருந்து வருவதாகத் தெரிகிறது. இவர் செடியூல் வகுப்பினர் போன்று தீண்டப்படாதவராகக் கருதப்படுகின்றனர். நாடு விடுதலை பெறும்வரை இந்து ஆலயங்களுக்குள் இவர் அனுமதிக்கப் படவில்லை. இவருக்கு நன்மை துன்மைச் சடங்குகள் நடத்தி வைப்பதற்கு இவர் மரபிற்குள்ளேயே பண்டாரம் இருக்கின்றனர். சமீப ஆண்டுகளில் செம்படவர், மீனவர், (பட்டினவர்) கரையான் இவர்களிலிருந்து வேளாளராக மாறினவர் எனலாம். இவரைக் கரையான் வேளாளர் எனக் கூறுவதும் உண்டு. [2]

வீரக்குடி வேளாளர்

இவர் வீரகோடி வேளாளர் என்றும் வழங்குவர். புதுக்கோட்டை மாவட்டத்தில் கோயில் வீரக்குடி, கண்ணன்குடி, ஆலங்குடிப்பட்டி, மருதூர், மங்காதேவன் பட்டி, வெள்ளனூர்

---

1 *Page 127. Castes and Tribes of South India Vol II. E. Thurston.*

2 *பக். 143. தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2. 1970.*

தஞ்சை மாவட்டம் அம்மையாபுரம் திருச்சி மாவட்டம் பொன் மலைப்பட்டி முதலிய ஊர்களில் இவர்கள் காணப்படுகின்றனர். விபூதியை அதிகம் பூசிக் கொள்வதால் பூச்சுக்கார வேளாளர் என்றும், வீர சோழ வேளாளர் என்றும் கூறிக் கொள்வர். ஊன் உணவு எடுப்பர். தர்ஸ்டன் வீரக்குடியான் என்பது இந்துக்களின் நன்மை துன்மைச் சடங்குகளில் சங்கு ஊதும் பணிசவன் என்பதன் மறுபெயர் என்கிறார். [1]

Virakudiyan - A synonym of Parisavans who are engaged in blowing the conch shell on ceremonial occassions.[1]

வடமாவட்டங்களில் பணிசவன் என்ற வகுப்பு இருந்து வருவது கண்கூடு. இவர் வள்ளுவரிலிருந்து பெயர் மாற்றம் பெற்றிருக்க வேண்டும். பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் ஏற்கனவே பணிசெய்வானாக இருந்த பெயரை வீரக்குடி வேளாளர் எனக் கல்வி இலாகாவினர் 1943-ல் மாற்றினதாகத் தெரிகிறது. ஆக வள்ளுவன் என்ற பெயர் பணிசவன் அல்லது பணிசெய்வான் ஆகி, இன்று வீரக்குடி அல்லது வீர கோடி வேளாளராக மாறியுள்ளதுபோலும். 1961-ஆம் ஆண்டு குடிக்கணக்கில் பணிசவன் அல்லது பணிசெய்வான் என்னும் பெயர் வள்ளுவன் என்பதற்குள்ள மறு பெயர் என்று கண்டுள்ளது.[2] பணிசவன், பணிசெய்வான் வகுப்பினர் சென்னை, செங்கற்பட்டு மாவாட்டங்களில் இருந்து வருகின்றனர். இங்கு துன்மைச் சடங்குகளின்போது இதரப் பகுதிகளில் நாவிதரும், செடியூல் வகுப்பாரும் செய்து வரும் பணியை இம்மரபினர் செய்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.[3] இவரைப் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்த்துள்ளதால் வேளாளரில் இதர பிரிவினரும் அரசினரிட

---

1 *Page 406Castes and Tribes of South India Vol.VII. E.Thurston.*

2 *1961 Madras census report.*

3 *பக். 115 தமிழ் நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2, 1970.*

யிருந்து கல்வி, அரசு பணிகள் இவற்றில் சலுகைகள் பெற தங்கள் சேய்களைப் பள்ளிகளில் சேர்க்கும்போதே மரபுப் பெயரை வீரக்குடி வேளாளர் எனப் பதிந்து வருவது கண் கூடு. வீரக்குடி வேளாளர் என்ற இவ்வகுப்பு சில குறிப்பிட்ட ஊர்களில் வாழ்ந்தாலும், தமிழகமெங்கும் முன்னேறிய இதர வேளாளப் பிரிவுகளிலுள்ளவர் இப்பெயரைத் தாராளமாய்ப் பயன்படுத்தி வருகின்றனர் எனத்தெரிகிறது. தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டாரத்தில் மதுக்கூரைச் சுற்றியுள்ள ஊர்களில் பெரும்பான்மையினராய்க் காணப்படும் வேளார் என வழங்குபவர் சமீப காலமாய் வீரக்குடி வேளா ளர் என்ற பெயரைப் பயன்படுத்தி வருவதாய்த் தெரிகிறது. சில நூற்றாண்டுகளுக்குமுன் காஞ்சிபுரம் பகுதியிலிருந்து சோழ மன்னன் ஒருவனால் இங்கு குடியேற்றப்பட்டதாகவும், காஞ்சி புரம் பகுதியிலிருந்து வந்ததன் நினைவாக காமாட்சி அம்மன் பெயரால் கோயில் எழுப்பி வழிபட்டு வருவதாகவும் இவர் கூறுவர். அண்மைக் காலம்வரை இவர் வேளார் என்றே வழங்கி வந்தனர். ஆனால் சமீப காலமாய் இவருள் முன் னேறியவர் வேளார் என்பதற்குப்பதில் வேளாளர் என்று கூறியும், பிள்ளை என்ற குலப்பட்டம் தரித்தும் வருகின்றனர். ஏற்கனவே கூறியதுபோன்று கல்வி, உத்தியோகம் முதலிய சலுகைகளை உத்தேசித்து வீரக்குடி வேளாளர் என்ற பெயரைப் பயன்படுத்தி வருவதாக அறிகிறோம்.

## தொண்டைமண்டலம்

செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்கள் இதில் அடங் கும். இங்குள்ளவர் முதலி என்ற குலப்பட்டம் பூண்டு வரு கின்றனர். வேளாளர் என்பவர் தவிர்த்து செங்குந்தர், கைக் கோளர், மருத்துவர், நாவிதர் இங்கு முதலி என்ற குலப்பட் டம் பூண்டு வருவது கண்கூடு. இங்குள்ள வேளாளருள் கொண்டைகட்டி, துளுவர், சோழியர் முதலிய பிரிவுகள் உண்டு. ஒருவரொருவருக்குள் கொள்வினை, கொடுப்பினை இல்லை. பழக்க வழக்கங்களும் இவருள் வேறுபடும். சோழிய வேளாளர்பற்றி ஏற்கனவே கண்டோம். மற்ற இரு பிரிவுகள் பற்றிக் கீழே காண்போம்.

துளுவ வேளாளர் :

தமிழக அரசு பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இவரை தொழு அல்லது துளுவ வேளாளர் என்று கண்டிருக்கின்றனர். அதோந்தைச் சக்கரவர்த்தி காலத்தில் தென்கன்னடமாகிய துளுநாட்டிலிருந்து இங்கு குடியேற்றப்பட்டதாக நெல்சன், ஸ்டூவர்ட் போன்றோர் கருதுவதுபற்றி ஏற்கனவே குறிப்பட்டது நினைவிருக்கத்தக்கது. அதோந்தைச் சக்கரவர்த்தி கி. பி. 7-ஆம் நூற்றாண்டுவாக்கில் காஞ்சீபுரத்தைத் தலைநகராகக் கொண்டதாகவும், ஆந்திரத்திலுள்ள சிரிசைலத்திலிருந்து ஆரியப் பார்ப்பனரை அழைத்து வந்து குடியேற்றி, அவருக்கு ஊழியம் செய்ய, துளுநாட்டிலிருந்து சூத்திர வேளாளரை வரவழைத்ததாகவும் கூறுவர். காஞ்சீபுரத்தில் நாட்டார், தேசாயி என இரு சமூகத் தலைமை இடங்கள் இருந்ததாகவும், அவரில் நாட்டார் என்பவர் இரல்லாபலிஜாவைச் சேர்த்தவர் என்றும், இவர்களது ஆணை சென்னைமாகாணம் முழுவதுமுள்ள இவ் வகுப்பார்மீது செல்லுமென்றும், ஆனால் பின்னர் அந்த அமைப்பு செல்வாக்கு இழந்துவிட்டதாகவும், எனினும் இம் மரபினர் தமது பிணக்குகளுக்குத் தீர்வு காண இங்கு செல்வதாகவும், தொண்டை மண்டலம் 24 கூற்றங்களாகவும் 79 நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்ததாகவும், இங்குள்ள அனைவரும் சமூக விவகாரங்களில் நாட்டார், தேசாயி அதிகார கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவர் என்றும் ஒரு சாரார் கூறுவர். 1

இவர் துளுவ வேளாளர் என வழங்குவதற்கு எவ்வித ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. துளு நாட்டிலிருந்து வந்திருப்பின் தமிழகத்திலுள்ள தெலுங்கர் தெலுங்கு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருப்பதுபோன்று, இவர் துளு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருப்பதுடன், இவர் பேச்சு வழக்கில் துளு மொழிக் கலப்பு சிறிதும் காண்பதற்கு இல்லை.

---

1 Madurai Manual J. H. Nelson & Page 382 Castes & Tribes of South India vol. VII E. Thurston.

தமிழக அரசு பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் துளுவ வேளாளர், அகம்படியர் இருவரையும் சேர்த்து ஒரே பிரிவாகக் கண்டுள்ளனர். இங்குள்ள அகம்படியர் முதலி என்ற குலப் பட்டம் தரித்து வருகின்றனர். சென்னைக்கு அருகில் இருப்ப தாலும், பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் நீண்ட காலமாய் இருந்து வருவதாலும், இதர பிற்படுத்தப்பட்ட மரபினரைவிட கல்வி, உத்தியோகம் மற்றும் தொழில் துறைகளில் இவர் நன்கு முன்னேறியுள்ளனர். இவர் துளுவர் என்று வழங்குவது சரியன்று. பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் கண்டுள்ளபடி தொழுவர் என்று வழங்குவதே பொருத்தமாகும். ஏனெனில் அகம்படி என்பதுவும், தொழுவர் என்பதுவும் ஒரு பொருளையே உணர்த்துவதாயுளது. நல்ல கல்வி பெற்று உத்தியோகம் மற்றும் தொழிற்துறையில் மேம்பாடுற்றவர் குலஉயர்வு கருதி, தொழுவர் அல்லது அகம்படியர் என்பதற்குப் பதிலாக, துளுவவேளாளர் என்றும், நாட்டுப்புறங்களில் முன்னேற்ற மின்றிப் பயிர்த்தொழில் செய்து வருபவர் அகம்படியர் என்றும் கூறி வருவதாகவே நாம் கருத வேண்டியுளது. வேளாளருள் அகம்படிய வேளாளர் என்ற ஒரு பிரிவு இருந்து வருவது நினைவு கூரத்தக்கது.

தென் மாவட்டங்களில் துளுவ நாயக்கர் என்ற ஒரு சிறு பான்மை வகுப்பு ஆங்காங்கே இருந்துவருவது நாம் அறிந்ததே.[1] இம்மரபினரும் வேட்டைக்கார நாயக் கரும் ஒரே மரபாய் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இடம்பெற்றுள்ளனர். இவர் பொதுவாய் நாமதாரிகள்; திருமால் மதத்தைச் சேர்ந்தவர். நாயக்கர் என்ற குலப்பட் டத்தைக் கொண்டிருந்தாலும், இவர் தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இவரில் படித்து முன்னேறியவர் நாயக்கர் என்ற குலப்பட்டத்திற்குப் பதிலாய், பிள்ளை என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர்.

---

*பக். 87&226 தமிழகப் பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை 1970. பாகம் II*

தாதர் வகுப்பிலிருந்து இவர் பிரிந்தவரா? என்பது ஆய்வுக்குரியது. தாதர் என்பவர் மார்கழி மாதத்தில் இரவில் தெருக்களில் சங்கு ஊதுபவர் ஆவர்.

கொண்டைகட்டி வேளாளர் :

1891-ஆம் ஆண்டு குடிக்கணக்கின்படி இவரது எண்ணிக்கை 31012 ஆகும். இவர் தொண்டை மண்டல முதலியார் எனவும், வேளாளரிலேயே ஏன்? தமிழரிலேயே முதல் வகுப்பு எனவும், செய்யாறு, சூணாம்பட்டு சமீன்தார்கள் இம்மரபைச் சேர்ந்தவர் எனவும் பெருமை பாராட்டுவர். பெரும்பாலும் இவர் செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களில் காணப்படுகின்றனர். இதர மாவட்டங்களில் இவர் மிகவும் அபூர்வமாகவே இருந்தாலும், பெரிய நிலப்பிரபுக்களாகவும், செல்வந்தராகவும் செல்வாக்குப் பெற்று விளங்குகின்றனர். கொண்டைகட்டி என்ற பெயர், பெண்களைப் போன்று ஒருவிதமாய் தலை முடியைச் சுருட்டிக் கட்டுவதால் வந்ததென்பர் ஒரு சாரார் [1]. கொண்டல் கட்டி—மேகங்களைக் கட்டுகிறவர்—காரை ஆள்பவர்—காரளர் என்ற பொருள்பட கொண்டைகட்டி என மருவி வழங்கி வருவதாக வாதிப்பர் இன்னொரு சாரார். கொண்டைகட்டி என்பதற்கு மன்னர்க்கு மணிமுடி தரிக்கும் உரிமையுடையவர் என்று பொருள் கொள்வாரும் இல்லாமல் இல்லை. இக்கடைசிக் கூற்றுக்கு அடியிற் காணும் ஒரு பழங்கதையை ஆதாரம் காட்டுவர் :

'ஒரு காலத்தில் கொண்டைகட்டி வேளாளர்க்கும் கோமுட்டி செட்டியினர்க்கும் இடையே, இருவருள் யார் வைசியர்? என்பதுபற்றி சர்ச்சை எழுந்தது. அந்தச் சர்ச்சையைத் தீர்ப்பதற்காக மன்னனிடம் சென்று, தம்தம் குலம் பற்றிய வாதத்தை எடுத்துரைத்தனர். ஆரம்பத்தில் மன்னன் குழப்பமடைந்தான். பின்னர் தீர்க்க ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தான். இரு சாராரிடமும் தலா ரூபாய் ஐயாயிரம் கொடுத்து, அதைக்கொண்டு வணிகத்தொழில் நடத்தி

---

1 Page 356. Castes & Tribes of South India Vol. III-E. Thurston

வரவும், ஐந்து ஆண்டுகளுக்குப்பின் அந்த முதலைத் திருப்பித் தரும்படியும் பணித்தான். கோமுட்டிகள் பணத்தை வணிகத்தில் ஈடுபடுத்தினர். ஆனால் அதில் அதிக இலாபம் வரவில்லை. மாறாக கொண்டைகட்டி வேளாளர் என்போர், அத்தொகையைக் கொண்டு கரும்பு சாகுபடி செய்தனர். கரும்பு நல்ல பலனைக் கொடுத்தது. ஒவ்வொரு கரும்பிலும் முத்துக்கள் விளைந்தன. ஐந்து ஆண்டுகளுக்குப்பின் இரு சாராரும் மன்னனிடம் சென்று தாம் தாம் அடைந்த இலாபத்தைப்பற்றி எடுத்துரைத்தனர். மன்னன் கொண்டைகட்டி வேளாளர்மீது பிரீதியுற்று, மன்னர்க்கு மணிமுடி தரிக்கும் உரிமையை நல்கினன். [1]

[ குறிப்பு :- இக்கதை தெலுங்கர் ஆட்சி காலத்தில் தோன்றியது என அறிகிறோம். கோமுட்டிகள் தெலுங்கர் ஆட்சியின்போது தமிழகத்தில் குடியேறியவர். அதனால் அவர் தமிழகத்தில் குடியேறின பின்னரே இச்சர்ச்சை பற்றிய கதை வழக்கில் வந்திருக்க வேண்டும். ]

கொண்டல்—கார்—மேகம்— கட்டி—கட்டுகிறவர் ஆள்பவர் என்ற பொருளில், கொண்டல் கட்டி என வழங்கிப் பின்னர் கொண்டைகட்டி என மருவி வழங்குவதாக வாதிப்பது பொருத்தமற்றது. காராளர்—கார் காத்தவர் என்ற பெயர் பாண்டிய நாட்டிலேயே முதன் முதல் தோற்றம் பெற்றது என்றும், நாயக்கர் ஆட்சியின்போது செங்கற்பட்டு மாவட்டம் காரைக்காட்டிலிருந்து அங்கு குடியேறியவர் முதலில் காரைக்காட்டார் என வழங்கிப் பின்னர் சமீப காலமாய் குல உயர்வு நிமித்தம் கார்காத்தார் எனப் பெயரை மாற்றி வழங்கி வருவதாகவும் ஏற்கனவே கண்டோம். மேலும் இந்த கொண்டைகட்டி வேளாளர் என்பவர் பாண்டிய நாட்டிலிருந்து தொண்டைமண்டலத்தில் குடியேறியவர் என்று கூறாமல்; கங்கைப் பகுதியிலிருந்து குடிபோந்தவர் என்று கூறி வருவது குறிப்பிடத்தக்கது.

---

1 Page 380-88 Castes & Tribes of South India Vol: VII-E. Thurston.

இந்தக் கொண்டைகட்டியார் சாதி ஆச்சாரம் அதிகம் பார்ப்பவர். தமது பெண்களை வெளியே செல்ல அனுமதிப்ப தில்லை. [1] இவர் ஒரே மரபைச் சேர்ந்தவர் எனக் கருதுவதற் கில்லை. ஒரே ஊரில் வசிப்பவர்கூட கொள்வினை, கொடுப்பினை வைத்துக்கொள்வதில்லை. இவருள் பல உட்பிரிவுகள் [வகை யருக்கள்] இருப்பதாகத் தெரிகிறது. அந்தந்த வகையருவுக் குள்தான் மண உறவு வைத்துக்கொள்வர். [2]

Dr. K. K. Pillay says 'The sense of superiority persists to this day though covertly. All the Kondaikatti Vellalas even within the same village do not intermarry. Within each village cluster there are small endogamous units called Vakayaras.'

இம்மரபினர் சிறுவரைப் பள்ளியில் முதன்முதலில் சேர்க் கும்போது தெலுங்கு எழுத்துக்களையே எழுதக் கற்பிப்பதாக அறிகிறோம். [3] எம். பக்தவச்சலம் கூறுவதாவது:—'எனக்கும் அவனுக்கும் [ராஜரெத்தினம்] சேர்ந்தே அட்சராப்பியாசம் விமரிசையாய் நடந்தது. புரோகிதர் வந்து தரையில் நெல்லை யும் தவிட்டையும் பரப்பி எழுத்துக்களை எழுதிக் காண்பித்தார். முதலில் அப்படி எழுதிய எழுத்துக்கள் தெலுங்கு ஆகும். என் தாய் மொழி தமிழ் என்றாலும் தெலுங்கைப் பிற மொழியாகக் கருதாத காலம் அது. இவ்வளவுக்கும் அந்தக் கிராமம் தெலுங்குப் பிரதேசத்தை ஒட்டியுமில்லை' [எம். பக்தவச்சலம் தமிழக முதலமைச்சராய் இருந்தவர். இவர் கொண்டைகட்டி வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவர் என்பது ஈண்டு குறிப் பிடத்தக்கது]

---

1 Page 232.33 1891 Madras Census Report Vol. XIII H. A. Stuart.

2 Page 327 Studies in Indian History with special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.

3. தினமணி கதிர் 2-4-76 திரும்பிப்பார். எம். பக்தவச்சலம்.

இம்மரபினர் தெலுங்கு எழுத்தில் அட்சராப்பியாசம் செய்வதும், தெலுங்குப் புரோகிதரை அதை நடத்திவைக்க அமர்த்துவதுவும்,இவர் தெலுங்கர் ஆட்சியில் ஏற்றமும் தோற்றமும் பெற்றவர் என்பதை உணர்த்துவதாயுள்ளது. இவரது மரபைச் சேர்ந்தவர் எனக் கருதப்படும் அரியநாயகம் மதுரை விசுவநாத நாயக்கனிடம் அமைச்சனுகவும் படைத் தளபதியாகவும் இருந்தவன் என்பதுவும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. [புதுக்கோட்டைத் தொண்டைமான் தெலுங்கு மொழியை சமத்தான ஆட்சி மொழியாகவும், தெலுங்குப் பார்ப்பனரை குருவாகவும், நாட்டு வாழ்த்தை தெலுங்கு மொழியில் கொண்டிருந்ததுவும் மேலே கூறிய காரணத்தினுலேயே என்பது இங்கு குறிப்பிடத்தக்கது].

விசய நகர ஆட்சியிலும், அதற்குப் பின் மதுரை, தஞ்சை மற்றும் செஞ்சி இவற்றில் ஏற்பட்ட நாயக்கர் ஆட்சியிலும் இவர் செல்வாக்குப் பெற்றனர். பின்னர் ஆற்காட்டு நவாப் கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் பணியாற்றி சமூக பொருளாதார நிலையில் மேம்பாடுற்றவர் தம்மை முதன்மையான சாதி என்று பொருள் படும்படியாக முதலி என்கவும், அவரைப் பின்பற்றி கைக்கோளர், செங்குந்தர், சேனைத் தலைவர், அகம்படியர், தொழுவர், தேவரடியார், மருத்துவர் முதலானோர் தம்மை முதலி என்று கூற முற்பட்டனர். அதனுல் அவரிடமிருந்து பிரித்துக்காட்ட' முதலில் மேம்பாடுற்றவர் தம்மை தொண்டை மண்டல முதலி, கொண்டைகட்டி வேளாளர் எனக்கூற முனைந்தனர் எனலாம். இப்பகுதியைச் சேர்ந்த அரியநாயகம் மதுரை நாயக்கனிடம் அமைச்சனுக இருந்த போது, தமது உறவுமுறையாரை தஞ்சை, திருச்சி, மதுரை முதலிய மாவட்டங்களில் ஊர்கள், கோட்டைகள் அமைத்து அவற்றில் குடியேற்றி, நிலபுலன்கள் வழங்கி ஆதரித்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

இவரது பூர்வீகம் தொண்டை மண்டலமே. அங்கிருந்து பின்னர் விசய நகர், மற்றும் நாயக்கர் ஆட்சி காலத்

தில் படைத் தலைவர்களாகவும், அரசு அலுவலராகவும் பதவி பெற்று தமிழகத்தின் இதர பகுதிகளில் பரவியிருக்கின்றனர். [1]

'The original strong-hold of the Kondaikattu Vellalas was Thondaimandalam. Later they spread from there throughout Tamil Nadu. Some of them were employed in the King's Courts and others as Military leaders during expantionist times.' [1]

ஆங்கிலேயர் இந்த நாட்டைக் கைப்பற்றும்வரை, இம் மரபினர் தம் சமூகத்திற்கெனத் தனியாய் சங்கம் அமைத்து சமூக பொருளாதார மேம்பாட்டுக்காகப் பாடுபட்டு வந்துளர். இதன் விளைவாய் காலப்போக்கில் தங்கள் சமூகத்திற்கென ஒரு தனிப்பட்ட சமூகக் கோட்பாடுகளை வகுத்துக்கொண் டனர். [2]

Steve says 'Judging from Kondaikattu Vellala organisation the particular economic and social conditions created configurations in culture and local heirarchy that persisted until the advent of the British imperialism.[2]

ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்ட பின்னும் இவர் செல்வாக்கு ஓங்கியே இருந்தது. பார்ப்பனரல்லாத இயக்கம் தோன்றிய காலை, இதிலுள்ள நிலப் பிரபுக்கள் அதற்கு ஆதரவு நல்கினர். சம நீதிக் கட்சியில் [Justice Party] இம்மரபைச் சேர்ந்த எஸ். முத்தையா (முதலியார்), சர். பி. டி. இராசன் இவர்கள் அமைச்சராயினர். நாடு விடுதலை பெற்றபின் மத்திய, மாநில அமைச்சரவைகளில் இம்மரபைச் சேர்ந்தவர் அமைச்சர்களாய்

---

1 [Brahmin and Peasants in early South Indian history—Adyar Library Bulletin 1967—68 as quoted by Dr. K. K. Pillay in Studies in Indian History with special reference to Tamil Nadu.]

2 *Contributions to Indian Sociology - New Series Vol. 10 No. 1- Page 135—36.*

இடம்பெற்றனர். மத்திய அமைச்சரவையில் அமைச்சராய் இருந்த ஓ. வி. அளகேசன் இம்மரபைச் சேர்ந்தவரே. தி. மு. க. அமைச்சரவையில் சுகாதார அமைச்சராயிருந்த க. அன்பழகன் இம்மரபைச் சேர்ந்தவரே. தி. மு. க. அமைச்சரவையில் கல்வி அமைச்சராகவும், தற்போதைய அ. தி. மு க. அமைச்சரவையில் நிதி அமைச்சராகவும் பணியாற்றும் வி. ஆர். நெடுஞ்செழியனும் இம்மரபைச் சேர்ந்தவரே.

பெரியபுராணம் பாடிய சேக்கிழார் இம்மரபைச்சேர்த்தவர் என ஒருசாரார் கூறுவர். சிவாச்சாரியர் இவரை நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் வேளாண் குடியைச்சேர்ந்தவர் என்று கூறுவது அறிந்ததே. சேக்கிழார் என்ற பெயருக்கு வேளாளர் என ஒரு சிலர் பொருள் கொள்வர். ஆனால் ஏற்கனவே கண்டதுபோன்று, அவர் வேளாண்மரபினர் அன்று. சேக்கிழார் புராணத்தில் இவர் சேவை காவலர் [செய் 34] சேவையர் காவலர் [செய் 35] சேவையர் கோன் [செய் 49] சேவையர் குலாதிபன் [செய் 61] என்று குறிப்பிடப்படுகிறார். சேவை என்பது தொண்டு, தொழுதல், பணிதல், வணங்குதல் எனப் பொருள்படும். இது சமூகத்தொண்டு, சமயத்தொண்டு, அகம்படித்தொண்டு எனப் பலவிதப்படும். சேவை என்பதுவும், சேர்வை என்பதுவும் ஒரு பொருளையே உணர்த்தும் எனலாம். வி. கனகசபை பிள்ளை இம்மரபைச் சேர்ந்த செய்யாறு, குன்னம்பட்டு சமீன்தார்கள் சோழன் கரிகாலனால் குடி அமர்த்தப்பட்டவரின் வழித்தோன்றல்கள் என்று கூறுவதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. காரைக்காட்டார் போன்று இவர் தெலுங்கர் காலத்தில் ஏற்றம் பெற்றவர் என்பதில் எவ்வித ஐயமுமில்லை எனலாம். இம்மரபினர் வாய்மையுடையவர், சொன்ன சொல் தவறாதவர் என்றும் அதற்கு ஆதாரமாய் பெரியபுராணத்தில் கண்டுள்ள பழையனூர் நீலிகதையை எடுத்தாள்வர்.[1] கொண்டைகட்டி வேளாளர் வகுப்பைச் சேர்தவர் எனக்கருதப்படும் அரியநாயகம் மதுரைக்கு வருவதற்கு முன் விசயநகர மன்னன் கிருஷ்ணதேவராயனிடம் அமைச்சனாயிருந்தபோது நடந்த சம்பவம்பற்றி ஒரு கதை வழக்கில் உள்ளது. அக்கதையாவது:

1 சேக்கிழார் புராணம் செய் 15

'கிருஷ்ணதேவராயன் விசய நகர மன்னனுயிருந்தபோது, அவனிடம் வெள்ளாள வகுப்பைச் சேர்ந்த உம்பி அல்லது அமுலமுதலி முதலமைச்சனுயிருந்தான். அந்த முதலமைச்ச னுக்கு இடையர் வகுப்பைச்சேர்ந்த வினைதீர்த்தப்பள்ளி என் பவன் செயலாளராய் இருந்தான். ஒரு நாள் பசுவத சேவர் அல்லது தெருக்கூத்தாடும் நாடகக்குழுவினர் கிருஷ்ண தேவராயன் அவையில், அவனது முன்னிலையில் ஒரு நாடகம் நடத்தினர். அதில் ஒரு நடிகன் தயிர்க்காரி வேடம் தாங்கி நடித்தான். அவனது நடிப்பு இடைச்சியின் நடையுடை பாவனை, பேச்சு இவற்றை நன்கு ஒத்திருந்தது. கிருஷ்ண தேவராயனும் அவனைச்சேர்ந்தவரும் இதை நன்கு ரசித்தனர். முதலமைச்சன் இதை வேறு கண்ணோட்டத்துடன் அணுகினுன். தனது செயலாளன் மரபுப்பெண்ணின் நிலை இழிவுபடுத்தப் பட்டதுபற்றி அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சியை உண்டு பண்ணியது. இவனது மனநிலையை அறிந்த அவனது செயலாளன் முதலமைச்சன் நாணும்படியாக அவனுக்குப் பாடம் கற்பிக்கும் முகத்தான் வெள்ளாளச்சாதியின் வண்டவர் ளத்தைப்பகிரங்கமாய் நகைப்புக்கு உள்ளாக்கத்திட்டமிட்டான். இதை மனத்திற்கொண்டு நாடகக்குழுவினர் திட்டமிட்டிருந்த இன்னொரு நிகழ்ச்சியில் வெள்ளாளப் பெண் வேடத்தில் ஒரு நடிகனை நடிக்க ஏற்பாடு செய்தான். இந்தத்திட்டம் முதல் அமைச்சன் கவனத்திற்கு எப்படியோ எட்டியது. இம்முயற்சி நிறைவேறினுல் தனது கௌரவம் பாதிக்கப்படும் எனக்கருதி, அதை எங்ஙனமேனும் தடுத்தாக வேண்டுமென்று முடிவு செய்தான். ஆனுல் இதில் அவனுடன் ஒத்துழைக்கக் கூடியவர் ஒருவரும் அங்கு இல்லை. அதனுல் ஒன்றும் புரி யாமல் வலங்கைச் சாதியைச் சேர்ந்த கன்னடச் செட்டியின் உதவியை நாடினுன். இக்காலக் கட்டத்தில் இடங்கைச்சாதி யினரின் கை ஓங்கியிருந்தது. இந்த இடங்கையினர் வலங்கைச் சாதியினர் ஒருவரும் பயிர்த் தொழில், வணிகம் ஒன்றிலும் ஈடுபடக்கூடாதென அரசாங்கத்தாரிடமிருந்து தடை உத்தரவு பெற்றிருந்தனர். இதைக் கன்னடச்செட்டி முதலமைச்சனிடம் சுட்டிக்காட்டி வலங்கைச் சாதியார் கலகம் செய்தால், வேளாளர் பயிர்த் தொழில் செய்வதை அரசு தடை

செய்ய நேரிடுமெனவும், அதனால் அரசுக்கு வரக்கூடிய வருமானம் பாதிக்கப்படுமெனவும், அதை ஈடுகட்ட தனது வலங்கைப் பிரிவினர் கோரிக்கைகளுக்கு அரசாங்கம் இணங்க நேரிடும் எனவும், இது காரியத்தில் முதல் அமைச்சனுக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை எனில், தான் அவனுக்கு உதவுவதாகவும் இசைவு தந்தான்.

அன்று இரவு வழக்கம்போல் அரசனது முன்னிலையில் நாடகம் நடத்துவதற்கு நாடகக் குழுவினர் ஆயத்தத்துடன் வந்துகொண்டிருந்தனர். அவருள் ஒருவன் வெள்ளாளப் பெண் வேடம் தாங்கியிருந்தான். இதைப் பார்த்த கன்னடச் செட்டி அந்த நடிகனைத் தாக்கிக் கொன்றுவிட்டான். இதனால் பெரும் கலவரம் ஏற்பட்டு, நாடகம் நடைபெறாமல் போய்விட்டது. அதன் மூலம் முதலமைச்சன் தன் சுய கௌரவத்தைத் தக்கவைத்துக்கொண்டான். இது விபரம் கிருஷ்ணதேவராயன் செவிக்கு எட்டியது. அவன் முதல் அமைச்சனையும் அவனது செயலாளனையும் வரவழைத்து அவர் இருவரது செய்கைகளையும் கண்டித்து அறிவுரை நல்கினான். இதிலிருந்து வேளாளர் இடங்கைச் சாதிக்கு விரோதமாய் வலங்கைச் சாதியினருக்கு உதவி வரலாயினர். [1]

இதுபோன்ற கதைகளிலிருந்தும், மற்றும் பல்வேறு சான்றுகளிலிருந்தும விசய நகர, மற்றும் நாயக்கர், முகம்மதியர், ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் தொண்டைமண்டலப் பகுதியில் செல்வாக்குப் பெற்றவர், தம்மை ஒரு தனிப்பிரிவாகப் பாவித்து வரலானதாக நாம் கருத வேண்டியுள்ளது. கோயில், மடங்கள், அரசாங்கம் இவற்றில் பணி செய்த கூட்டந்தான் இவர். மேனாட்டார் முதலி என்பதற்கு கணக்கெழுதுபவர் [Accountant] என்றே குறிப்பிட்டுள்ளனர் [2] அந்நியர் ஆட்சி

---

1 *Page 364. 66. Castes & Tribes of South India Vol. VII E. Thurston.*

2 *History of the Jesuit Mission in Madura in the 17th and 18th centuries J. S. Chandler M. A. 1909.*

யில் அரசு பணியில் ஈடுபட்டவர் குடிகளுக்கு இழைத்த கொடுஞ்செயல்கள் கொஞ்சநஞ்சமன்று. இலஞ்சம் தாண்டவ மாடியது. உழவர் குடி கசக்கிப் பிழியப்பட்டனர். சித்திர வதைக்கு உள்ளாயினர். இம்மாதிரி கணக்கெழுதிப் பிழைத்த கூட்டத்தைக் கண்டு மக்கள் நடுங்கிய காலம் மறைந்து வெகு காலம் ஆகவில்லை. இதனாலேயே 'காடுகெட ஆடுவிடு; ஆறு கெட நாணல் விடு; ஊர் கெட நூல் விடு; மூணும் கெட முதலி விடு' என்ற பழமொழி வழக்கில் வந்தது போலும். முதலி என்பவர் கலப்பினம் என்றே கருத வேண்டியுளது. எம். ஏ. செரிங் என்பவர் முதலி என்ற விவசாய மரபினர் ஆரிய, ஆரிய ரல்லாத இரு மரபுக் கலப்பினம்[1] என்று கூறுவது கவனிக்கத் தக்கது.

[ Mudali-the agricultural tribe are parlty of Aryan and parlty of Non-Aryan origin. The darkness of the complexon and peculiarity of the features of some of them point to the supposition that they are largely connected with the aborgnial tribes][1]

## பூனமல்லி (பூவிருந்தமல்லி) வேளாளர்

1891-ஆம் ஆண்டு குடிக் கணக்கில் இம்மரபினர் எண்ணிக்கை 22086 எனக் கண்டுள்ளது. பூனமல்லியில் ஏற்கனவே ஒரு பாளையம் இருந்ததாகத் தெரிகிறது.[2]

செங்கற்பட்டு மாவட்டத்தில் ஒரு சில குறிப்பிட்ட ஊர்களில் இவர்கள் வசிக்கின்றனர். தம்மை ஆற்காடு முதலியார் பிரிவைச் சேர்ந்தவர் என்றும், உயர் துளுவ வேளாளர் என்றும் கூறுவர். கல்வி, அரசுபணி முதலிய சலுகைகளுக்காக அகம்படியர் என்றோ, துளுவ வேளாளர் என்றோ கூறுவர்,[3]

---

1 *Page 112. The Tribes and Castes of Madras Presidency, M. A. Sherring*

2 *Page 232 Madras Census Report 1891. Reprt Vol. XIII. H. A. Stuart.*

3 *பக்கம் 213 தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு அறிக்கை பாகம் 2 1970,*

பொன்னேரி வாழ் வேளாளர் சேணியரைச் சேர்ந்தவர் எனக் காளமேகப் புலவர் கூறுவது காண்க.

'கம்மாளனங்கிக் கணக்கனவே தான் துதித்தார்
செம்மான் சதுரதைத் திருவாசை—அம்மாகேள்
வாணியனும் பொன்னேரி வாழ் வெள்ளாளனும்
சேணியனு மென்றே தெரிந்து.'

சேணியர் என்பது துணி நெய்பவர் ஆவர். துணி நெய்யும் செங்குந்தர், கைக்கோளர் முதலி என்ற குலப்பட்டம் தரித்து வருவதாக ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத் தக்கது.

## கும்பிடிச்சட்டி வேளாளர்

இவர் வட ஆற்காடு மாவட்டத்தில் காணப்படுகின்றனர். மிகவும் சிறுபான்மையினர். மற்றவரைவிட மிகவும் கீழாகக் கருதப்படுகின்றனர். வேளாளர் ஈமச் சடங்கின்போது இவர் நெருப்புச் சட்டி தூக்கிச் செல்லவேண்டும். [1]

செம்பி நாட்டு மறவர் ஈமச்சடங்கிற்கு அப்பகுதிவாழ் சேர்வை என வழங்கும் அகம்படியர் நெருப்புச் சட்டி தூக்கிச் செல்வதையும், வேலைக்காரராகக் கருதப்படுவதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இவர் பணி செய்வான் வகுப்பைச் சேர்ந்தவர் எனக் கருத ஏதுவாகிறது.

## கொங்கு வேளாளர்

கொங்குநாடு என்பது சேலம், கோயம்புத்தூர், திருச்சி மாவட்டத்தின் மேற்குப் பகுதி அடங்கும். கொங்கு வேளாளர் என்பவர் ஏற்கனவே கூறியது போன்று கவுண்டர் என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர். 1891ஆம் ஆண்டு குடிக்கணக்கின்படி இவரது எண்ணிக்கை 4,19,526 ஆகும்: [2] இவருள் வெள்ளாளக் கவுண்டர், நாட்டுக் கவுண்டர், நரம்புகட்டிக் கவுண்டர், திருமுடி வெள்ளாளக்கவுண்டர்,

---

*1 North Arcot Dt. Manual H. A. Stuart.*

*2 Madras Census Report 1891-Vol. XIII. H. A. Stuart*

தொண்டுக் கவுண்டர், பாலக் கவுண்டர், பூசாரிக் கவுண்டர், அனுப்பக் கவுண்டர், குறும்பக் கவுண்டர், படைத்தலைக் கவுண்டர், செந்தலைக் கவுண்டர், பவளங்கட்டி வெள்ளாளக் கவுண்டர், பால வெள்ளாளக் கவுண்டர், சங்கு வெள்ளாளக் கவுண்டர், ரத்னகிரிக் கவுண்டர், வெள்ளிக்கைக் கவுண்டர், ஆற்றங்கரைக் கவுண்டர், மலையடிக் கவுண்டர், தொள்ளக் காதுக் கவுண்டர், முடவாண்டிக் கவுண்டர் என்ற பிரிவுகள் இருந்து வருகின்றன. அந்தந்த உட்பிரிவுகளுள்தான் கொள் வினை, கொடுப்பினை வைத்துக்கொள்வர். இதரப் பகுதிவாழ் வேளாளருடன் பழக்க வழக்கங்களில் பெரிதும் வேறுபடுகின் றனர். நன்மை, துன்மைச் சடங்குகள் நடத்தி வைக்க மற்ற பிரிவினரைப்போன்று தெலுங்குப் பார்ப்பனக் குருக்களை வைத்துக் கொள்ளாமல் தங்கள் மரபினருள் 60 வயது நிரம் பிய தம்பதிகளை அருமைக்காரன், அருமைக்காரியாக தேர்ந் தெடுத்து, அவரது முன்னிலையில் சடங்குகளை நடத்தி வருகின் றனர். திருமணத்தின்போது நாவிதர் திருமாங்கல்யத்தை வாழ்த்துப்பாடி மணமகனிடம் கொடுக்க, மணமகன் அதை மணமகள் கழுத்தில் கட்டுவது வழக்கம். இறுதிச் சடங்கின் போது இறந்த நபரின் வாரிசுகள் நெருப்புச்சட்டி எடுக்காமல் பறையர் அதை எடுத்துச் செல்வர். இவர்க்கெனத் தனியாய் பறையர், வண்ணார், நாவிதர் இருப்பது பற்றியும், அவர்கள் ஏன் தனியாய் அமர்த்தப்பட்டனர் என்பது பற்றியும் ஏற் கனவே கண்டுள்ளது நினைவிருக்கத்தக்கது.

மற்ற வேளாளருக்கும் இவருக்கும் இடையே நிலவும் பழக்க வழக்க வேறுபாடு பற்றி தர்ஸ்டன் கூறுவதாவது: ' கொங்கு வேளாளர் பெயரளவிலன்றி வேறு ஒரு விதத்திலும் மற்ற வேளாளருடன் ஒத்திருப்பதாகக் கூறமுடியாது. மற்றப் பிரிவினரைவிட இவர் கீழாக மதிக்கப்படுகின்றனர். ரெட்டி யார் இவரது இல்லத்தில் உணவு உட்கொள்வதில்லை. ஆனால் இவர் தொட்டியான் மற்றும் கீழ் சாதியினர் இல்லங்களில் உணவு எடுப்பர். சிறு பையனுக்கு வயது வந்த பெண்ணை மணமுடித்து, மணமகன் தக்க பிராயம் எய்யும்வரை அவனது (கணவனுக்குரிய) கடமையை அவனது தந்தை மேற்கொள்வ துண்டு. மணமகன் தக்க வயது அடையும்போது அவனது

மனைவி இரண்டு மூன்று குழந்தைகளுக்குத் தாயாகி இருப்பாள். இக் குழந்தைகளை அவன் தனக்குப் பிறந்ததாகவே பாவித்தாக வேண்டும். இம்மாதிரிக் கட்டத்தில் வயது வித்தியாசத்தினால் மனைவியை அவளது கணவனும் மாமனாரும் புறக்கணிக்க வாய்ப்பு ஏற்படும். இந்த சந்தர்ப்பங்களில் அவள் தன் சமூகத்திற்குள் தான் விரும்பும் ஆடவரோடு தொடர்பு வைத்துக்கொள்ளலாம். ஆனால் நடத்தை எப்படி இருப்பினும் அவள் தனது கணவன் வீட்டிலேயே தொடர்ந்து வாழவேண்டும். இம்மாதிரிப்பட்ட பெண்களும், விதவைகளும் பிறசமூகத்தினருடன் உறவுகொண்டு பிறக்கும் சந்ததியினர் முடவாண்டிக் கவுண்டர் என வழங்கினர். கொங்கு வேளாளருள் பிறக்கும் அங்கஹீனமான குழந்தைகளை இந்த முடவாண்டிக் கவுண்டரின் பராமரிப்பில் விடுவதாகக் கூறுவர். [1]

'Kongu Vellalas have little in common with the other Vellalas except their name and appear to hold a lower position in society. For Reddis will not eat with them and they will dine with Tottiyans and others of the lower non-brahmin castes...... A young boy is often married to a grown up woman and it is admitted that in such cases the boy's father takes upon himself the duties of a husband until his son has reached maturity and the wife is allowed to consort with any one belonging to the caste.' [1]

இக்கொங்கு வேளாளர்பற்றி 1891-ஆம் ஆண்டு குடிக் கணக்கில் கண்டுள்ளதாவது: 'வேளாளர் என்பவர் விதவைகளை மறுமணம் செய்யும் காரைக்காட்டார் மனுநெறியை இம்மி கூடப் பிசகாமல் கடைப்பிடித்துவரும் தொண்டை மண்டலத்தார், பெயரளவில் சைவர் எனக் கூறிவரும் சோழியர், இதர

---

*1 417. 18. Castes and Tribes of South India Vol. III E. Thurston.*

வேளாளப் பிரிவினருள் ஒருவர்கூடக் கலந்து உணவு உண்ணாத கொங்கர் இவரை உள்ளடக்கியது.'[1]

'The 1891 Census Commissioner noted that the Vellala Category embraced Karaikkats who remarried the widows along with Tondamandalas who rarely over-stripped the Code of Manu and Sozhias who were the finikiest of Vegetarians along with Kongas with whom no other Vellalas would break bread with.' [1]

ஏற்கனவே கூறியதுபோன்று இவர் தம்மை கவுண்டர் என்றே கூறுவர். வே ளா ள ர் என்று கூ று வ தி ல் லை. மற்ற வேளாளப் பிரிவினரைவிட மிகவும் பெரும்பான்மையின ராயுளர். கொங்குநாடு பெரும்பாலும் காடு, மலைகளடர்ந்த முல்லை, குறிஞ்சி நிலப் பகுதியாகும். இங்கு பண்டைய நாளில் வேட்டுவர், ஆயர்தான் அதிகமாய்க் குடியிருந்தனர். ஆனால் வேட்டுவக் கவுண்டர், அனுப்பக் கவுண்டர், குறும்பக் கவுண்டர் தவிர மற்றவரை கொங்கு வேளாளர் என்றே அரசு ஆவணங்களில் குறிப்பிட்டு வருகின்றனர். குறும்பர் ஆநிரை பேணுபவர். இவர் கன்னடத்தைத் தாய்மொழியாய்க்கொண் டவர். அனுப்பக் கவுண்டரும் கன்னடியர் என்றே தெரிகிறது. திருமுடி வெள்ளாளக் கவுண்டர் என்பவர் தேவரடியார் வகுப் பைச் சேர்ந்தவர் என்று கூறுவர். வேட்டுவக் கவுண்டர் என் பவர் பண்டையக் குறிஞ்சி நில மக்களேயாம். இப்பகுதியில் வேளாளர் எண்ணிக்கை அதிகமாய் இருப்பதுபற்றி எம். சீனி வாச அய்யங்கார் கூறுவதாவது: 'தமிழ் மூவேந்தர்பற்றிய அடையாளக் கூறுகளைக் காண்பதற்கில்லை. அனேகமாய் அவர்கள் கலப்பற்ற வேளாளருடன் கலந்திருக்கவேண்டும். ஏன் கலப்பற்ற வேளாளர் என்று கூறுகிறேன் எனில் பலதரப் பட்டவரும் தம்மை வேளாளர் என வழங்க முற்பட்டிருக்கின் றனர். இதற்குச் சான்றாக 'வேட்டுவரில் வேளாளன் கரிய

---

1 Page 232. Census of India 1891 Vol. I. & South India and Political Change-1880-1940 C. J, Baker and D. A. Washbrook

ஞன மருதங்க வேளான்' என்ற கல்வெட்டு சான்ருகும். பெரும்பாலான கொங்கு வேளாளர் முன்ஞளில் வேட்டுவரா யிருந்தவர் எனத் தெரிகிறது. ஏனெனில் கோயம்புத்தூர் மாவட்டத்தில் நியதிக்கு மாருக வேளாளர் எண்ணிக்கை அதிகமாய் இருப்பது இவர்கள் உண்மையில் திராவிடர் அல் லது வேளாளராய் இருக்க முடியுமா ? என்ற ஐயப்பாட்டைத் தோற்றுவிப்பதாயுள்ளது. [1]

M. Srinivasa Ayyangar says 'No traces of the Tamil Kings are to be found in this country and it is highly probable that they should have merged with the pure Vellala Caste. We say pure because the Vellala Caste has been receiving additions from other tribes as the following extract will show (*வேட்டுவரில் வேளாளன் கரியஞன மருதங்க வேளான் S II Vol.III. P.45*) Most of the Kongu Vellalas were formerly Vettuvas. The preceding statement will show that Coimbatore District contains an unusually large number of Vellalas—a fact which casts a serious doubt about the pure Dravidian or Vellala origin. [1]

கொங்கு வேளாளருள் 90-க்கும் அதிகமான கூட்டப் பெயர்கள் காணப்படுகின்றன. இவை பொதுவாய் மரம், செடி, பறவை முதலிய பெயர்களைத் தாங்கிவருவது கவனத் திற்குரியது.

ஓதாளர், பூசர், செம்பூதர், ஆலன், ஆதன், புல்லி, மலை யர், பையர், சேட்டார், மயிலர், முட்டை, ஊரலர், சாத் தந்தை, கோவர், குழையர், கோவேந்தர், செம்பர், பண் ணர், மாடை, காடை, ஆந்தை, பொருளந்தை, கண்ணந்தை, கொற்றந்தை, தேவாந்தை, சாத்தாந்தை, மணியன், தூரன், செங்குன்றியர், செவ்வாயர், செங்கண்ணர், வண்ணக்கர், சேரன், புத்தன், பொடியன், வேந்தன், முத்தன், காரிமூலகுலம், நீலன், கனவாளன்,

1 *Page 62. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

வில்லி, செல்லன், ஆதி, அத்துவன், சேடன், பதறியர் சேரலன், பெரிய குலம், கருந்துளி, பவழன், பனையன் பூந்தன், பாண்டியன், கணக்கன், குண்டெலி, கூரை, கீரன் மேதி, எண்ணை, வெண்டுவன், ஈஞ்சன், குயிலர், குங்கிலியர் பயிரன், மழவடிகர், தோடை, துந்துமன், சோமன், தழிஞ்சி காடன், கவுரியன், நாரை, நீருண்ணியர், நந்தர், உழவர் பனங்காடை, புன்னை, மொய்ம்பன், கவளன், பெருங்குடியன் தனஞ்செயன், தேவேந்திரன், பொன்னன், ஆதிரையன் கிளியர், கம்ப குலம், சாத்துராயன், சிலம்பம், பழமன் வெள்ளம்பர், கண்ணன், [1] ஒநாளர் குறவஞ்சி எனும் அழகுமலைக்குறவஞ்சி இவருள் 96 கூட்டங்கள் [பிரிவுகள்] இருப்பதாகக் கூறும்.

இப்பிரிவுகளிலிருந்து இவர் மருத நிலக்குடிகள் என்று கூறுவதற்கில்லை. இவர் பண்டுதொட்டு குறிஞ்சி, முல்லை நில மக்களாகவே இருந்து வந்திருக்கவேண்டும். நாடு விடுதலை பெற்ற பின்தான் இவர் கல்வியிலும், பொருளாதாரத்திலும் முன்னேறியிருப்பதாகக் கருதவேண்டியுளது. இவரைப் பெயரளவில்தான் வேளாளர் என மேனுட்டார் கூறியிருப்பது நினைவிருக்கத்தக்கது. கொங்கு நாட்டில் உள்ளவர் பொதுவாய் நாகரிகமற்றவர் என்பதைக் குறிக்கவே தமிழகத்தில் இதரப் பகுதியிலுள்ளவர் தமக்குள் ஒருவரொருவரைக் குறைபடும்போது 'என்ன கொங்கனையன் மாதிரிப் பேசுகிருய்' என்று கூறுவது சர்வசாதாரணம். இடைக்காலத்தில் கொங்கு நாட்டையும், அங்கு வதிந்த மக்கள் பற்றியும் கம்பன் பாடினதாகக் கூறப்படும் ஒரு பழம்பாடலைக் கீழேகாண்போம்:

'நீரெல்லாம் சேற்று நாற்றம்; நிலமெல்லாம் கல்லும் முள்ளும்.
ஊரெல்லாம் பட்டிதொட்டி; உண்பதோ கம்மஞ்சோறு.
பேரெல்லாம் பொம்மன் திம்மன்; பெண்களோ நாயும் பேயும்
காடெலாங் கொங்குநாட்டைக் கனவிலுங் கருதாணேதே'

---

1 *கொங்கு நாட்டுக் கவுண்டர் வரலாறு வித்துவான் வி. இராமமூர்த்தி, பி. லிட்.*

அதெலெஸ்டேன் பெய்னஸ் என்பவர் கொங்கு வேளாளர் என்பவர் ஒரு தனிவகுப்பு என்கிறார். அவர் கூறுவதாவது: 'கோயம்புத்தூரைச் சுற்றியுள்ள பகுதியில் வாழும் கொங்கு வேளாளர் என்போர் இதர வேளாளர்களைவிட மிகவும் கீழ் நிலையில் உள்ளனர். மற்ற ஒரு பிரிவினரும் இவரது இல்லத்தில் உணவு எடுப்பதில்லை. கவண்டன் என்ற ஒருதனிச் சாதியாகவே இவர் கருதப்படுகின்றனர்.' [1]

'The Kongas on the other hand who are found in and around coimbatore are so far-below the rest that none of the other sub-divisions will eat with them and they are some-times considered a separate Caste under the name of Kavandan.' [1]

பாண்டிய நாட்டிலுள்ள பாணர் மரபினர் தம்மைப் பாண்டிய வேளாளர் எனவும், சோழ நாட்டில் வேளாளர் எனக் கூற முனைபவர் தம்மைச் சோழிய வேளாளர் எனவும் வழங்குவது போன்று, கொங்கு நாட்டில் ஒருசாரார் தம்மைச் சேரகுல வேளாளர் என வழங்க முனைந்திருப்பதாகத் தெரிகிறது. தமிழகத்திலிருந்து திருவனந்தபுரம் பகுதியில் குடியேறியவர் சிலர் தம்மைக் கும்பகோணம் வேளாளர், தென்காசி வேளாளர் எனக் கூறி வருகின்றனர். இவர்களுள் தொழுபுழா மாவட்டத்தில் இருப்பவர் தொழுபுழா வேளாளர் எனவும் வழங்கி வருகின்றனர்.

தமிழகத்தில் பல்வேறு தொழில் மக்களும் தம் குல உயர்வுக்காகத் தங்களை வேளாளர் என வழங்குவது பற்றி தர்ஸ்டன் கூறுவதாவது: 'ஏற்கனவே குறிப்பிட்டுள்ள வேளாளர் தவிர்த்து, வேறு பல்வேறு பிரிவினரும் தம்மை வேளாளர் என உரிமை பாராட்டி வருகின்றனர். இவர் உண்மையான வேளாள மரபினருடன் சாதாரணமாய் மண உறவு கொள்ள

---

1 *Page 54-55. Ethnography Sir Athelestane Baines.*

முடியாது. எனினும் வேளாளர் என வழங்குவோர் தமிழக மெங்கும் பரவலாக இருந்து வருவதால் மேலேகூறிய பிற மரபினர் ஏதாவதொரு பிரிவுனுள் மணஉறவு கொண்டு கலந்து விடுவது எளிதாகின்றது. சில தலைமுறைகளுக்குள் இம்மாதிரிப் புதிதாய்க் கலந்த வேளாளர் யார்? என்பது அடையாளம் காணமுடியாதவாறு தடமற மறையவும், அம்மாதிரிக் கலந்த வர் பின்னர் தம்மை உண்மையான பண்டைய வேளாளர் எனப் பாராட்டி பெருமிதம் கொள்வதுவும் சாத்தியமே. மல பாரில் உள்ள நாயரும் இவர் போன்றவரே. இம்மாதிரி இரத்தக்கலப்பின் விளைவாய், வேளாளர் ஒரே சீரான உடற் கட்டு, அங்க அமைப்பு, தோற்றம் உள்ளவராய் நாம் காண முடியவில்லை. இம்மாதிரிப் பலதரப்பட்ட பிரிவினரும் தம்மை வேளாளர் என வழங்குவதற்குச் சான்றுகள் இல்லாமல் இல்லை. உதாரணமாக வேட்டுவ வேளாளர் உண்மையில் வேட்டுவரே. புளுவ வேளாளர் ஏற்கனவே புளுவராயிருந்தவர். இல்லம் வேளாளர் என்பவர் ஏற்கனவே பணிக்கராவர் [ஈழவர்] கரைத்துறை [கடற்கரை] வேளாளர் கடற்கரையில் காணப் படும் கரையான் வகுப்பிலிருந்து மாறினவர். கருக்குமட்டை வேளாளர் [பனைமரத்து மட்டை] ஏற்கனவே சாணாராயிருந்து மாறியவர். கசுல (வளையல்) வேளாளர் பலிசா வகுப்பைச் சேர்ந்தவர். குகவேளாளர் செம்படவர் பிரிவைச் சேர்ந்தவர். இரகுடி வேளாளர் வண்ணாராயிருந்தவர் ஆவர். தேவ ரடியார் வகுப்பில் பிறந்தவர் முதலி, பிள்ளை என்ற குலப்பட் டங்கள் பூண்டு காலப்போக்கில் வேளாளர் என உரிமை பாராட்டுபவர்.ஏன்? பறையர்கூட மற்றவர் தம்மை வேளாளர் எனக்கருதும்படி பிள்ளை என்ற குலப்பட்டம் தரித்து வருவது கண்கூடு. கரையான்கள் தம்மை அச்சு வேளாளர் என்றும், பட்டணவர் தம்மை தாம் வழிபடும் தெய்வமாகிய வருணன் பெயரால் வருணகுல வேளாளர் அல்லது வருணகுல முதலி என்றும் கூறிவருவதை அறிவோம். மலையாளிகள் தாம் ஏற் கனவே உள் நாட்டில் வேளாளராயிருந்து அங்கிருந்து, துரத் தப்பட்டு மலைகளில் குடிபோந்ததாகவும், அதன் காரணமாய் தம்மை மலையாள வேளாளர் என வழங்கிவருவதாகவும் கூறுவர். திருட்டுத் தொழிலில் ஈடுபட்டுவரும் குறவர் கூடத் தம்மை அகம்படிய வேளாளர் எனவும், பிள்ளை என்ற குலப்

பட்டம் பூண்டு வருவதுடன் வேளாளர் பழக்க வழக்கங்களையும் பின்பற்றிவருவது நாம் அறிந்ததொன்றும்: திருவனந்தபுரத்தில் குடியேறியவரில் வேளாளர் என வழங்குவோர் தேவரடியாரின் சந்ததியாரே ஆம், இவர் தம்மை நாஞ்சில் நாட்டு வேளாளர் என வழங்கி வருகின்றனர். [1]



1 *Page 376-77. Castes and Tribes of South India—Vol. VII. E. Thurston.*

# இன்றைய
# வேளாளர் பழக்க வழக்கம்

ஏற்கனவே வேளாளர் பிரிவுகள்பற்றியும், அவ்வொவ்வொன்றின் தனித்தனிப் பழக்க வழக்கம்பற்றியும் பார்த்தோம். இங்கு பொதுப்படையாய் வேளாளர் தொழில் மற்றும் பழக்க வழக்கம்பற்றி குடிக்கணக்கு, மாவட்டக்குறிப்பு மற்றும் அறிஞர் கருத்துக்கள் என்ன என்பதைக் கீழே காண்போம்.

## குடிக்கணக்கு

1871-ஆம் ஆண்டு குடிக்கணக்கில் கண்டுள்ளதாவது: "உலகத்திலேயே நெல், கொடிக்கால், புகையிலை முதலிய பயிர்களை விளைவிப்பதில் வேளாளர்க்கு ஈடானவர் ஒருவரும் இல்லை. இவர் மற்ற மரபினருடன் அன்போடு இணைந்து வாழும் பண்பும் சிக்கனமும் உழைப்புத்திறனும் உடையவர். கீழ்த்தரமான பணிகளைச் செய்யார் இவரில் சிலர் உயர் கல்வி கற்று, அரசாங்கத்தின்கீழ் உயர்தர மற்றும் சாதாரண அலுவலராகவும், வியாபாரிகளாகவும் இருந்து வருகின்றனர். ஆனால் பெரும்பாலோர் சிறுவிவசாயிகளாகவே காணப்படுகின்றனர்'[1]

'The Vellalas are a peace loving frugal and industrious people and in the cultivation of rice, betel, tobacco etc have perhaps no equals in the world. They will not condescend to work of a degrading nature. Some are well educated and employed in Government service and as clerks, merchants, shop-keepers etc. But the greater part of them are peasant proprietors of the soil and confine their attention to cultivation.[1]

---

1. *Madras Census Report 1871*

மதுரை மாவட்டக் குறிப்பு

பெரும்பாலான வேளாளர் பயிர்த் தொழிலேயே நம்பி இருக்கின்றனர். ஆனல் கூடியமட்டும் மேழியைத்தொட்டு நிலத்தை உழுவதைத் தவிர்க்கின்றனர். சாதாரணமாய் கூலி ஆட்களைக்கொண்டும், கொத்தடிமைகளைக்கொண்டும் பயிர்த் தொழில் செய்து வருகின்றனர். [1]

Nelson says: 'The Vellalas support themselves by husbandry which according to native ideas is their only proper means of liveli-hood. But they will not touch the plough if they can help it as ordinarily they do everything by means of hired-servants and predigal slaves. [1]

தமிழகத்திலுள்ள பல்வேறு வகுப்பினர் குணதிசயங்கள் ஒன்றுக்கொன்று வேறுபடக்காண்கின்றோம். குறிப்பாகக் கூறுமிடத்து பார்ப்பனர், நயவஞ்சகர். மறவர் சட்டம் ஒழுங்கு இவற்றிற்குக் கட்டுப்படாதவர். செட்டி ஈனக்குணமுடையவர். வேளாளர் சுயநலமிகள். நாயக்கர் முட்டாள்கள், கள்ளர் மறைந்து ஒளிந்து பதுங்குகிறவர். குறவர் நிலையில்லாமல் அலேந்து திரிபவர் பறையர். வரம்பு மீறி விபசாரத்தில் ஈடுபடுபவர். [2]

Nelson adds : 'In character and disposition the several castes and tribes differ from one another very considerably. The pharasaical brahmin. the law-less marava, the mean chetti, the selfish vellala, the dull Nayakkan, the skulking Kallan, the restless Kuravan, the licentious Parayan these and a score of other castes are distinguishable each by peculiar traits of character and modes of conduct etc'.[2]

---

*1 Page 16 Madura Manual. Part II. J.H. Nelson.*

*1 Page 16 Madura Manual, J H. Nelson.*

## தஞ்சை மாவட்டக் குறிப்பு

'பெரும்பாலான வேளாளர் அரசு பணியில் குறிப்பாக கிராமக் கர்ணீகராகப் பணியாற்றி வருகின்றனர். கர்ணீகர் வேலையில் வேறு மரபினர் அவரை மிஞ்சமுடியாது. பண்டைய நாளில் பனை ஓலைச்சுவடிகளில் பகலில் மட்டுமின்றி இரவில் விளக்கின் உதவியால் இலகுவில் புரட்டி தேவைப்படும் தகவல் களை தேடிக் கண்டுபிடிப்பதில் இவர் மிகவும் தேர்ச்சி பெற்ற வர். தாசில்தார்கள் ஊர் தணிக்கைக்கு வரும்போது அவரது சிவிகைக்குப் பின்னால் ஓடிக்கொண்டே அவர் சொல்வதைப் பனை ஓலைகளில் எழுத்தாணியால் எழுதுவதுவும் ,ஊர் கணக்கு வழக்குபற்றி அவர் கேட்கும் கேள்விகளுக்கு தடையின்றிப் பதில் இறுப்பதுவும் இவரது திறமையைக் காட்டுகின்றது. இந்து சமய ஆச்சாரங்களைப் பின்பற்றுவதில் பார்ப்பனரையும் மிஞ்சிவிடுவர். மது,ஊன் உணவு இவற்றை அறவே தவிர்க் கின்றனர்.' [1]

Tanjore Dt. Gazetteer says: 'Many Vellalas are found in Government service more especially as Karnams or Village accountants. As accountants they are unsurpassed and the facility with which in bye-gone days they used to write on cudjan or palmyra leaves with iron styles and pick up any information on any given point from a mass of these leaves by lamp light no less than by day light was most remarkable. Running by the side of Tahsildar's palanquins they could write to dictation and even make arithmetic calculations with strictiest accuracy. In religious observances they are more striet than the generality of the Brahmins. They abstain from intoxicating liquor and flesh-meal.' [1]

## கோயம்புத்தூர் மாவட்டக் குறிப்பு

கொங்குவேளாளர் புஞ்சை தோட்டப்பயிர் சாகுபடியில் ஈடுபடுகின்றனர். நெற்பயிர் சாகுபடியில் இவர் நேரிடை

1 *Tanjore Dr. Gazetteer*

யாய் ஈடுபடுவதில்லை. பிற மரபினரைக் கொண்டே இதை நடத்தி வருகின்றனர். [1]

## சேலம் மாவட்டக் குறிப்பு

வேளாளர் கஞ்சத்தனமும் சிக்கனமும் உடையவர். ஆடம்பரப் பொருள்கள் ஒன்றும் அவர் அறியார். ஆண்டு முழுவதுவும் ஒரே ஊதாநிறப் புடவைதான் பெண்களது உடையாகும். அது நனைந்து ஈரமாகிவிட்டால் அப்பெண்டின் உடம்பிலேயே உலர வேண்டும். அந்தப் புடவையைத் துவைக்கவேண்டுமாயின் ஒரு பாதியைக் கல்லில் அடித்துத் துவைத்துப் பின்னர் அதைப் பிழிந்து இடுப்பில் கட்டிக் கொண்டு ஏற்கனவே இடுப்பிலிருந்த மறு பாதியைத் துவைப்பர். அவரது உணவு புஞ்சை நிலத்திலிருந்து கிடைத்த காட்டுத் தானியமேயாகும். பெருநாட்களில்கூட தாம் சேமித்து வைத்ததிலிருந்து ஒரு தம்படிகூட எடுத்து விருந்துக்குச் செலவு செய்யார். அரசு நில வருவாய்த்துறையினரின் வரிவசூல் கெடுபிடியாய் இருந்தால் விளைந்த தானியத்தை பதுக்கிப் பூமிக்கடியில் புதைத்து வைப்பர். அரசாங்கம் இதில் மெத்தனமாய் இருந்தால் வருமானத்தை நிலத்தின்மேல் செலவு செய்வர். அமாவாசை அல்லது வேறு பெருநாளன்று அரிசிச் சோறும் சிறிது இறைச்சியும் உண்பர். ஆனால் இதை ஆடம்பர உணவாகவே அவர் கருதுவர். வெகு அபூர்வமாகவே இம்மாதிரியான உணவு எடுப்பர். [2]

'The vellala is frugal and saving to the extreme. His hard working wife knows no fancy and the vellalachi [Vellala woman] willingly wears for the whole year the one blue cloth which is all that the domestic ceremony of the house allows. If it gets wet it must dry on her and if she should wash her sole garment, half is wrapped to be operated

---

*1 Coimbatore Dt. Manual Nicholson F. A. 1887.*

*2 Salem Dt. Manual Famu H. Le. Madras 1883.*

upon which in its turn relieves the other half that is then and there similarly hammered against some stone by the side of the village tank [Pond] on the bank of the neighbouring stream. Their food is the cheapest of the dry grains which they happen to cultivate that year and not even the village feasts can draw the money out of the Vellalas' clutches. It is all expended on his land if the policy of the revenue administration of the country be liberal and the acts of the Government such as to give confidence to the ryots or husbandmen. Otherwise their hoarded grains are buried. The new-moon or some high holiday may perhaps see the head of the house enjoy a platter of rice and a little meat but such extravagance is rare'[1]

குலங்களும் குடிகளும்

சென்னையில் வேளாளர் வண்டி ஓட்டுதல், ரிக்சா இழுத்தல், கூலி வேலை, வார்னிஸ் பெயிண்டு அடித்தல், காவற் தொழில், தோட்டத் தொழில், அச்சுக் கோர்த்தல், ரயில்வே பயர்மேன், கடைநிலை ஊழியர் மற்றும் பயிர்த் தொழில் முதலிய பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு வருகின்றனர். இவர் சாதாரணமாய் உடலுழைப்புத் தொழிலாளரிலிருந்து நிலச்சுவான்தாராகவும், காபி தோட்டக் கூலியிலிருந்து காபி தேயிலைத் தோட்ட உரிமையாளராகவும், கடைநிலை ஊழியரிலிருந்து டிப்டி கலெக்டராகவும் பணி புரிகின்றனர். 2

The Vellalas are summed up by a native as being found in almost every section of life from the labourer in the fields to the petty Zamindar [land-holder] from the owner of plantation to the cooly who works at coffee picking, from the Deputy Collector to the peon in his office.[2]

1 *Salem Dt. Manual Famu H. Le. Madras 1883.*

2 *Page 372. 73 Castes and Tribes of South India Vol. VII- E. Thurston.*

## இன்றைய நிலை

இன்றைய வேளாளரை ஊன் உணவு எடுப்பவர், ஊன் உணவு தவிர்ப்பவர் என இரு பெரும் பிரிவாகக் கொள்ளலாம். ஊன் உணவு தவிர்ப்பவர் வைதீகப் பற்று அதிகம் உள்ளவர், ஆரியப் பழக்கவழக்கங்களைப் பெரும்பாலும் பின்பற்றுபவர், வேளாண்மைத் தொழிலில் நேரிடையாய் ஈடுபடார். மேழியைத் தொடுவது இழுக்கு எனவும், நிலத்தை உழுவது பூமாதேவியின் வயிற்றைக் கீறுவதற்கு ஒப்பாகும் எனவும், முற்றின கதிரை அரிவாளால் அறுப்பது உயிருள்ள பிராணியைக் கொல்வதற்குச் சமம் என்ற ஆரியக் கோட்பாட்டைப் பின்பற்றுபவர். அதனால் பிற மரபினரைக்கொண்டே பயிர்த்தொழிலை நடந்தி வருவர். கணேசருக்குச் செவ்வாய் பூசை செய்வர். அன்று இரவில் இவரது பெண்கள் நிர்வாணமாய்க் கணேசரைக் கும்பிடுவர். இப்பூசையில் ஆண்களோ, சிறுவர்களோ அனுமதிக்கப் படுவதில்லை.

பொதுவாய் ஊன் உணவு எடுப்பவர் பழக்க வழக்கம் இதர பிற்பட்ட வகுப்பினரதை ஒத்திருக்கும். தனித்தனி குல தெய்வம் உண்டு. அய்யனார், காளி முதலிய கிராம தெய்வங்களை வழிபடுவதுண்டு. மிருகங்களை கிராம தேவதைகளுக்குப் பலியிடுவதும் இல்லாமல் இல்லை.

கொங்கு வேளாளரென்போர் தவிர வேறு ஒரு பிரிவுக்கும் தனியாய் வண்ணார், நாவிதர், குருக்கள் இல்லை. ஒரு சில பிரிவினர்க்கெனத் தனியாய் பண்டாரங்கள் இருந்தாலும் ஏற்கனவே கூறியபடி தெலுங்குப் பார்ப்பனக் குருக்களைக் கொண்டே நன்மை, துன்மைச் சடங்குகளை நடத்தி வருகின்றனர். திருமணம் வைதீக முறைப்படியே நடக்கும். திருமணத்தன்று மணமகனையும், மணமகளையும் ஒன்றுகூட விடாமல் ஒரு நல்ல நாள் தெரிந்தெடுத்து, அன்று பார்ப்பனக் குருக்களைக்கொண்டு சடங்குகள் நடத்தி மணமகனையும், மணமகளையும் ஒன்றுகூட வைப்பர். இப்பழக்கம் சமீபகாலமாய் அருகி வருகின்றது. திருமணத்தன்றே சாந்தி முகூர்த்தத்தையும் நடத்திவிடுகின்றனர். சுமார் 50-60 ஆண்டுகளுக்கு முன் பார்ப்

பனக் குருக்களுக்கே மணமகளுடன் முதல் இரவைக் கழிக்கும் உரிமை இருந்ததாகச் செவிவழிச் செய்தி மூலம் அறிகிறோம். தர்ம சாத்திரப்படி சூத்திரன் அடிமையானவன். அவனுக்குப் பெண்ணை அனுபவிக்க உரிமையில்லை. அதன் காரணமாய் அவளை முதலில் கடவுளின் பிரதிநிதியாகிய பார்ப்பனக் குருக்கள் அடைந்து, பின் அவளது கணவனிடம் [மணமகனிடம்] ஒப்படைப்பதாகக் கூறுவர். இச்சடங்கைத்தான் சாந்திமுகூர்த்தம் என்பர். திருமணத்தின்போது பார்ப்பனக் குருக்கள் கூறும் மந்திரமாவது : இந்த மணப்பெண்ணை முதலில் சூரிய தேவர்கள், பின்னர் சந்திரன், அதன்பின் எனக்கும் மனைவியாக்கி கடைசியாக அவளை மணமகனாகிய உனக்கும் மனைவியாக்குகிறேன். திருவனந்தபுரம் மன்னர்கூட முதற் குழந்தை உற்பத்தியாகும்வரை இராணியுடன் உடல் உறவு வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. முதல் குழந்தை அவனது நம்பூதிரிப் பார்ப்பன குருவுக்கே பிறக்கவேண்டுமென்பது அன்றைய நியதி.

ஆக இதுவரை நாம் கண்டவற்றிலிருந்து இவரது பழக்க வழக்கம் இன்றையத் தமிழர் பழக்க வழக்கங்களிலிருந்து பெரிதும் வேறுபடக் காண்கிறோம். தெலுங்குப் பார்ப்பனக் குருக்களைக் கொண்டு நன்மை துன்மைச் சடங்குகள் நடத்தி வருவதுவும், ஆரியப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருவதுவும் இவர் இடைக்காலத்தில் தோற்றம் பெற்றவர் எனப் புலப்படுத்துவதாயுளது. வேளாண் மாந்தர் என்கும்போது அவர் பயிர்த்தொழில் புரிபவராக இருக்கவேண்டும். உழுவித்துண்ணும் வேளாண் மாந்தர்கூட உழவுத் தொழிலை ஒரு இழி தொழிலாகக் கருதமுடியாது. ஆனல் இன்றைய வேளாளரில் சில பிரிவினர் பயிர்த்தொழில்செய்வதை இழிவாகக்கருதுவதையும், உழுவது பூமாதேவியின் வயிற்றைக் கீறுவதற்கு ஒப்பாகும் என்ற மனுதர்மக் கொள்கையைக் கடைப்பிடிப்பதையும் மனத்திற் கொண்டால் வேளாளர் என்பதன் பொருள் பயிர்த்தொழில் செய்பவரை உணர்த்தாமல் வேறு தொழில் செய்பவரை உணர்த்துகின்றதா ? என நாம் ஐயுற வேண்டியுளது. ஒரு வேளை இவர் பண்டைய நாளில் உழவு தொழிலில் ஈடு

பட்டுப் பின்னர் ஆரிய பழக்க வழக்கங்களை மேற் கொண்டதன் விளைவாய் அத்தொழில் இழிவானது எனக்கருதி அதைப் பின்னர் விட்டுவிட்டனரா? என்பதுவும் ஆய்வுக் குரியது. இன்றைய சமுதாய அமைப்புக்களை உன்னிப்பாக நோக்கும் போது உழவுத் தொழிலில் நேரிடையாய் ஈடுபடுபவர் கீழ்சாதி யாகவும், அவ்வாறு ஈடுபடாதவர் உயர் சாதியாகவும் கருதப் பட்டு வருவது கண்கூடு. காலம் காலமாய் நெற்பயிரைப் பயி ரிட்டு வரும் பள்ளர் சமூகம் தம்மைத் தேவேந்திர குல வேளா ளர் என உரிமை பாராட்டினாலும் அவர் தாழ்த்தப்பட்டவு ராகக் கருதப்படுவதுபற்றி சிந்திக்கும்போது பயிர்த்தொழில் அதிலும் குறிப்பாக நெற்பயிர் சாகுபடியில் நேரிடையாய் ஈடு படாமல் புஞ்சை, தோட்டப்பயிர் செய்பவர் மற்றும் கல்வி கற்று அரசு பணிகளை மேற்கொண்டு ஆரியப் பழக்க வழக்கங் களைப் பின்பற்றி வருபவர் வேளாளர், வெள்ளாளர் எனச் சிறப்பிக்கப்பட்டனரா? என்ற வினா எழுகின்றது. இப்பல் வினாக்களுக்கு அடுத்து விடை காண முயல்வோம்.



# வேளாளர் யார்?

இன்றைய வேளாளர் பிரிவுகள், அவரது தொழில்கள் மற்றும் பண்பாட்டுக் கூறுகள் பற்றி ஆராய்ந்ததில், வேளாளர் என்ற பெயர் சில பிரிவினரைத் தவிர பயிர்த் தொழில் செய்யாமல் வேறுபல தொழில்களை மேற்கொண்டவர் தரித்து வருவதாகக் கண்டோம். மேலும் வேளாளர் என வழங்குபவர் தம்மை வெள்ளாளர் எனவும் கூறிவருகின்றனர். பொதுவாக வேளாளர் என்பதற்கு நஞ்சை, புஞ்சை சாகுபடி செய்பவர் எனப் பொருள்படும். ஆனால் வெள்ளாளர் என்பது நஞ்சைப் பயிர் சாகுபடி செய்பவரை மட்டும் உணர்த்துவதா யுளது. இன்றைய வேளாளரில் ஒருசிலர் புஞ்சைப் பயிர் சாகுபடியில் ஈடுபட்டாலும், நஞ்சைப் பயிர் சாகுபடியில் நேரிடையாய் அறவே ஈடுபடுவதில்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஆக நஞ்சைப் பயிர் சாகுபடி செய்யத் தெரியாதவர் ஏன் தம்மை வெள்ளாளர் என வழங்கவேண்டும்? இவ்வாறு பலரும் தம்மை வேளாளர், வெள்ளாளர் என வழங்குவதனால் இப்பெயர்கள் பயிர்த்தொழில் செய்யாமல் வேறு பல தொழில் செய்பவர்களை உணர்த்துகின்றதா? என நாம் ஐயுறும் நிலையில் உள்ளோம். மேனாட்டு அறிஞர் பலரும் வேளாளர் யார்? என்பதை அறிய முயன்று தோல்வியே கண்டுளர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. அவருள் சிலர், தமிழறிஞர் வேளாளர், வெள்ளாளர் என்ற பெயர்களுக்கு விபரீதமான பொருள் கண்டுள்ளதாகக் குறைபட்டுள்ளனர். குறிப்பாக அந்தர்பெத்தெய்லி இதுபற்றிக் கூறுவதாவது: 'பொதுவாகப் பல்வேறு தரத்தாரும் வெள்ளாளர் என்ற பெயர் தரித்து வருவதானது, அதன் பொருள் என்ன? என்று அறியமுடியா மல் குழப்பத்தையே விளைவிப்பதாயுள. பலதரப்பட்ட பிரி வினரும் தம் பழைய மரபை விட்டுவிட்டு வெள்ளாளர் என்றும், பிள்ளை என்றும் வழங்கி வருகின்றனர்'.[1]

---

*1 Page 85 caste class and power Andhre Beteille.*

'Yet the term vellala is confusing because of its comprehensive use. Many castes of different origin have sought inclusion in this wide category and are calling themselves Vellalas or Pillais.' [1]

இவ் ஐயப்பாட்டிற்குத் தெளிவு காணுமுகத்தான் முதலில் இந்தப் பெயர்கள் உணர்த்தும் பொருள் பற்றி ஈண்டு ஆராய்வோம்.

வேளாளர்

1) நச்சினார்க்கினியர் வேளாளர் என்பதற்கு 'வேள்' என்றும், 'பட்டஉரிமையாள்பவர்' என்றும், அவர் உழுதுண் பவர், உழுவித்துண்பவர் என இருவகையினர் என்றும் கூறுவர்.

2) மறைமலையடிகள் கூறுவதாவது : "ஈகைக்குப் பெயரான வேளாண்மை என்னும் பெயர், அவ்வீகைக்குக் கருவியான பயிர்த்தொழிலுக்கும் பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்பவருக்கும் அது பெயராயிற்று.[2] உழுதொழிலால் வளப்படுத்திய சிலரே முதன் முதலில் நாகரிகத்திற் சிறந்த வேளாளராயினர்" [3]

3) டாக்டர் மு. ஆரோக்கியசாமி சங்க இலக்கியங்களில் வரும் வேள், வேளிர் என்ற பெயர்களிலிருந்து வேளாளர் என்ற பெயர் தோன்றியதாகக் கருதுகின்றார். அவர் கூறுவதாவது: 'பெருமை வாய்ந்த வேளிர்குல மன்னரில் பலர் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் இக்காலத்தில் வேளாளர் என வழங்குபவரின் முன்னோர் என்பதை நாம் எழுதிய 'வெள்ளாற்று வெளியின் பழங்கால வரலாறு' என்ற நூலில் விளக்கமாகக் காட்டியுள்ளோம். [4]

---

1 *Page 85 caste class and power-Andhre Beteille.*

2 *பக். 23 வேளாளர் நாகரிகம், மறை மலையடிகள்.*

3 *பக். 115 வேளாளர் நாகரிகம். மறை மலையடிகள்.*

4 *பக் 446 நாமிருக்கும் நாடு அல்லது தென்னிந்திய வரலாறு டாக். மு. ஆரோக்கியசாமி.*

4) டாக்டர் ஆர். நாகசாமி கூறுவதாவது: '[வெள்ளாளர்] வெள்ளத்தை ஆள்பவர் என்னும் பொருளிலிருந்து வந்ததென்பர் ஒருசாரார் வேள் என்பதிலிருந்து வந்திருக்க வேண்டும். வேள் எனில் மண் என்பது பொருள். [யாழ்ப்பாணத் தமிழ் அகராதி தமிழ் லெக்சிகன்] மண்ணைக் கொண்டு தொழில் புரியும் குயவனுக்கு வேட்கோ என்ப்பெயர் பல கல்வெட்டுகளில் காணப்படுவது, வேள் என்பது மண்ணைக் குறிக்கும் என உறுதிசெய்கிறது. மண்ணை ஆள்பவர் என்னும் பொருளும் வேள் + ஆளர் அல்லது வேளாளர் என வந்திருக்கக்கூடும். வேள் = மண் என்னும் சொல்லிலிருந்து வேளிர் என்னும் பெயர் வந்திருக்கக்கூடும். வேளாளர், வேளார், வேளிர் என்ற மூன்று இனத்தாரும் ஒரு குடியினராகவே கருதப்படுதல் உண்டு.' 1

வெள்ளாளர்

1) டாக்டர் ஆர். கால்டுவெல் கூறுவதாவது : 'வெள்ளாளர் என்ற சொல் வெள்ளம் + ஆளர் = வெள்ளத்தை ஆள்பவர் என்ற பொருளில் தோன்றியது.' 2

2) நெல்சன் கூறுவதாவது : 'வெள்ளாளன், வெள்ளாண்மை என்னும் பெயர்கள் உச்சரிப்பு வழக்கைக் கொண்டு அப்பெயர்கள் பொதுவாய் பயிர்த் தொழிலையும் குறிப்பாக நீரின் உதவியால் பயிர்த்தொழில் செய்வது அல்லது செய்விப்பது, வெள்ளத்தை அடக்கி ஆள்வது என்ற இரு பொருள்களை உணர்த்தும். எனவே வெள்ளாளர் என்பதற்குப் பயிர்த் தொழில் செய்பவர் அல்லது நெற்பயிர் விளைவிப்பவர் என்பதே சரியான பொருளாகும். இதை ஒரு குறிப்பிட்ட மரபு, அல்லது குடிப்பெயராகக் கொள்வதற்கில்லை.' 3

---

*1 பக்கம் 172. யாவரும் கேளீர்—இரா. நாகசாமி.*

*3 Page 4. History of Tinnelvelly Dt. Dr. R. Caldwell.*

*3 Page 31. Madura Manual Part II. J. H. Nelson.*

Nelson says : 'The Tamil mode of spelling the word Vellalan is [வெள்ளாளன்] and as [வெள்ளாண்மை] is the word commonly used to express the act of cultivation (Strictly ruling or managing irrigation] it is but natural to infer that Vellalan means a cultivator or irrigator of rice fields rather than a man of a particular tribe or community [1]

3) டாக்டர் ஜி ஒப்பர்ட் கூறுவதைக் காண்போம் : "சாதாரணமாய் வெள்ளாளன் என்ற சொல் வெள்ளாண்மை அதாவது பயிர்த்தொழில் செய்பவரைக் குறிப்பதாகக் கொள்வர். ஆனால் அம்மாதிரிப் பொருள் கொள்வது சரியன்று. தெலுங்கில் வேளாளன் என்ற சொல்லுக்கு நிகரானது வேளம்மா ஆகும். வேளம்மா, வெள்ளம் மா, வெள்ளாண்மை என்ற சொற்கள் திராவிட மொழிக் குடும்பத்தில் ஒரு பொதுவான வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியிருக்குமானால், இச்சொல்லுக்கு நிகரான சொற்கள் மற்றத் திராவிட மொழிகளில் இடம்பெற்றிருக்கவேண்டும். ஆனால் மலையாள மொழியில் இச்சொல்லுக்கு நிகரான சொல் இல்லை. தெலுங்கு மொழியிலும் அவ்விதமே. தெலுங்குநாட்டில் காபு என்ற வகுப்பினர் பயிர்த்தொழில் செய்து வருகின்றனர். 'செய்ய' என்பது பயிர்த்தொழிலைக் குறிக்கும். வேளம்மா என்ற பெயர் நிலக்கிழாரைக் குறிக்கும். தெலுங்கு நாட்டிலுள்ள பெரும்பாலான மன்னர்கள் வேளம்மா மரபினரே. மலபாரில் நாயகன் அல்லது தலைவன், ஆளுநன் என்ற பொருளில் நாயர் என ஒரு வகுப்பார் இருந்து வருவது கவனத்திற்குரியது. நாம் தரும் விளக்கத்தின்படி வெள்ளாளன் என்ற சொல் ஆளுகிறவன் தலைவன் என்ற பொருளையே உணர்த்துவதாயுள்ளது.''

வெள்ளாண்மை என்ற சொல் எவ்வாறு பிறந்தது என்பதுபற்றித் திட்டவட்டமாய் அறிய முடியாத நிலையில் உள்ளோம். தமிழ்ப்புலவர் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாய் இச்சொல்லுக்குப் பொருள் கண்டு வருவது குறிப்பிடத்தக்கது. ஒரு சாரார் வேள் + ஆண்மை,—உபகாரம் + ஆள்வது என்ற

---

1 *Page 31. Madura Manual Part II. J. H. Nelson.*

அருத்தத்தில் வேளாண்மை என்ற சொல் பிறந்ததென்பர். இன்னொரு சாரார் வெள்ளம்—ஏராளம்—பெருக்கம் இவற்றை ஆள்வதால் வெள்ளாளன் என்ற பெயர் பிறந்ததாக வாதிப்பர்.

இந்தியாவில் மேட்டுப்பாங்கான நிலங்களில் மானாவாரிப் பயிர் செய்வது ஒரு விதம் ; வயல் வெளிகளில் குளம், நீர்நிலைகளின் உதவியால் பயிர் செய்வது இன்னொரு விதம். இந்த இருவகை நிலங்களும் தமிழில் புஞ்சை (புன்செய்) நஞ்செய் (நன்செய்) எனவும், தெலுங்கில் மேடு, பள்ளம் (சமவெளி) எனவும், கன்னடத்தில் பெல்லா, ஹல்லா எனவும் வழங்குகின்றன. புல், நல் என்ற சொற்கள் முறையே கெட்ட, நல்ல என்ற பொருளை உணர்த்தும். புஞ்சை என்பது காட்டுத் தானியம் விளையும் வறண்ட பூமி ; நஞ்சை என்பது நெல் விளையும் வயல் வெளி ஆகும்.

வெள்ளாளர் என்பதற்குப் பள்ளனை அல்லது விவசாயத் தொழிலாளியை ஆள்பவன் என்று பொருள் கொள்ளலாம். மலையாளம், தமிழ் இவற்றில் அடிமைப் பெண், பணிப்பெண் என்று பொருள்படும் வெள்ளாட்டி என்ற சொல் வழக்கில் உள்ளது எனது கருத்துக்குச்சாதகமாய் அமைகின்றது. நமக்குத் தெரிந்தவரை வெள்ளாளன் என்ற சொல்லுக்கு மேலே கண்டபடி ஒருவரும் பொருள் காணவில்லை. ஆனால் வெள்ளாட்டி என்ற சொல் பள்ளர் வகுப்புப் பெண்ணையே [பள்ளன் + ஆட்டி] உணர்த்துகிறதென்பதில் கிஞ்சித்தேனும் ஐயமில்லை. இங்கு ஆட்டி என்ற சொல் பொதுவாய் பெண் பாலரையும், சில சந்தர்ப்பங்களில் அடிமை அல்லது பணிப் பெண்ணையுமே குறிக்கும். மனையாட்டி, பெண்டாட்டி என்ற பெயர்கள் மரியாதைக்குரிய குடும்பத் தலைவியைக் குறிக்கும். வெள்ளாளன் என்பதற்குப் பெண்பால் பெயர் வெள்ளாளச்சியாம்.' [1]

---

*1 Page 105. The original inhabitants of India. Dr. G. Oppert.*

Dr. G. Oppert says : ' It is customary to derive the name of Vellalan from Vellanmai i.e. the name of the cultivator from the work of cultivation to which he is devoted but I regard the explanation as erroneous. The Telugu representative of the Tamil Vellalan is Velama [Vellama] and if Vellanmai agriculture were derived from a common Dravidian root, a representative of this word should be found in all or most probably not indigeneous in Malayalam nor does it exist in Telugu where we find words like Kapu-denoting a cultivator and seiyu-cultivation. The Vellala is the born grand seignur in the Telugu country. Most of the Telugu Rajas belong to the velama Caste. The identity of Velama and Pallava has been already established by me. The Vellalar of Malabar are called Nayar which word means as we have seen ruler. This circumstance is significant as the term according to my explanation designates as a ruler.

**Note** : The derivation of vellanmai is uncertain. The Tamil Pandits propose different explanation a sure indication of their uncertainy. Some derive the word from Vel-benefit and wish to write it accordingly Velanmai. Others prefer Vellam—abundance. The Vellalar are cultivators. Cultivation. in India is generally divided into dry cultivation which is carried on higher levels and in plains which depends entirely on the rainfall and into wet cultivation which is carried on by means of irrigation chiefly from tanks. These two kinds of cultivation are called in Tamil Puncey and Nancey, in Telugu Meṭu and Pallam from Pallam—plain and in Kanarese bella and halla. Pul and Nul mean bad and good. Puncey is a sterile field for dry grains and Nancey a rice field...... The derivation from Pallan and alan as the master of Pallan or agricultural

labourers seems s i m p l e r and more preferable. My conjecture is supported by the Tamil and Malayalam term Vellatti-a slave girl—a female servant. The meaning of this expression has not been explained by any as far as my knowledge goes but is clear if it is considered to denote a Palla woman of the servile class. [பள்ளன் + ஆட்டி]. In this particular instance atti signifies a woman in general as it does also occasionally mean servant or slave. Atti occurs in a similar though more respectable sense in manayatti—house wife and pentatti-wife. The feminine of Vellalan is Vellalachi.' [1]

4. ஸ்டூவர்ட் வெள்ளாளன் என்ற சொல் வெள்ளாண்மை, வெள்ளம்—நீர்ப்பெருக்கு, ஆண்மை—ஆள்வது அதாவது விவசாயம்—பயிரிடுதல் என்ற பொருள் அடிப்படையில் பிறந்ததென்கிறார். [2]

The word Vellalan is derived from Vellanmai. (Vellam—water, Anmai—Management.) meaning cultivation-tillage. [2]

5. பி. டி. சீனிவாச அய்யங்கார் கூறுவதைக் காண்போம்: 'பயிர் வளர்வதற்கு நீர் இன்றியமையாதது. இதற்காக ஆறுகளில் வரும் வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்தி அடக்கி ஆள்பவர் என்ற பொருளில் வெள்ளாளர் என்ற பெயர் தோன்றியது. அதேபோன்று ஆற்றுப் பாய்ச்சலுக்குப் புறம்பான நிலங்களில் பயிர் செய்வதற்கு மழை நீரை ஏரி குளங்களில் தேக்கி, வாய்க்கால்கள் மூலம் வயல்களுக்குப் பாய்ச்சி வேளாண்மை செய்வோர்—காராகிய

1 *Page 105 The original inhabitants of India Dr. G. Oppert.*

2 *Madras Census Report* 1891 *Vol. XIII H. A. Stuart.*

மேகத்தை நம்பி வாழ்பவர் அல்லது மேகத்தை ஆள்பவர் என்ற பொருளில் காராளர் என்ற பெயர் தோன்றியது.' 1

P. T. Srinivasa Ayyangar says : 'Vellalan the ruler of the floods—the method of carrying the life giving water to the fields. Beyond the trough of the river had lived the Karalar the ruler of the clouds-those who stored the rain water in tanks and conveyed them to fields through irrigation channels.' 1

6. எம் சீனிவாச அய்யங்காரின் கருத்தாவது : 'வெள்ளாளன் என்பதற்கு சாதாரணமாய் வெள்ளம்-பெருக்கு, ஆளன்- ஆளுகிறவன்-நீரைக் கட்டுப்படுத்தி அதன் மூலம் பயிர்த்தொழில் செய்கிறவன் என்று ஒரு சாரார் பொருள் கொள்வர். வெள்ளாண்மை-பயிர்த்தொழில் செய்தல் என்ற சொல்லிலிருந்துபிறந்ததாகப்பிறிதொருசாரார் பொருள்கொள் வர். ஆனல் இருசாராரும் கொள்ளும் பொருள் ஏற்புடைத் தன்று. இதற்குச் சரியான வேர்ச்சொல் வெள்ளான் என்பதே யாம். இச்சொல் தமிழ் கல் வெட்டுகளில் காணப்படுகின்றன. இச்சொல்லுக்கு நிகரான இன்னொரு சொல் வேள்—அதாவது பேர்க்கடவுள் ஆகும். வேளிர் என்பது பண்டைத் தமிழகத் தின் குறு நில மன்னர் ஆவர். வேளக்காரன்—காற்படை வீரன். [இராசராச சோழன்காலக் கல்வெட்டுகளில் இப்பெயர் காணப்படுகிறது] வேள்-உபகாரம், வேள் ஆண்மை, உண்மை, வேள்-ஆளன்-பயிர்த்தொழில் செய்ப வன் என்ற சொற்கள் காணப்படுகின்றன. இறுதியில் காணும் இரு சொற்களும் பழைய தமிழ் இலக்கியங்களில் இடம்பெறக் காணேம். ஆனல் மற்ற சொற்களின் வேர்ச்சொற்கள் போர்ச்செயலை உணர்த்துவதாயுள. படை என்ற சொல் பட்டாளத்தையும், படைக்கருவிகளையும், உழவுக்கருவியாகிய [ஏர்] கலப்பையையும் உணர்த்தும் மற்றக் கருவிகளிலிருந்து ஏர்த்தொழிலை வேறுபடுத்திக்காட்ட உழுபடை என்ற சொல்

1 *Page 12.13. History of the Tamils from the earliest times to 600 A. D. P. T. Srinivasa Ayyangar.*

வழக்கில் உள்ளது. தற்காலம் பந்து [Bant] நாயர், பள்ளி, தெலுங்கு வேளம்மா முதலிய விவசாயக் குடியினர் பண்டைய வேளாளர் போன்று போர்க்குணம் படைத்தவரேயாவர்.[1]

M. Srinivasa Ayyangar says : 'The term Vellalan is ordinarily derived by some from Vellam-flood-and alan-a ruler—hence a cultivator; while others derive it from vellanmai—cultivation. Neither seems to be quite corrcet. For the right form of the word is vellan and it occurs in early Tamil inscriptions. In Tamil the words allied to it are vel-the God of war-velir-the ruling class among the ancient Tamils. Velakkaran—a foot soldier [now absolete but found in the inscriptions of Raja Raja Chola] vel—help, vel + anmai—truth and vel—alan—a cultivator. The last two are rarely to be met with in early Tamil literatures while in the other we hear the sound of the war drum—compare the word Padai [படை] which meant an army—a weapon of war and a plough to distinguish a plough, from the other implements is now called உழுபடை or a ploughing-weapon and it may be pointed out that all the modern cultivating castes the Bants, the Nayars, the Pallis and the Telugus or velama were formerly war-like tribes like the ancient vellalas'. [1]

7. வெங்குசாமி ராவ் கூறுவதாவது : 'வெள்ளாளன் (வெள்ளம் + ஆளன்) [விவசாயி, பயிர்த்தொழில் செய்பவன்] வெள்ளாண்மை (வெள்ளம் + ஆண்மை) பயிர்த்தொழில் செய்தல் என்ற சொற்கள் வெள்ளம்—வெள்ளமாகிய நீர்ப் பெருக்கை, ஆளன்—கட்டுப்படுத்துகிறவன், ஆளும்தன்மை யுடையவன், மேற்பார்வையிடுபவன் என்ற பொருளிலிருந் தும், வெள்ளம்—நீர்ப்பெருக்கை. ஆண்மை-ஆளும்-கட்டுப்படுத் தும் திறமை என்ற பொருளிலிருந்தும் பிறந்தன'.[2]

---

*1 Page 42 Tamil studies. M Srinivasa Ayyangar.*
*2 Page 178 Tanjore Dt. Manual T. Venkusamy Rao. 1883.*

Venkusamy Rao says : 'The word vellalan - agriculturist as well as its cognate 'vellanmai - agriculture is derived from vellam—flood for water - Alan signifying ruler and Anmai—control or management'.[1]

8. ஞா. தேவநேயப்பாவாணர் கூறுவதாவது: 'வேளாளர் உழுதுண்பாரும், உழுவித்துண்பாரும் என இருவகையர். உழுதுண்பார்க்கு கருங்களமர், காராளர் என்ற பெயர்களும், உழுவித்துண்பார்க்கு வெண்களமர், வெள்ளாளர் என்ற பெயர்களும் உரியன. உழவர், களமர், கடையர், வேளாளர் என்பன இருசாராருக்கும் பொதுவாகும். ஆயினும் ஈற்றுப் பெயர் தவிர ஏனையவெல்லாம் உழுதுண்பார்க்கே சிறப்பாக வழங்கின. அவருக்கு மள்ளர் என்னும் பெயருமுண்டு.[2]

9. வி. கனகசபை பிள்ளை கூறுவதாவது : 'வெள்ளத்தை அடக்கி ஆண்டதால் வெள்ளாளர் என்றும், காராகிய மேகத்தை ஆண்டதால் காராளர் என்றும் வழங்கினர்.'[3]

10. டாக்டர் மா. இராசமாணிக்கம் கூறுவதாவது :— 'மருத நில மக்கள் நீரை வயல்களுக்கும், குளங்களுக்கும் கொண்டு சென்று, தங்கள் வாழ்க்கைக்குப் பல துறைகளிலும் பயன்படுத்திக்கொண்டமையால் வெள்ளத்தை ஆள்பவர் என்னும் பொருள்பட வெள்ளாளர் எனப்பட்டனர். ஆற்றுப் பாய்ச்சல் இல்லாத இடங்களில் மழை நீரை வயல்களுக்குப் பாய்ச்சிப் பயிர்த்தொழில் நடந்தியவர் காராளர் எனப் பட்டனர்.'[4]

11. டாக்டர் என். சுப்ரமணியம் கூறுவதாவது :— 'வெள்ளாளர் என்ற சொல் வேள்—பிரியப்படுதல் என்ற சொல்லிலிருந்து பிறந்திருக்க வேண்டும். வேளிர், வேட்கார்

---

1 *Page 178. Tanjore Dt. Manual. T. Venkusamy Rao 1883*

2 *பக். 129 பழந் தமிழாட்சி ஞா. தேவநேயப்பாவாணர்*

3 *1800 ஆண்டுகளுக்கு முன்பு. வி. கனகசபை பிள்ளை.*

4 *பக். 24 தமிழக வரலாறு. டாக்டர் மா. இராசமாணிக்கனுர்.*

என்ற சொற்களும் அதிலிருந்தே பிறந்தன. திரு. வி. கனக சபை வெள்ளத்திலிருந்து அச்சொல் பிறந்ததென்று கூறுவது ஏற்கத்தக்கதன்று.'[1]

Dr. N. Subramaniam says: 'Vellala is derived from Vel—to please: hence the word Velir—Velkar also. But V. Kanakasabai derives the word from flood which is not tenable.'[1]

12. டாக்டர் மு. ஆரோக்கியசாமி கூறுவதாவது :— 'வேளிர் என்ற பெயரிலிருந்து வெள்ளாளர் என்ற பெயர் தோன்றியிருக்க வேண்டும்.'[2]

### வேளாளர் பொருளாக்கம்

வேளாளர் பற்றி நச்சினார்க்கினியர், டாக்டர் மு. ஆரோக்கியசாமி, டாக்டர் ஆர். நாகசாமி, மறைமலையடிகள் ஆக-நால்வரும் பொருள் கூறியிருப்பதைக் கண்டோம். டாக்டர் மு. ஆரோக்கியசாமி வேள், வேளிர் என்ற பெயரிலிருந்து வேளாளர் என்ற பெயர் தோன்றியதென்றும், டாக்டர் ஆர். நாகசாமி வேள் என்பது மண் எனவும், மண்ணை ஆள்வதால் வேளாளர் என்ற பெயர் பிறந்ததாகவும், நச்சினார்க்கினியர் வேளாளர் என்பவர் உழவர் என்றும், மறைமலையடிகள் வேளாண்மை என்ற சொல் ஈகை, உபகாரம் என்ற பொருள்களை உணர்த்தி, ஈகைக்குக் கருவியான பயிர்த்தொழிலுக்கும் அது பெயராகி, பின்னர் அத்தொழில் புரிவோர் வேளாண்மாந்தர், வேளாளர் எனப் பெயர் பெற்றதாகவும் கூறுவதாகக் கண்டோம். மேலே கண்ட கூற்றுக்களில் எது ஏற்புடையது? என்பதுபற்றிப் பார்ப்போம்.

முதலில் டாக்டர் ஆர். நாகசாமி கூற்றுக்கு வருவோம். இவர் வேள் என்பதற்கு யாழ்ப்பாண அகராதியில்

---

*1 Page 281 History of the Tamils. Dr. N. Subramaniam.*
*2 பக். 446. நாமிருக்கும் நாடு அல்லது தென்னிந்திய வரலாறு—டாக்டர் மு. ஆரோக்கியசாமி.*

மண் எனப் பொருள் கண்டிருப்பதாகவும், வேள் + ஆளர்—மண்ணை + ஆள்பவர் என்ற பொருளில் வேளாளர் என்ற பெயர் தோன்றியதாகவும், வேளிர் என்ற பெயரும் வேளாளர் என்றே பொருள் படுவதாகவும் அபிப்பிராயப் படுகிறார். இவரது கூற்று ஏற்புடைத்தன்று. வேள் + ஆளர்—(மண்ணை ஆள்பவர்) வேளார் என்பது குயவரைச் சுட்டும். வேட்கோ என்ற பெயரும் குயவரையே சுட்டு கின்றது. இதை டாக்டர் நாகசாமியே ஒப்புக்கொண்டுள் ளார். வேளிர் என்ற பெயருக்கும், வேளாளர் என்ற பெயருக்கும் தொடர்பு இருப்பதாகவும் கொள்வதற்கில்லை. டாக்டர் மு. ஆரோக்கியசாமியின் கூற்றும், டாக்டர் ஆர். நாகசாமியின் கூற்றை ஒட்டியே உள்ளது. இவர் இருவரும் வேளிர் என்ற சொல்லிலிருந்து வெள்ளாளர் என்ற பெயர் தோன்றியதென்றும், வேளிர், வேளாளர், வெள்ளாளர் என்ற மூன்று சொற்களும் ஒரே பொருளையே உணர்த்துவதாகவும் வாதிக்கின்றனர். வேளிர் என்ற பெயரிலிருந்து வெள்ளா ளர் என்ற பெயர் தோன்றியதா ? என்பதுபற்றிப் பின்னர் விரிவாய் ஆராய இருப்பதால், ஈண்டு வேளிர் என்ற பெயரி லிருந்து வேளாளர் என்ற பெயர் தோன்றவில்லை எனக் கொண்டு நச்சினார்க்கினியர், மறைமலையடிகள் கருத்துக்கள் பற்றிப் பார்ப்போம். இவர் இருவரும் உழவரே வேளாளர் என வழங்கலுற்றதாகக் கருதுகின்றனர். நச்சினார்க்கினியர் உழவரை உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையாகப் பிரித்தாலும், இரு சாராரும் வேளாளரே என்பதில் ஐயமில்லை. மறைமலையடிகள் வேளா ளர் என்ற பெயர் எப்படி உண்டானதென்பதற்கு விளக்கம் தருகின்றார். வேளாண்மை என்ற சொல் உபகாரத்தைக் குறிப்பதாகவும், பயிர்த்தொழில் செய்தவர் உபகாரிகளாக இருந்ததாகவும், அதன் காரணமாய் அவர் வேளாளர் என வழங்கினதாகவும் கருதுகின்றார். இவரது கருத்து ஏற்புடையதா ?

எல்லா நிகண்டுகளுக்கும் முந்தியதாகக் கருதப்படும் திவாகரம், வேளாண்மை என்ற சொல்லுக்கு 'உபகாரம் ஈகையும் விளம்பும்' என்று பொருள் கூறுகின்றது. இந்

நிகண்டின் காலம் கி. பி. 9-ஆம் நூற்றுண்டு என்பர். இந்த வேளாண்மை என்ற சொல் அடியிற் கண்ட இலக்கியங்களில் இடம் பெற்றிருப்பது காண்க.

'தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கொருநாள்
கோளாளன் ஆகாமையில்லை—அவற்கண்டு
வேளாண்மை செய்தென கண்' [கலிமுல்லை. 1:44-46]

'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம்—விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.' [குறள். 81]

'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.' [குறள் 211]

'தாளாண்மை என்னும் தகைமைக்குள் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.' [குறள் 613]

'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.' [குறள் 614]

'பொருளிலாளன் வேளாண்மை காமுறு லின்னு.'
[இன்னு நாற்பது 36-1]

'ஏருடையான் வேளாண்மை தாங்கினிது ஆங்கினிதே.'
[இனியநாற்பது 3-13]

'நசைகொல்லார் நச்சியார்க்கு என்றுங் கிளைஞர்
மிசை கொல்லார் வேளாண்மை கொல்லார்-இசை
கோல்' [சிறுபஞ்ச மூலம் 48]

'வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளண்மையாலும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்குமடி கோளிலராய் வருந்தாதர்
வாழ்க்கை திருந்துதல் இன்று.'
[பழமொழி நானூறு 151]

'தாளவாய்ப் பெற்றுந் தந்துள்ளாதாசில்லாதது
வேளாண்மை வெங்கருணை வேம்பாகும்.'
[நாலடியார் 207]

இந்த மேற்கோள்களில் வேளாண்மை என்ற சொல் ஈகை, உபகாரம் என்ற பொருளையே உணர்த்தக் காண்கிரேம். திவாரகத்திற்குப்பின்னர் கி. பி. 10-ஆம் நூற்ருண்டில் தோன்றியதாகக் கருதப்படும் பிங்கலந்தை நிகண்டில் வேளாண்மை என்ற சொல்லுக்கு 'மெய்ம்மையும் கொடையும்' என்று பொருள் கண்டிருக்கிறது. ஆனல் இலக்கியங்களில் ஒன்றிலும் இச்சொல் மெய்ம்மை என்ற பொருளில் வழங்கவில்லை என்று தெரிகிறது. ஆகவே வேளாண்மை என்ற சொல்லுக்கு ஈகையும் உபகாரமும் என்ற பொருளே சரியானது எனக் கொண்டு, அடுத்து இப்பண்புடையவர் வேளாண் மாந்தர் என இலக்கியங்களில் வழங்குவதுபற்றிப் பார்ப்போம்.

'வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும்.'
[தொல் பொருள் களவியல் 105]

'வேளாண் பெருநெறி வேண்டிய இடத்திலும்.'
[தொல் பொருள் களவியல் 112]

'வேளாண்மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.'
[தொல் பொரு மரபியல் 635]

'தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்.' [புறம் 74 : 3.4]

'வேளாண் வாயில் வெட்பக் கூறி.'
[பொருநாற்றுப்படை 75]

'கழகத்தான் வந்தபொருள் காமுருமை
பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல்
உழவின் கட்காமுற்று வாழ்தல்—இம்மூன்றும்
அழகென்ப வேளாண் குடிக்கு.' [திருகடுகம் 42]

இங்கு ஈகையுடையோர் உபகாரிகள், கொடையுள்ளம் படைத்தவர் என்ற பொருளில் வேளாண், வேளாண்மாந்தர் என்ற சொற்கள் வழங்கக்காண்கிரேம். வேளாண், வேளாண் மாந்தர் தவிர்த்து, வேளார் என்ற சொல் விருப்பமுடையவர் என்ற பொருளில் [தாளிலாளர் வேளாரல்லர்] புறநானூற்றில் (செ 207-5) இடம் பெற்றுள்ளது.

மேலே கண்ட இலக்கியங்களில் வேளாண்மை, வேளாண், வேளாண் மாந்தர், வேளார் என்ற சொற்கள் இடம்பெற்றுள் ளனவே தவிர, வேளாளர் என்ற சொல் இடம் பெறக்காணேம். ஆனல் சங்க இலக்கியம் என்று கூறப்படும் பரிபாடலில்

'எருது தொழில் செய்யாதோடே
விடுங்கடன் வேளாளர்க்கின்று' [செ. 20, 63]

என்ற ஒரே இடத்தில் மட்டும் இப்பெயர் இடம் பெற்றுள்ளது. பரிபாடல் சங்க காலத்தைச் சேர்ந்ததல்ல என்றும், திருமுரு காற்றுப்படை போன்று மிகவும் பிற்காலத்தவை என்றும் ஒரு சாரார் கருதுவர். மற்ற சங்க இலக்கியங்களில் இல்லாமல் பரிபாடலில் மட்டும் ஒரே இடத்தில் இச்சொல் வழங்குவதைக் கொண்டு இந்நூல் சங்க காலத்திற்குப் பிற்பட்டதென்றே, அல்லது வேளாளர் என்ற சொல் இடைச் செருகலாய் அமைந் தது என்றே நாம் ஐயுறும் நிலையில் உள்ளோம். நிற்க. இச் சொல் பதினெண்கீழ்க்கணக்கு மற்றுமுள்ள இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளதா என்பது பற்றிப் பார்ப்போம்.

'வேளாளண் என்பான் விருந்திருக்க உண்ணுதான்'
[திரிகடு. 12.2]

'எருதுடையான் வேளாளன் ஏலாதான் பார்ப்பான்'
[நான்மணி 55-1]

'வேளாளர் என்றவர் வள்ளன்மையால் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூறிற்றுன் றேன்றி மாடமே'.
[ஞானசம்: தேவாரம்]

இங்கு வேளாளரை விருந்தோம்பும் பண்பு உடையவர் என்றும்,அவர் எருதுடையவர் என்றும்,தாளாற்றுபவர் என்றும் கண்டுளது. வேளாண்மையுடையவர் வேளாண், வேளாண் மாந்தர் என வழங்கி சங்ககாலத்திற்குப் பின்னர் அவர் வேளா ளர் என வழங்கினர் என நாம் கருத வேண்டியுளது. இக் கருத்து ஏற்புடையதுதானு ?

வேளாண்மையுடையவர் உபகாரிகள் என்று பொருள் கொள்ளும்போது, வேளாண்மை செய்யப் பொருள்வேண்டும். பொருள் இல்லாவிடில் உபகாரம் செய்ய முடியாது என்பது

'பொருளிலாளன் வேளாண்மை காமுறுலின்ஞ' (இன்ஞ நாற்பது 36-1) என்ற செய்யுளால் புலஞகும். பொருள் வேண்டுமாஞல் மெய்வருந்திப் பாடுபடவேண்டும், பாடுபடா விடில் பொருள் ஈட்டமுடியாது. இக்கருத்தை வள்ளுவர் 'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை' [குறள் 614] என்ற செய்யுளால் உணர்த்துகிருர். மெய்வருந்திப் பாடுபட்டால்தான் பொருள் ஈட்டமுடியுமெனக் கண்டோம். இம்மாதிரி உழைக்காதவர் விரும்பத்தக்கவர் அல்லர் எனப் பண்டைத்தமிழர் கருதியிருக்கின்றனர். இதற்கு 'தாளிலா ளர் வேளாரல்லர்' [புறம் 207] என்ற மேற்கோள் சான்ருக அமையும். இவ்வாறு முயன்று பொருள் ஈட்டுவது உபகாரம் செய்வதற்கே என்பது சான்ருேர் கருத்து. இதுபற்றி வள்ளு வர் 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' [குறள் 211] என்று கூறுவது காண்க. பண்டை நாளில் ஒருவர் இல்லத்திற்கு வருபவரை உண்பிப்பது சிறந்த அறமாகக் கருதப்பட்டது. விருந்தினரை உபசரிப்பது வேளாண்மாந்தர் கடமை என்ப தற்கு 'வேளாளன் என்பவன் விருந்திருக்க உண்ஞதான்' என்ற மேற்கோள் சான்ருகும். உணவு வழங்குபவர் உயிர் கொடுத்தவர் ஆவர் என்பது 'உண்டி கொடுத்தோரே உயிர் கொடுத்தோர்' 'உண்டி முதற்றே உணவின் பிண்டம்' என்ற இலக்கிய மேற்கோள்களால் தெளிவு.

இவ்வாறு விருந்தோம்பலுக்கு உதவும் உணவுப் பண் டத்தை உற்பத்தி செய்ய ஒருவர் அந்நாளில் உழவுத் தொழில் செய்யவேண்டும். தொல்காப்பியத்தில் 'வேளாண்மாந்தர் உழு தொழிலன்ன மொழிப பிறவகை நிகழ்ச்சி' என்ற செய்யுள் இடம் பெற்றிருப்பதை ஏற்கனவே கண்டோம். உழு தொழி லில் ஈடுபடுவதற்கு எருதும் ஏரும் இன்றியமையாதவை. இவை இரண்டும் இல்லாவிடில் ஒருவன் உழவஞக இயங்க முடியாது என்பது 'எருதுடையான் வேளாளன்' (நான்மணி 55-1) 'ஏருடையான் வேளாண்மை தாங்கினிது ஆங்கினிதே' (இனியவை நாற்பது 313) 'எருது தொழில் செய்யா தொட விடுங்கடன் வேளாளர்க்கின்று' (பரிபாடல் 20-63) என்ற மேற்கோள்களால் அறியற்பாலது. வள்ளுவர் இல்வாழ்க்

கையே வேளாண்மை செய்வதற்கு என வலியுறுத்துவதற்கு 'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு' (குறள் 81) என்று கூறலானூர்.

ஆக மேலே கண்ட சான்றுகளால் முன்னர் குறிப்பிட்டபடி ஈகை, உபகாரம், கொடைப் பண்புகளைச் சுட்ட வேளாண்மை என்ற சொல் தோன்றி, அவ்வாறு வேளாண்மை செய்தவர் வேளாண், வேளாண்மாந்தர் என வழங்கியிருக்கின்றனர் என அறிகிரேம். பிங்கலத்தை நிகண்டில் கண்டுள்ள மெய்ம்மை என்ற சொல் அடிப்படையில் வேளாண்மை என்ற சொல் தோன்றவில்லை என்பது தெளிவு. வேளாண்மை செய்யப் பொருள் வேண்டும். பொருள் ஈட்டத் தாளாற்றல் இன்றியமையாதது. தாளாற்றுவது என்பது மெய்வருந்தி உழைக்கவேண்டும். அக்காலத்தில் தாளாற்றுதல் என்பது உழவுத்தொழிலேயே மையமாகக் கொண்டது. உழவுத்தொழில் செய்ய எருதும் ஏரும் முக்கியம். இவை இல்லாவிடில் உழவு நடைபெறுவதற்கில்லை. உழவுத்தொழிலைச் செய்தவர் உழவர் எனப்பட்டனர். இவர்தான் நெல் மற்றும் உணவுப் பண்டங்களை உற்பத்தி செய்து, இரவலர்க்கும், புரவலர்க்கும், தம் கீழ் பணிசெய்த தொழில்மாந்தர்க்கும் பங்கிட்டு வழங்கினர். அதோடு விளைபொருளில் ஆறில் ஒரு பங்கை அரசுக்கு வரியாகச் செலுத்தினர். உழவரை மையமாகக் கொண்டுதான் பண்டைச் சமுதாயம் உருவாக்கப்பட்டிருந்தது. இல்வாழ்க்கையும் இவர் மத்தியில்தான் முதன் முதலில் தோன்றியதென்பதுவும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. இதனால்தான் வள்ளுவர் 'உழுவான் உலகத்தார்க்காணி', 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றெல்லாம் கூறினுர். ஔவையார் 'சீரைத் தேடின் ஏரைத் தேடு' என்று கூறியிருப்பதும் உழவுத்தொழிலின் உயர்வு பற்றியேயாம். எனவே நச்சினர்க்கினியர், மறைமலையடிகள் கூறியதுபோன்று உழவர் குடிதான் வேளாண், வேளாண்மாந்தர் என வழங்கி சங்க காலத்திற்குப் பின்னர் வேளாளர் என வழங்கலாயினர் என முடிவுகொள்வோம். திரிகடுகத்தில், உழவின்கட் காமுற்று வாழ்தல் அழகென்ப வேளாண் குடிக்கு' [செய் 42] என்று கண்டிருப்பது

காண்க. நிற்க. அடுத்து வெள்ளாளர் என்ற பெயர் உணர்த்தும் பொருள்பற்றிப் பார்ப்போம்.

## வெள்ளாளர் பொருளாக்கம்

வெள்ளாளர் யார் என்பதுபற்றிப் பலரும் பலவிதமாகப் பொருள் கண்டிருப்பதை ஏற்கனவே கண்டோம். அவைகளைப் பின்வருமாறு வகைப்படுத்துவோம்.

I. வெள்ளாளன் என்பது வெள்ளான், வேளக்காரன், படைமறவன்—வேள்—வேளிர், அரசியல் அதிகாரிகள் என்ற பொருள்படப் பிறந்தது.

II. உழவர் உழுவித்துண்போர், உழுதுண்போர் என இருவகையினர் ஆவர். அவரில் முன்னவர் வெயிற்காயாததலால் நிறம் வெளுக்கலாயினர். இவ்வாறு நிறம் வெளுத்தவர் வெண்களமர் வெள்ளாளர் எனப் பெயர் பெற்றனர்.

III. பள்ளனை ஆண்டவன், பள்ளன் + ஆளன்—பள்ளாளன் என்பது, பின்னர் வெள்ளாளன் என மருவி வழங்கலாயிற்று. அதாவது பள்ளரின் தலைவன் வெள்ளாளன். வெள்ளாட்டி என்ற பெயர் பள்ளத்தியையே உணர்த்தும்.

IV. வெள்ளத்தை அடக்கி ஆண்டவர் வெள்ளாளர் என்ற பெயர் பெற்றனர். வெள்ளாளர் தமிழகத்தில் குடியேறிய பிறகே நெற்பயிர் தோற்றுவிக்கப்பட்டது. அவர் மருத நில மக்களேயாவர்.

மேலேகண்ட கூற்றுக்களை முறையே ஆராய்வோம்.

1. வெள்ளாளர், வேளக்காரர், வேளிர் என்பவர் வெள்ளாளரின் முன்னோர் என டாக்டர். என். சுப்பிரமணியம், டாக்டர் மு. ஆரோக்கியசாமி, எம். சீனிவாச அய்யங்கார் மூவரும் கருதுகின்றனர். இம்மூவரில் எம். சீனிவாச அய்யங்கார் பிறிதொரு இடத்தில் வெள்ளாளன் என்ற பெயர் திணை நில மக்களில் இடம் பெறவில்லை என்றும், இவர்

திராவிடர் என்றும், திணை நில மக்கள் பண்டைக் குடியினர் ஆவர் என்றும் கூறுகிறார்[1]

The original classification of the non-Aryan Tamil Tribes in conspicuous by the absence of the vellala caste.[1]

வெள்ளான், வேளக்காரன் என்ற பெயர்கள் சங்க இலக்கியங்களிலொ, அல்லது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலோ இடம் பெருமல், இடைக்காலச் சோழர்காலக் கல்வெட்டுகளிலேயே முதன் முதலாகக் காணப்படுகின்றன. வெள்ளாளன் என்பவர் தொன்றுதொட்டுப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டு வந்தவர். வேளக்காரன் என்பவர் இடைக்காலச் சோழமன்னரின் வலங்கைப் படையினராக இருந்தவர். வெள்ளாளன் வலங்கை வேளக்காரப் படையினன் என இராசராச சோழன் காலத்திய கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது காண்க. 'இவ்வூரில் இருக்கும் வெள்ளாளர் ஸ்ரீராஜ ராஜ தேவர் படை ஜகநாத தெரிஞ்சவலங்கைவேளக்காரரில் விண்ணக்கன் ஐய்யமாறனுகிய சித்திராயாளி' [SII VII. 23] இதைக் கொண்டுமட்டும் வேளக்காரன் என்ற சொல்லிலிருந்து வெள்ளாளன் என்ற பெயர் தோன்றியதெண முடிவு கொள்வது சரியன்று வேள் என்பதற்கு விருப்பம் என்றும் பொருள்படும் என்று 'தாளிலாளர் வேளாரல்லர்' என்ற புறநானூற்றுச் செய்யுளிலிருந்து ஏற்கனவே கண்டோம். சங்க காலத்தில் வேள், வேளிர் என்பவர் குறுநில மன்னராகவும், வள்ளல்களாகவும் இருந்தனர் என்பதுவும், அவர் மூவேந்தருடன் பொருதியும், ஒருவருக்கொருவர் இடையே நடந்த போர்களில் உதவியும் வந்தது உண்மையே. ஆய்வேள், இருங்கோவேள், வேள்பாரி, வேள் ஆய், ஆய் அண்டிரன் முதலியோர் இதில் குறிப்பிடத்தக்கவர் ஆவர். வேள் எவ்வி, வேள் பாரி, நாங்கூர் வேள், அழுந்தூர் வேள் முதலானோர் இன்றைய வெள்ளாளரின் முன்னோர் என மறைமலையடிகள், டாக்டர் மு. ஆரோக்கியசாமி போன்ரோர் வாதிப்பர். இலக்கியங்களில் வேள் எவ்வி மகிழ்நன் எனச் சுட்டப்படுகிறுன். [அகம் 166] நாங்கூர் வேள், அழுந்

---

1 *Page 58. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

தூர் வேள் இவர்களும் மருதநிலத் தலைவர்களே. [அகம் 266]. மகிழ்நன் என்பவன் மருத நிலத் தலைவன் ; உழவர் குடியைச் சேர்ந்தவன்; நெற்பயிர் விளைவித்தவன், வேள்பாரி வேள் எவ்வியின் உறவினன் என்பர். வேளிர் குறிஞ்சி, முல்லை நிலங்களில் சிறு சிறு பகுதிகளை ஆண்ட குறுநில மன்னர் களாகவும் இருந்ததாகத் தெரிகிறது. பிங்கல நிகண்டில் வேள் என்பதற்கு, குமரன், சாளுக்கியன், மன்மதன் [780] என்று பொருள் கண்டிருக்கின்றது. நச்சினார்க்கினியர் வேள் என்ப தற்குப் பட்ட உரிமையுடையவர் என்று கூறுகிறார். எம். சீனி வாச அய்யங்காரைப் பின்பற்றி டாக்டர் மு. ஆரோக்கிய சாமியும் வேளிர் வேளாளரின் முன்னோர் என வாதிப்பதைக் கண்டோம். இவரது கூற்றை மறுக்கும் வகையில் டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவதாவது : ‘சிலர் தமிழ்நாட்டு வெள்ளாளர் வட நாட்டிலுள்ள சூத்திரர் என்றும், அவர் கங்கையாற்றுப் பகுதியிலிருந்து தெற்கே வந்தனர் என்றும் கூறுவர். வி. கனகசபை வெள்ளாளர் கங்கை குலத்தைச் சேர்ந்தவர் என்றும், பிறிதொரு சாரார், ஹரப்பா நாகரிக அழிவிற்குப்பின் சிந்துவெளிப் பிரதேசத்திலிருந்து வந்தவேளிர் மரபென்றும் கூறுவர். வெள்ளாளர் சேர, சோழ, பாண்டியர் படைகளில் பங்கு கொண்டு பணிபுரிந்தனர் என்பது உண் மையே. ஆனால் அதற்குக் காரணம் பார்ப்பனரல்லாத மக்க ளில் அவர்கள் உயர் நிலையில் இருந்ததுவேயாம். மேலும் வடநாட்டிலிருந்து ஓர் படை மரபு தமிழகத்தில் குடிபோந்து பயிர்த் தொழில் மேற்கொண்டனர் என்பது சிந்தனைக்கு அப்பாற்பட்டது. பண்டை நாளில் மருத நில உழவர் இத்தொழிலை மேற்கொண்டிருந்தனர் என்று சங்க இலக்கியங் கள் கூறுகின்றன. எனவே வெள்ளாளர் வேளிர் மரபைச் சேர்ந்தவர் என்று கொள்வது சரியன்று ’ [1]

Dr. K. K. Pillay says : ‘ Some say that the vellalas of Tamil Nadu were originally the Sudras of the North who migrated from the ganjetic Valley to the south.

*1 Page 230.—31 Social History of the Tamils. Dr. K. K. Pillay.*

V. Kanakasabai says that the Vellalas were descended from Gangaikulam. Others say that the velirs came from the Indus Valley region after the collapse of the Harappa civilisation. It is true that the Vellalas had martial relationship with the Pandya Chera and Chola Kings; but that was because of the high social position they held among the Non-Brahmins. More-over it is too much to imagine that the alien military tribe from the North had come down and later adopted agriculture as their occupation in Tamil Nadu. That the ulavars of marudam region had taken to these occupations for long is learnt from some of the earliest references in the Sangam classics. On the whole it is incorrect to identify the Velir with the Vellalas.' [1]

வேளிர் என்ற பெயரின் பொருள்பற்றி என். சிவராச பிள்ளை கூறுவதாவது : 'பழங்காலத் தமிழர் ஊர்களில் கிழார் அல்லது கிழவன் என்பவரது தலைமையின் கீழ் வாழ்ந்து வந்தனர். பல ஊர்கள் சேர்ந்து கூட்டாட்சி ஏற்பட்ட காலை அக்கூட்டாட்சிக்குத் தலைமை தாங்கியவர் வேளிர் அல்லது வேண்மான் என வழங்கினர்.' [2]

N. Sivaraja Pillay says : 'The premitive Tamils consisted of village communities each under the head-ship of a Kilar or Kilavan, the abbreviated form of the fuller name Kilavan or Kilavar. These terms refer to the persons who had the right of being the headman or chief of the respective village communities composed of single family and its numerous branches. A confederacy of such communities was presided over by a velir or velman' [2]

---

*1 Page 230—31. Social History of the Tamils. Dr. K.K. Pillay.*

*2 Page 67. Chronology of the early Tamils N. Sivaraja Pillay*

டாக்டர் என். சுப்பிரமணியம் வெள்ளாளர் என்ற சொல் வேள், வேளிர், வேட்கோ என்ற சொற்களிலிருந்து தோன்றியதென்கிருர். ஆனல் பிறிதொரு இடத்தில் வேளிர் என்பவர் வெள்ளாளரிடமிருந்து வேறுபட்டவர் என்கிருர். இவர் கூறுவதாவது : ' தமிழகத்தில் முடியுடை வேந்தர் மேலாட்சிக்குட்பட்ட சிறுசிறு பகுதிகளை ஆண்ட குறுநில மன்னர், மற்றும் தலைவர்களில் பெரும்பாலோர் வேளிர் என வழங்கினர். இவர் வேளிர் மரபைச் சேர்ந்தவர். வேளிர் என்பவர் வெள்ளாளரிலிருந்து வேறுபட்டவர்.' 1

Dr. N. Subramaniam says : ' Of the chieftains who ruled small territories within the large kingdom and subject to the over-all and theoratical soveriegnity of the crowned monarchs, belonged to the class of velirs who are to be distinguished from vellalas. 1

மேலே கண்ட கருத்துக்கள் பற்றி ஆராய்வோம் :

(1) வெள்ளான் என்ற பெயர் ஏற்கனவேகூறியபடி பரம்பரையாய்ப் பயிர்த்தொழில் செய்து வரும் உழவர் குடியைச் சுட்டும். வேளக்காரர் என்பவர் படை மறவர். குறிப்பாக இது சோழ மன்னரின் வலங்கைப் படையினரைச் சுட்டும். இது பற்றிய கல்வெட்டுச் சான்றை ஏற்கனவே கண்டோம். அதே போல் வேளிர் என்பது வெள்ளாளர் என்ற மரபைக் குறிக்காமல், பொதுவாக தலைவரையும், குறுநில மன்னரையும் குறிப்பதாகக் கண்டோம். மருதநிலத் தலைவராகிய ஊரன், கிழவன், மகிழ்நன் மற்றும் குறிஞ்சி, முல்லை நிலத்தலைவர்களில் சிறந்தவர் வேள், வேளிர் என வழங்கியதாகவும் முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. வெள்ளான் என்ற சொல் உழவரைச் சுட்டும்போது, வெள்ளாளன் என்பது வேள்ளான்+ஆளன்—வேள்ளானை ஆட்சி செய்தவன்—ஆண்டவன்—உழவர் தலைவன் என்று பொருள்படும் எனலாம். நச்சினர்க்

---

1 *Page. 68. History of the Tamils. Dr. N. Subramaniam.*

கினியர் வேளாளர் உழுதுண்ணும் வேளாளர்; உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையினர் என்றும், பின்னவர் தண்டத்தலைவரும், வேள், காவிதி முதலிய பட்டங்களுக்கும், மன்னர் மகட்கொடைக்கும் உரிமை உடையவர் என்றும் கூறியிருப்பது நாம் அறிந்ததே. இவர் வெள்ளான் குடியைக் கொண்டு உழுதுண்ணதால் வெள்ளான் + ஆளன் = வெள்ளாளன் என்று வழங்கினரா? நர்ச்சினார்க்கினியர் வேளாளன் என்று கூறியிருக்கின்ருரேயன்றி, வெள்ளாளன் என்று கூருதது கவனத்திற்குரியது. இப்பொருள்பற்றி பின்னர் சற்று விரிவாய்ப் பார்ப்போம். நிற்க.

(II) ஞா. தேவநேயப் பாவாணர் தமிழகத்தில் தொன்றுதொட்டு வெண்களமர், கருங்களமர் என இரு பிரிவினர் உண்டென்றும், முன்னவர் உழுவித்துண்பவர் என்றும், அவர் நிறம் வெளுத்ததால் வெண்களமர், வெள்ளாளர் என்றும், பின்னவர் வெயில் காய்வதால் நிறம் கறுப்புற்றதாகவும், அதனுல் கருங்களமர், காராளர் என்று வழங்கியதாகவும் கூறியிருப்பதாகக் கண்டோம். களமர் என்பது தொழிற் பெயர். இது மரபுப் பெயர் அன்று, நச்சினார்க்கினியர் களமர் என்பதற்கு ‘ களத்தில் உழவருக்குப்பின் தொழில் புரிவோர் ’ என்று பொருள் கொள்வார். மேலும் வெண்களமர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் இடம் பெறவில்லை. நிகண்டில் வண்களமர் என்ற சொல்தான் இடம் பெற்றுள்ளது. ஆதலால் கருங்களமர் காராளர் என்ருே, வெண்களமர் வெள்ளாளர் என்ருே பொருள் கொள்வதற்கில்லை. மேலும் இன்று பலரும் தம்மை வெள்ளாளர் என்று வழங்கி வருகின்றனரேயன்றி, காராளர் என ஒருவரும் வழங்கக் காணேம். பிற்கால இலக்கியங்களிலும், நிகண்டுகளிலும் இப்பெயர் இடம்பெற்றுள்ளது. ஆனுல் இன்று அது வழக்கற்றுப்போய்விட்டது. எனவே வெண்களமர் வெள்ளாளர் என்ற பாவாணர் கூற்று ஏற்கத்தக்கதன்று.

(III) பள்ளன் + ஆளன்—பள்ளாளன் என்பது வெள்ளாளன் என மருவி வழங்குவதாகவும், வெள்ளாட்டி என்பது பள்ளர்

வகுப்புப் பெண்டிரையே குறிப்பதாகவும் டாக்டர் ஜி ஓப்பர்ட் கூறுவதுபற்றி ஆராய்வோம்.

இவரது கூற்றை ஏற்பதற்கு, பண்டைத் தமிழகத்தில் பள்ளர் என்ற ஒரு வகுப்பு இருந்திருக்கவேண்டும். ஆனால் அது அக்காலத்தில் இல்லை என்றே தெரிகிறது. பிற்காலக் கல்வெட்டுகளிலேயே பள்ளர் என்ற பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இம்மரபினர் தம்மை தேவேந்திர குலத்தார், தேவேந்திர குல வேளாளர் என வழங்கி வருவது நினைவு கூரத்தக்கது. கரிவலம்வந்தநல்லூர் [ ARE. 432-1914 ] சீவிலிபுத்தூர் [ARE. 588/1926] கல்வெட்டுகளில் இவர் தேவேந்திரக் குடும்பர், தேவகன்னியின் புத்திரர் என்றும், தேவலோகத்திலிருந்து நால்வரைச் சென்னல், கன்னல், பனை, கதலி வித்துக்களுடனும், எருதுடனும் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தனது நாட்டிற்கு அழைத்துவந்ததாகவும், அவருள் முதல்வனுக்கு தேவேந்திரக் குடும்பன் என்ற பட்டமும், மற்ற மூவருக்கும் வாரியன், அக்கசாலை, இளந்தாரி என்ற பட்டங்களும் கட்டினதாகவும், ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகள் தோண்டி வேளாண்மை கண்டு, நாட்டைச் செழிப்பித்ததாகவும், பாண்டியன் மனம் மகிழ்ந்து அவருக்கு வெள்ளையானை, வெண்வட்டக்குடை, தேர், கொராடி, கொடுக்கு, சிலம்பு, பாவாடை, பஞ்சவன் விருது, பதினாறு கால் பந்தல், பதினெட்டு மேளம், ப்கற்பந்தம் முதலிய சிறப்புக்களை வழங்கியதாகவும் கண்டுள்ளது நாம் அறிந்ததே. இம்மாதிரிச் சிறப்புக்கள் தமிழகத்திலுள்ள வேறு ஒருமரபினர்க்கும் தமிழ் வேந்தர் வழங்கினர் என்பதற்கு எவ்விதச் சான்றும் இல்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இச்சிறப்புக்களிலிருந்து இவர் மன்னரின் பின்னோராகிய அவரது மரபினரே என நாம் கருத இடமாகின்றது. இவர் மன்னர் மரபினர் எனக் கூறும்போது, பிற மரபினர் இவர்மீது ஆதிக்கம் செலுத்தினர் எனக் கொள்வதற்கு இடமே இல்லை. மேலும் ஏற்கனவே குறிப்பிட்டதுபோன்று, பண்டைக்காலத்தில் வெள்ளாளன், பள்ளன் என்ற பெயர்கள் தாங்கிய வகுப்புகள் தமிழகத்தில் இல்லை. இடைக்காலச் சோழர் ஆட்சியில்தான் வெள்ளாளர் (வெள்ளாட்டி) என்ற வகுப்பு இருந்ததாகக் கல்வெட்டுகள்

செப்புகின்றன. அக்காலத்தில் இவர் உயர் குடியினராகக் கருதப்பட்டிருக்கின்றனர். விசயநகர் மற்றும் நாயக்கர் காலத்தில் வெள்ளாளர் நாலாஞ்சாதி, வேலைக்காரர், பணிமக்கள் என்ற பொருளிலும், வெள்ளாட்டி வேலைக்காரி, பணிப்பெண், ஆசை நாயகி என்ற பொருளிலும் வழங்கியதாக அக்காலச் செப்பேடுகள், கல்வெட்டுகள், இலக்கியங்கள் கூறுகின்றன. இக்காலத்தில் பள்ளர் வகுப்புப் பெண்டிர் வெள்ளாட்டி என வழங்காமல் பள்ளி, பள்ளத்தி என வழங்கியதாகப் பள்ளு நூல்கள் செப்புகின்றன. எனவே பள்ளரை ஆண்டதால் பள்ளன் + ஆளன் = பள்ளாளன் என ஆகிப் பின்னர் அப்பெயர் வெள்ளாளன் எனவும், வெள்ளாட்டி என்பது பள்ளாட்டி, பள்ளத்தி எனவும் மருவி வழங்கலாயின என்ற ஓப்பர்ட் கருத்து ஏற்புடைத்தன்று.

(iv) வெள்ளாளன் என்ற சொல் வெள்ளம் + ஆளன் = வெள்ளத்தை அடக்கி ஆள்பவன் என்ற பொருளில் வழங்குவதாகவும், வெள்ளாளர் தமிழகத்தில் குடியேறிய பிறகே நெற்பயிர் தோற்றுவிக்கப்பட்டதாகவும் கால்டுவெல், ஸ்டூவர்ட், பி. டி. சீனிவாச அய்யங்கார், வி. கனகசபை போன்றோர் கூறுவதையும், வெள்ளாளர் என்பது ஒரு குடி அல்லது மரபுப் பெயர் அல்ல என்றும், வெள்ளாண்மை கண்டவர் அனைவரும் வெள்ளாளர் என வழங்கியதாக நெல்சன் போன்றோர் கூறுவதையும், வெள்ளாளர் சோழ நாட்டிற்கு உரியவர் என்றும், மற்ற நாடுகளில் வெள்ளாண்மைத் தொழிலை மேற்கொண்ட பிற மரபினர் தம்மைத் தொழில் காரணமாய் வெள்ளாளர் என வழங்கலாயினர் என வெங்குசாமிராவ் கூறுவதையும், இவரது கூற்றுக்கு மாறாக எம். சீனிவாச அய்யங்கார், டாக்டர் என். சுப்பிரமணியம், ஓப்பர்ட் போன்றோர் வெள்ளம் + ஆளன் என்ற பொருளில் அப்பெயர் உருவாகவில்லை என வாதித்துள்ளதையும் முன்னர் கண்டோம்.

பொதுவாக வெள்ளம் = நீர்ப் பெருக்கு, ஆளன் = அடக்கி ஆளுபவன், ஆறுகளில் வரும் வெள்ளத்தை அணைகள் எழுப்பித் தடுத்து, நீர்நிலைகளில் தேக்கி கால்வாய்கள், வாய்க்கால்கள் அமைத்து, அவைகள் மூலம் வயல்களுக்குப் பாய்ச்சிப்

பயிர் விளைவிப்போர் வெள்ளாளர் என வழங்கினர் என்பதே பெரும்பாலோர் கருத்தாகும். ஆனால் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளதுபோன்று வெள்ளாளன் என்ற பெயர் சங்க இலக்கியங்களிலோ, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலோ இடம் பெறாமல், இடைக்காலச் சோழமன்னர் கல்வெட்டுகளில்தான் அது இடம் பெற்றுள்ளது. இக்காலத்தில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டவர் வெள்ளான் வகை, காராண் வகை என இருபிரிவினராய் இருந்ததாகத் தெரிகிறது. ஏற்கனவே குறிப்பிட்டுள்ளதுபோல் வெள்ளான் வகையினர் தொன்றுதொட்டுப் பயிர்த்தொழில் செய்தவர். பயிர்த்தொழில் தொன்றுதொட்டு ஆற்றோரமாகிய மருத நிலத்திலேயே நடைபெற்று வந்ததாக சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். அதனால் மருத நிலத்தில் வதிந்த உழவர் குடியினர்தான் வெள்ளான் வகை என வழங்கியிருக்கவேண்டும். இது ரயத்துவாரி முறை போன்றது. வெள்ளான்குடி [1] வெள்ளான் சுடுகாடு [2] இருந்ததாக அறிகின்றோம். காராண்வகை என்பது பிறர் நிலத்தைப் பயிர் செய்வது, இது குடிவாரம் போன்றது என்பர். காராண்மை, காரை ஆள்வது, மேகத்தாலாகிய மழையின் உதவியினால் பயிர் செய்வது என்றும் சிலர் பொருள் கொள்வர். இவரை சாதாரணமாய் மானாவாரி நிலக்குடிகள் எனவும் கொள்ளலாம். ஆசிரியர் நிகண்டு காராளர் என்பதற்கு மழையாலாகும் வெள்ளத்தையாள்வோர் என்றும், அது பெருக்காளர் என்பதற்குச் சம்மதம் என்றும், பெருக்காளர் வேளாளர் என்பது பிங்கல நிகண்டு என்றும் கூறுகின்றது. நிற்க.

மருத நில உழவர் இடைக்காலத்தில் வேளாளர், வெள்ளான்குடி என வழங்கியதாகக் கண்டோம். இக்காலத்தில்

---

1 பக்கம் 142. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு இரா. நாகசாமி.

2 பக்கம் 149. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு இரா. நாகசாமி.

வெள்ளாளர் குடும்பும் புரவுஞ் செய்தனர்[1] என்றும், சமூகத்தில் உயர்நிலையில் இருந்ததாகவும்[2] இவரை சிறை பிடிக்கக் கூடாது என்றும்,[3] இம்மரபுப் பெண்டிர் அம்பலம் ஏறக் கூடாதென்றும்,[4] கொலைக் குற்றங்களுக்கு இம்மரபினர் மரண தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டனர் என்றும்[5] கல்வெட்டுக்கள் சான்று பகர்கின்றன. இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு பார்த்தால், வெள்ளாளர் சமூகத்தில் அன்று உயர்நிலையில் இருந்தனர் என்பது வெள்ளிடைமலை.

சோழ நாட்டிலுள்ள மருத நில உழவர் தான் வெள்ளான் குடி என வழங்கினர் என முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இவ்வெள்ளான்குடி மூலம் நிலங்களைப் பயிர் செய்தவர் வெள்ளான் + ஆளன்—வெள்ளான்குடியை ஆள்பவன்—வெள்ளான் குடியின் தலைவன் என்ற பொருளில் ஏற்கனவே கூறியதுபோன்று வெள்ளாளன் என்ற பெயர் தோன்றியதா? இக்கருத்தும் வலிவற்றதென்றே நாம் கருத வேண்டியுளது. ஏனெனில் அரசியல் தலைவர்களுக்கு மட்டுமின்றிக் கோயில்கள், மடங்கள், மற்றும் வேதம் ஓதும் பார்ப்பனருக்கும், படைவீரருக்கும் நஞ்சை நிலங்கள் மானியமாகவும், நிவந்தமாகவும் வழங்கப்பட்டதாக அறிகின்றோம். இவ்வாறு வழங்கப்பட்ட நிலங்கள் இதர குடிகள் மூலம்தான் பயிர் செய்யப்பட்டிருக்க வேண்டும். இம்மாதிரிப்பட்ட நிலங்களின் சாகுபடி உரிமை அடிக்கடி மாறுதலுக்கு உட்பட்டிருந்தது. இந்நிலங்களைச் சாகுபடி செய்தவர் காராண் வகையினர் என ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இந்தக் காராண் வகையில் வெள்ளான் குடியினரும் அடங்கலாம். எனவே வெள்ளான்குடி மூலம் நிலங்களைப் பயிரிட்டவர்

---

1 ARE. 98/1897. S II. Vol. VI
2 ARE. 104/1908 and ARE 200/1929
3 S II. Vol. IV /No. 48 and ARE 96/1897
4 S II. Vol. XIII No. 312
5 ARE. 200/1929

அனைவரும் வெள்ளாளர் என வழங்கினர் என நாம் முடிவு கொள்வதற்கில்லை. பின் எவ்வாறு வெள்ளாளர் என்ற பெயர் வழக்கத்தில் வந்தது ?

அக்காலத்தில் ஊர்ச் சபைகள் இருந்து வந்ததாகவும் அவை குடும்பு மூலம் நடைபெற்று வந்ததாகவும் வரலாறு கூறும். இவ்வூர் சபைகளை நடத்தியவர் பொதுவாய் நில உடைமையாளரான வெள்ளான் குடியினரேயாவர். இவர் தான்விளை பொருளில் ஆறிலொரு பாகத்தை நிரந்தரமாய் அரசுக்கு வரியாகச் செலுத்தி வந்தனர். அக்காலத்தில் அரசுக்கு முக்கிய வருமானம் நிலவரியே ஆகும். அது குறிப்பாக நஞ்செய் நிலத்திலிருந்தே கிடைத்தது. நிலவரி ஊர்ச் சபைகள் மூலம் வசூலிக்கப்பட்டது. இச்சபைகளின் தலைவர்கள்தான் வெள்ளாளர் என வழங்கியதாக நாம் கருத வேண்டியுளது.

'வெள்ளாளன் குடும்பும் புரவுஞ்செய்தான்' எனக் கல்வெட்டு கூறுவதுபற்றி ஏற்கனவே பார்த்தோம். குடும்பு என்பது வாரியம், பஞ்சாயத்து என்றும், புரவு என்பது வரிவசூல் என்றும் பொருள்படும். ஆக வெள்ளான் குடியினரின் தலைவர்தான் வெள்ளாளர் என முதன் முதலில் வழங்கினர். அக்காலத்தில் ஊர்ச் சபைகளில் ஒருவர் நிரந்தரமாய் அங்கம் வகிக்க முடியாது. ஆண்டுதோறும் குடும்பு மாறியிடவும்[1] என்ற கல்வெட்டு கூறுவது காண்க. குடும்பு மாறியிடவும் என்கும்போது ஒருதடவை குடும்பு பார்த்தவர் மறுதடவை அதைப் பார்க்காமல் புதிய நபர்கள் குடும்பு பார்த்தனர் என்று பொருள்படும் எனவே தகுதியுள்ள அனைத்து வெள்ளான் குடியினரும் குடும்பு பார்க்க அக்காலத்தில் வாய்ப்பு இருந்தது என்பது வெளிப்படை. ஆக ஊர்ச்சபைத் தலைவர்களைக் குறிக்க ஏற்பட்ட பெயர், இன்று ஒரு மரபுப்பெயராய் வழங்கி வரக் காண்கிறோம். வெள்ளம் + ஆளன்-வெள்ளாளன்-வெள்ளத்தை ஆளுபவன் என்ற பொருளில் பிறந்தது என்ற கருத்தும் ஏற்புடையது என்றாலும், குடும்பு பார்த்தவரே முதன் முதலில் வெள்ளாளர் என வழங்கினர் என்பதுவே சரியான பொருளாகும். இடைக்காலச் சோழர் ஆட்சியில்தான் இப்

1 *ARE.* 104/1897

பெயர் தோற்றம் கண்டுளது. குடும்பு பார்த்தவர் வெள்ளாளர் என வழங்கிப் பின்னர் குடும்பு பார்க்கத் தகுதியுள்ள வெள்ளான் குடியினர் அனைவரும் வெள்ளாளர் என வழங்கினர் என நாம் முடிவு கொள்ளலாம். ஆனால் பின்னாளில் வெள்ளாளன், வெள்ளாட்டி என்ற பெயர்கள் ஏற்கனவே குறிப்பிட்டது போல் வேலைக்காரன், பணிப்பெண், ஆசைநாயகி என்ற பொருளில் வழக்கில் வந்துள்ளன. இம்மாற்றம் எவ்வாறு ஏற்பட்டது என்பதுபற்றிப் பின்னர் பார்ப்போம். நிற்க.

கால்டுவெல் வெள்ளாளர் தமிழகத்தில் குடியேறின பிறகு தான் நீரின் உதவியால் நடைபெறும் நெற்பயிர் தமிழகத்தில் தோன்றியதாகக் கூறுவதைக் கண்டோம். இவர் கூற்றுப்படி நெற்பயிர் விளைவித்தவர் தான் வெள்ளாளர் என வழங்கினர். வெங்குசாமி ராவ் கூற்றுப்படி உழவர் தான் வேளாளர் [வெள்ளாளர்] ஆவர். இவர் கூறுவதாவது: 'நாகரிகம் தோன்றிய ஆரம்ப நாளில் நில உரிமையுடைய பயிர்த் தொழில் ஒரு தனிப்பட்ட குடியினரிடம் அடக்கமாய் இருந்து வந்தது என ஊகிக்க இடமுளது. ஏனெனில் பண்டைய இந்திய சமூக அமைப்புப்படி ஒவ்வொரு குடியினர்க்கும் தொழில்கள் தனித் தனியாய் வரையறுக்கப்பட்டிருந்தன. இந்நியதிக்கு மாறாக வெள்ளாளர்க்குத் தனிப்பட்ட சலுகைகளுடன் ஏற்பட்டிருந்த பயிர்த்தொழில் செய்யும் உரிமை மறுக்கப்பட்டதெனக் கொள்வதற்கு பண்டுதொட்டு வழக்கில் உள்ள பாரம்பரியம் இடமளிப்பதாயில்லை.' 1

Venkusamy Rao says: 'It is presumable that the proprietary agriculture was at first vested as an exclusive calling in a particular tribe since it was an essential feature of all early Indian institutions to make each occupation the exclusive calling of a particular class of people and no reason appears for rejecting the concurrent testimony of traditions that the class to whom was assigned agriculture with all the privilege attached to it were vellalas.' 1

1 *Page 402. Tanjore Dt. Manual. Part II. T. Venkusamy Rao. 1883.*

ஆக இதுவரை நாம் கண்டவற்றிலிருந்து வேளாளர் என வழங்கியவர் உழவர் எனவும், இவர்தான் இடைக்கால சோழர் ஆட்சியில் வெள்ளான்குடி எனவும், அவரது தலைவர்தான் வெள்ளாளர் எனவும் வழங்கியதாகவும் அறியலாகின்றோம். எனவே வேளாளர், வெள்ளாளர் என வழங்கும் இரு சாராரும் உழவர் குடியினரேயாவர். இந்த உழவர் யார் என்பது பற்றி அடுத்து ஆராய்வோம்.

உழவர் யார் ?

இன்று தமிழகத்தில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவருள் அகம்படியர், அம்பலகாரர், [வலையர்] இடையர், கம்மாளர், கள்ளர், சாணார், [நாடார்] செட்டியார் நத்தமர், பள்ளர், [தேவேந்திர குலத்தார்] பள்ளி, [படையாச்சி-வன்னியர்] பறையர், மறவர், வேளாளர் போன்று பல்வேறு மரபினரைக் காண்கிறோம். இவரில் இடையர் கால் நடைகளைப் பேணுபவர் என்றும், கம்மாளர் கைத்தொழிலாளர் என்றும், சாணார் கள்ளிறக்குபவர் என்றும், செட்டியார் வணிகத் தொழிலில் ஈடுபடுபவரென்றும், அகம்படியர், அம்பலகாரர், கள்ளர், மறவர் படைத்தொழில் புரிபவரென்றும், வேளாளர், நத்தமர் விவசாயிகள் என்றும், பள்ளர், பள்ளி, பறையர் விவசாயத் தொழிலாளர் என்றும் 1911-ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக்கில் கண்டுள்ளது. ஆக வேளாளர் நத்தமர், பள்ளர், பள்ளி, பறையர் இவர் ஐவரும் உழவர் என வழங்குவதற்கு உரியவர் எனத் தெரிகிறது. மற்ற மரபினரில் ஒருசிலர் வேளாண்மைத் தொழிலில் இன்று ஈடுபட்டு வந்தாலும், அவர் பண்டைய நாளில் வேறு தொழில்களைச் செய்து வந்தவரென்றே கருதவேண்டியுள்ளது.

வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு வருவதாகக் கண்டுள்ள ஐந்து மரபினரில், நத்தமர் என்பவர் மிகவும் சிறுபான்மையினர் ஆவர். சுமார் 200 ஆண்டுகளுக்குமுன் இவர் தென் மாவட்டங்களில் குடியேறியதாகத் தெரிகிறது. மற்ற

மாவட்டங்களில் இருப்பதைவிட திருச்சி மாவட்டத்தில்தான் இவர் அதிக எண்ணிக்கையில் இருக்கின்றனர். தென்னாற்காடு, தஞ்சை, புதுக்கோட்டை, இராமநாதபுரம், மதுரை, வட ஆற்காடு, சேலம் இங்கெல்லாம் சிறுபான்மையினராகவே உள்ளனர். 1911-ஆம் ஆண்டு மக்கள் குடிக்கணக்கின்படி இவரது எண்ணிக்கை 1,62,781 ஆகும். [இதில் சுருதிமான், மலையமான் பிரிவுகளின் எண்ணிக்கையும் அடங்கும்]. பள்ளி வகுப்பார் தென்னாற்காடு, வட ஆற்காடு, செங்கற்பட்டு, சேலம், தர்மபுரி, கோயம்புத்தூர், தஞ்சை, திருச்சி, மதுரை மாவட்டங்களில் காணப்படுகின்றனர். இவர்கள் தெலுங்கர் ஆட்சியின்போது கொள்ளிடத்திற்கு வடக்கேயிருந்து தஞ்சை, திருச்சி, கோயம்புத்தூர், மதுரை மாவட்டங்களில் குடியேறினர் எனத் தெரிகிறது.[1] பறையர் தமிழகம் முழுவதும் பரவலாகக் காணப்பட்டாலும் அவர்கள் வட ஆற்காடு, தென்னாற்காடு, செங்கற்பட்டு, தஞ்சை மாட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் இருந்துவரக் காண்கிறோம். பள்ளர் வட ஆற்காடு, செங்கற்பட்டு, தர்மபுரி மாவட்டங்களில் அறவே இல்லை. இதர மாவட்டங்களுள் தென்னாற்காடு, சேலம், கோயம்புத்தூர் இங்கெல்லாம் சிறுபான்மையும் மற்றவற்றில் பெரும் எண்ணிக்கையிலும் காணப்படுகின்றனர். வேளாளர் தமிழகமெங்கும் பரவலாகக் காணப்படுகின்றனர். இந்த ஐந்து மரபினரும் பண்டைக் காலத்தில் தமிழகத்தில் இருந்தனரா? இவருள் பண்டைய உழவர் யார்? இவ்வினாக்களுக்கு இங்கு விடைகாண முயல்வோம்.

இடைக்காலத்தில் தோன்றிய நிகண்டுகளில் நத்தமர், பள்ளர், பறையர் என்ற வகுப்புகள் இடம் பெறக் காணோம். பள்ளி என்பதற்கு முல்லை நிலத்து ஊர் என்றே அவற்றில் பொருள் கண்டுள்ளது. ஆனால் இடைக்கால சோழர் கல்வெட்டுகளில் பள்ளி, பறையர் வகுப்புகள் மட்டும் காணப்படுகின்றன. பள்ளர் என்ற வகுப்பு இடம் பெறவில்லை. ஆனால் வேளாளர்

---

1 Tanjore Dt. Manual. T. Venkusamy and Rao Madura Manual J. H. Nelson.

என்ற வகுப்பு ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் சங்க காலத்திற்குப்பின்னர் தோன்றிய இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. இப்பெயர் தாங்கிய வகுப்பு சங்க காலத் தமிழகத்தில் இருந்ததில்லை என்பது நாம் அறிந்ததொன்றே. திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை இலக்கியங்களில் இப்பெயர் இடம் பெறாததுவும் குறிப்பிடத் தக்கது. மற்ற மரபினருள் பறையர் தவிர்த்து வேறு ஒருவரும் சங்க இலக்கியங்களில் பேசப்படவில்லை. பறையர் என்ற பெயரும்

'கருங்கால் வரகே, இருங்கதிர்த்தினையே
சிறு கொடிக்கொள்ளே பொறிகிளர் அவரையோடு
இந்நான் கல்லது உணாவும் இல்லை
துடியன், பாணன், பறையன், கடம்பன்
இந்நான்கல்லது குடியும் இல்லை.' [புறம் 335]

என்ற ஒரே இடத்தில்மட்டும் காணப்படுகின்றது. இந்த நான்கு குடிகளும் மலைவாழ் மக்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் திணை நில மக்களில் வராததுவும் குறிப்பிடத் தக்கது. நிற்க.

தமிழகத்தில் இன்று காணப்படாத அனேக குடிகள் சங்க காலத்தில் வாழ்ந்து வந்ததாக அக்கால இலக்கியங்களிலிருந்து அறிகின்றோம். அக்குடிகளில் குறிப்பிடத்தக்கவர் யவனர், மோரியர், மழவர், கோசர், வேளிர், அருவாளர், எயினர், ஒளியர், கடம்பர், துடியர், விறலியர், களமர், தொழுவர், கடைசியர், மள்ளர், மல்லர், முதலியவர் ஆவர். இக்குடிகள் எல்லாம் காலப்போக்கில் மறைந்துவிட்டனவா? அல்லது பழைய குடிப்பெயரை விடுத்து, புதுப் பெயரைத் தழுவியுள்ளனவா ? சங்க இலக்கியங்களில் காணப்படாத அய்யர், அய்யங்கார், முதலி, பிள்ளை, செட்டி, கள்ளர், சாணார், கைக்கோளர், செங்குந்தர், சேனைத் தலைவர், பள்ளர், பள்ளி, நத்தமர் முதலிய அநேக வகுப்புகள் இன்று நாட்டில் இருந்துவரக் காண்கிறோம். ஆகப் பண்டைய உழவர் சமூகம் சங்க இலக்கியங்களில் வரும் எந்தக் குடியைச் சேர்ந்தவர் என்பதுபற்றி நாம் ஆராய்ந்தாகவேண்டும்.

பண்டைய நாளில் தமிழகத்தை அதன் நிலக் கூறுபாட்டுக்குத் தக்கபடி நான்கு பிரிவாக வகுத்துள்ளனர். அவற்றை மலையும் மலையைச் சார்ந்த பகுதி குறிஞ்சி எனவும், காடும் அதைச் சார்ந்த பகுதி முல்லை எனவும், ஆற்றோரம், நீர் நிலையையடுத்த சமவெளிப் பகுதி மருதம் எனவும், கடலும் கடலைச்சார்ந்த பகுதி நெய்தல் எனவும் வழங்கினர். இந்த நான்குவித நிலப் பாகுபாடுகள்பற்றி தொல்காப்பியர்

'மாயோன் மேயக் காடுறை உலகமும்,
சேயோன் மேய மைவரை உலகமும்,
வேந்தன் மேயத் தீம்புனல் உலகமும்.
வருணன் மேயப் பெருமணல் உலகமும்,
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்
சொல்லிய முறையிற் சொல்லவும் படுமே'

[தொல் பொரு. 1. அக. 5]

இந்த நான்குவகை நிலங்களைத் தவிர, குறிஞ்சி, முல்லை நிலங்கள் வறட்சியுற்ற காலை அடையும் மாறுதலைக் குறிக்க, பாலை என்ற ஒரு திணையை வகுத்துள்ளனர். இந்த ஐவகை திணைப் பகுதிக்குள்ள மக்கள் பிரிவினர், அவரது தொழில்கள், வழிபடும் தெய்வம் முதலியவற்றைக் கீழே காண்போம்.

குறிஞ்சி நிலம்

இங்கு வாழ்ந்தவர் குறவர், கானவர், குன்றவர், புனவர், இறவுளர், கொடிச்சியர், குறத்தியர் எனவும், இவரது தலை மக்கள் கானக நாடன், பொருப்பன், பொருநன், ஆனமலையன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி எனவும் வழங்கினர். இவர்கள் தேன் எடுத்தும், கிழங்குகள் அகழ்ந்தும். மரங்களின் காய்கனி, மூங்கிலரிசி, காட்டு விலங்குகள், பறவைகள், இவற்றின் ஊன் முதலியவற்றை உணவாகக்கொண்டும் வாழ்ந்தனர். இவரது குடியிருப்பு சிறுகுடி, குறிச்சி எனப்படும். வழிபடும் தெய்வம் சேயோன் ஆவன்.

முல்லை நிலம்

இதில் வாழ்ந்தவர், அண்டர், இடையர், ஆயர், கோவலர், பொதுவர், ஆய்ச்சியர், தொதுவியர், பொதுவியர், குடத்தியர் எனவும், தலைமக்கள் அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன், கானக நாடன், மனைவி, கிழத்தி எனவும் வழங்கினர். இவர்கள் கால்நடைகளைப் பேணியும் அவற்றின் ஊன், பால், தயிர், நெய் மற்றும் வரகு, சாமை. முதலியவற்றை உணவாகக் கொண்டும் வாழ்ந்தனர். இவரது குடியிருப்பு பாடி, சேரி, பள்ளி என வழங்கியது. வழிபடும் தெய்வம் மாயோன் ஆவன்.

பாலை நிலம்

இதில் வாழ்ந்தவர் எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர் எனவும், இதன் தலைமக்கள் மீளி, விடலை, காளை, எயிற்றி எனவும் வழங்கினர். இவர்கள் உடம்பு வளையாமல் பிறர் தேட்டைக் கவர்வதிலேயே நாட்டம் கொண்டவர். வழிப்போக்கரை இடைமறித்துத் தாக்கி துன்புறுத்தி வழிப்பறி செய்வது இவரது தொழிலாக அமைந்தது. ஆறலைத்தலால் கிடைப்பதைக் கூட்டுணவாகக் கொண்டனர். இவரது குடியிருப்பு பறத்தலை, சொல், குறும்பு என வழங்கியது. வழிபடும் தெய்வம் கொற்றவை ஆகும். 'அறம் செயின் மறம் கெடும்' என்ற கோட்பாட்டைப் பின்பற்றுபவர்.

நெய்தல் நிலம்

இதில் வாழ்ந்தவர் பரதவர், நுளையர், அடவர், வலைஞர், அலவர், திமிலர். நுளத்தியர், பரத்தியர் எனவும், தலைமக்கள் கொண்கணன், துறைவன், கோப்பன், புலம்பன் எனவும் வழங்கினர். இவர் கடலில் மீன் பிடித்தும், கடற்கரையில் உப்பு விளைவித்தும் தொழில் நடத்தினர். மீன், உப்பு இவற்றுக்குப் பண்ட மாற்று மூலம் பெற்ற உணவுப் பொருளையும் உணவாகக் கொண்டனர். இவரது குடியிருப்பைச் சிறுகுடி, பாக்கம் என்பர். இவரது தெய்வம் வருணன் ஆவன்.

**மருத நிலம்**

இங்கு வாழ்ந்தவர் களமர், தொழுவர், உழவர், விளைஞர், மள்ளர், கடைஞர், இளைஞர், கம்பளர், உழத்தியர், ஆற்றுக் காலாட்டியர், எனவும் தலைமக்கள் ஊரன், மகிழ்நன், கிழவன், எனவும் வழங்கினர். இவர்கள் நிலத்தை வெட்டிக் கொத்தி சமப்படுத்தி வயல்களாக்கி, அவற்றை உழுது, பண்படுத்தி, ஆற்றின் நீரை கால்வாய்கள் மூலம் வயல்களுக்குப் பாய்ச்சி நெல், கரும்பு, மஞ்சள், பருத்தி முதலிய வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களை உற்பத்தி செய்தனர். இவரது உணவு சென்னெல்லும், வெண்ணெல்லும் ஆகும். இவரது குடியிருப்பு ஊர் எனப்பட்டது. வழிபடும் தெய்வம் வேந்தன் ஆவன். தொல்காப்பியர் 'வேந்தன் மேயத் தீம் புனல் உலகம்' என்று கூறியிருப்பது காண்க. பிற்காலத்தில் வேந்தனை இந்திரன், தேவேந்திரன், புரந்தரன் என வழங்கினர்.

ஆக மருத நிலத்தில்தான் உழவு தொழில் நடைபெற்றதாக அறிகிறோம். ஆனால் அந்த உழவுத்தொழில் நடத்திய உழவர் குடியை நாம் இன்று இலகுவில் அடையாளம் காணமுடியாத நிலையில் உள்ளோம். வேளாளர், வெள்ளாளர் யார் என்பது பற்றி அறிய இந்த உழவர் குடியினரை நாம் அடையாளம் காணவேண்டியது இன்றியமையாததாகும். சங்க இலக்கியங்களில் உழவர்குடி பற்றி செய்திகள் இல்லாமல் இல்லை. ஆதலால் அந்த உழவர் குடியினர் யார் என்பது பற்றி அறிய சங்க இலக்கியங்களின் துணையை நாடுவோம்.

முதலில் மருதநில அன்றையத் தலைமக்களைச் சந்திப்போம்.

**ஊரன்**

'குண்டு நீராப்பற் றண்டுறை யூரன்' [நற். 100.3]

'கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து,
பழனயாமை பசு வெயிற் கொள்ளும்
நெல்லுடை மறுகின் நன்னர் ஊர,' [அகம் 306.6.8]

'முன்னெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன் பெருவட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிரைக்கும் ஊர' [ஐங் 47]

'போர் முற்ருென்று அரியாத புரிசை சூல்புனல் ஊரன்'
[கலித். மருதம் 2.5]

மகிழ்நன்

'கழனி நல்லூர் மகிழநர்க்கென்' [நற் 70.8]

'மகிழ்நன் மார்பே வெய்யையால் நீ' [குறு 73]

'அம்மவாழி தோழி மகிழ்நன்' [ஐங் 31]

'தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நன் மருகின் மதுரையும் வறிதே' [சிறுபாணு 66]

'செல்லல் மகிழ்ந! நிற் செய் கடன் உடையென்மன்'
[அகம் 376.1]

[தலைவன் அத்தியைச் சுட்டும்]

'பழம்பல் நெல்லின் வேளூர்வாயில்,
புனை இருங் கதுப்பின் நீ கடுத்தோள் வயின்
அனையேன் ஆயின் அணங்குக என்!' என
மனையோட் தேற்றும் மகிழ்நன் ஆயின்'
[அகம் 166. 4-9-11[

[இவன் வேளூர்த் தலைவன்]

'ஆடினை என்ப மகிழந அதுவே
யாழ் இசை மறுகின் நீடூர் கிழவோன்'
[அகம் 266-9-10]

[இது வேள் எவ்வியைக் குறிக்கும்.]

**கிழவன்**

'குருதித்துக் கிளாடிய களம் கிழவோயே' [புறம் 371-27]

[இது தலையலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் குறிக்கிறது]

' கடும்பகட்டு யானைச் சோழன் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன் ' [அகம் 356-13]

[இவன் சோழன் வழிவந்தவன்]

' சாரி நெல்லின் சிறைகொள்வேலி யாயிரம்
விளையூட்டாக காவிரி புரக்கும் நாடு கிழவோனே '
[பொருந 248]

[இது கரிகாலனைக் குறிக்கிறது]

' கொழு மீன் விளைந்த கள்ளின்
விழு நீர் வேலி நாடு கிழவோனே ' [புறம் 13-12-13]

[ இது முடித்தலை கோப்பெருநற்கிள்ளியைக் குறிக்கின்றது. ]

' கடற்பஃருத்த நாடு கிழவோயே ' [புறம் 30-15]

[இது சோழன் நலங்கிள்ளியைக் குறிக்கும்]

' காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவன் உள்ளி அவன்படர்அம்
செல்லேன் செல்லேன் பிறர் முகம் நோக்கேன் '
[புறம் 399-12-14]

[இது கிள்ளி வளவனைக் குறிக்கிறது]

'மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசெனப்படுவது நினதே பெரும ' [புறம் 35-3-5]

[இது மூவேந்தர் மரபைச் சேர்ந்த குறுநில மன்னரைக் குறிக்கும்]

'காமம் கைமிகச் சிறத்தலின் நாண்கிழந்து
ஆடினே என்ப மகிழ்ந ! அதுவே
யாழ் இசை மருகின் நீடூர் கிழவோன்' [அகம் 266-8-10]
[இது நீடூர்த் தலைவன் எவ்வியைக் குறிக்கிறது
இவன் மிழலைக் கூற்றத்து வேள் ஆவன்.]

இதுவரை எடுத்தாண்ட இலக்கியச் சான்றுகளிலிருந்து மருதநிலத் தலைமக்கள் வேள் ஆகவும், மன்னராகவும் இருந்த தாக அறிகின்றோம். அடுத்து இந்நிலத்து மக்களைக் காண் போம்.

களமர்

'கள்ளார் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே' [மதுரைக்காஞ்சி 260]
'மனைக் களமரோடு களமென்கோ' [புறம் 387-25]
'இனக்களமர் இசைப் பெருக' [பொருந 194]
'களம ருழவர் கடிமறுகு பிறசார்'
[பரிபாடற் பகுதிகள் 28-1-27]
'வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்' [நற்றிணை 125-9]
'களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்' [புறம் 212-2]

களமர் என்பதற்கு நச்சினார்க்கினியர் உழவர் கீழ்ப் பணி புரிபவர் என்று கூறுவதாக ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. எனவே களமர் என்பது மரபுப்பெயர் ஆகா. அது ஒரு தொழிற் பெயர் ஆம்.

தொழுவர்

'நெல்லரியும் இருந் தொழுவர்' [புறம் 24-1]
'நீர்த்தெவ்வு நிரைத் தொழுவர்' [மதுரைக்காஞ்சி 89]
'நெல்லரி தொழுவர் கூர் வாழுற்றென' [நற்றி 195-6]
'நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்' [புறம் 209-2]

இங்கு தொழுவர் தொழில் மக்களையே குறிப்பதாயுளது. உழவரின்கீழ் பணி செய்தவர் இவ்வாறு வழங்கியுள்ளனர்.

இவர் பணி மக்கள் ஆவர். நிகண்டுகளில் தொழுவர் என்பதற்குத் தொழில் செய்பவர் என்றும், தொழுதலையுடையவர் என்றும், கம்மியர் என்றும் பொருள் கண்டிருப்பது காண்க. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்' என வள்ளுவர் கூறுவதுவும், பட்டினப் பாலையில் 'தொல் லருவாளர் தொழில் கேட்ப' என வரும் அடியையும் நோக்குக. ஆகத்தொழுவர் என்பதுவும், தொழிற் பெயரேயன்றி மரபுப் பெயர் ஆகா.

விளைஞர்

'கருங்கை விளைஞரும் களமரும் கூடி' [சிலம்பு நாடுகாண் 125]

[விளைஞர் என்பதற்கு விளைவிப்பவர் ஆகும். இது மரபுப் பெயர் இல்லை.]

கம்பனர்

இது ஆரவாரமுடையவர் என்று பொருள்படும். சூடாமணி நிகண்டின்படி மள்ளர்க்குரிய பெயர் ஆகும்.

இளைஞர்

இதுவும் மரபுப்பெயர் ஆகாது. சங்க இலக்கியங்களில் மன்னர், தெய்வம், வீரர் இளைஞ என இவர்கள் விளிக்கப் பட்டுளர்.

உழவர்

' பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும் ' [புறம். 13-11]
' மென்புலத்து வயலுழவர்
வன்புலத்துப் பகடு விட்டு ' [395-1-2]
' கொடு மேழி நசையுழவர் ' [பட்டினபாலை-205]
' தண்டலையுழவர் தனிமனைச் சேர்ப்பின் ' [பெரும்பாண்-355]
' இரப்போர் இரங்கும் இன்னு வியன் களத்து
ஆள் அழிபடுத்த வாளேர் உழவ ' [புறம் 368-12-13]
[சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனைக் குறிக்கிறது]

, வைகல் உழவ வாழிய பெரிது எனச் ' [புறம் 392-11]
[அதியமான் நெடுமானஞ்சி மகன் பொருட்டெழினியைக் குறிக்கிறது]
' ஒரேர் உழவன் போலப் ' [குறுந் 131-5]

மேலேகண்ட மேற்கோள்கள் உழவர் என்பது தொழிற் பெயரையே சுட்டுகின்றதேயன்றி மரபுப் பெயரை அல்ல என அறிகின்ரேம். எனினும் உழவ! என தமிழ் வேந்தருள் சிலர் விளிக்கப்பட்டிருப்பதால், உழவர் குடியிலிருந்துதான் தமிழ் வேந்தர் தோன்றினர் என யூகிக்க ஏதுவாகின்றது.

கடைஞர்

சங்க இலக்கியங்களில் கடைஞர் என்ற பெயர் இடம் பெறவில்லை. கடைசியர், கடையோர் என்ற பெயர்கள் புறநானூற்றில் வரக்காண்கிரேம்.

' தொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்' [புறம் 61-1]
' கடையோர் விடுவாய்ப் பிசிரொடு
சுடுகிழங்கு நுகர் ' [புறம் 225-3]
என்ற இலக்கிய மேற்கோள்களைக் காண்க.

கடைசியர், கடையோர் என்பவை பின்செல்பவர் எனப் பொருள் படுமேயன்றி கடைவருணம் என்று பொருள்படாது என்பது உறுதி.

பெரியபுராணத்தில் கடைஞர் இடம் பெற்றுள்ளது காண்க.
' கடைஞர் மிடைவயற் குறைத்த கரும்பு
குறைபொழி கொழுஞ் சாறு [பெரி. புரா. திருநாவு 21-5]
' பைங்குழற் கதிர்நெல் மிலேச்சிய புல்
புலேச்சியர்கள் கள்ளுண்டு களிதூங்க கறங்கு பறையும்
கலிக்கும் இப்படித்தாகிய கடைஞர் இருப்பின்
வரைப்பின் வாழ்வார் ' [18 திருநாளைப்போவார் [10-11]

இங்கு கடைஞர் என்பவர் இடைக்காலத்தில் இந்து மத வைதீகக்கோட்பாடுகளுக்கு மாருகப்பசு மாமிசத்தை உண்டவரைச் சுட்டப் பயன்பட்டிருக்கின்றது. பசு ஊனைத் தின்ற

வரையும், ஒழுக்க நெறிக்கு மாருக நடந்தவரையும் புல்லர், புலையர் [கெட்டவர்] என்று வழங்கினதாக அறிகின்ருேம். அக் காலத்தில் பிணம் எரித்தவரைப் புலையர் என்று வழங்கினதாகவும் தெரிகிறது. ஆனல் இந்நாளில் தமிழகத்திலுள்ள தேவேந்திர குலத்தாரில் ஒரு சிறு பிரிவினரைக்கடைஞர் என்றும், கேரளாவில் சேரமன்னர் மரபினராகக் கருதப்படும் செருமான் என்பவரைப்புலையர் என்றும் வழங்கும் பழக்கம் மிகவும் பிற்காலத்தே வழக்கில் வந்ததாகவே நாம் கருத வேண்டியுளது.

ஆற்றுக்காலாட்டியர்

சங்க இலக்கியங்களில் கடைஞர் போன்று, ஆற்றுக்காலாட்டியரும் இடம் பெறவில்லை. ஆனல் பிற்காலத்தில் தோன்றிய பள்ளுநூல்களில் இப்பெயர் இடம்பெற்றுள்ளது. தேவேந்திர குலத்தார் மத்தியில் காலாடி என்ற ஒரு பிரிவு இருந்து வருவது கண்கூடு. இப்பெயர் காலாட்டி என்பதன் ஆண்பால் பெயராகும். இடைக்காலத்தில் தமிழ் வேந்தர் ஆட்சியின் கீழ் வேவுத்தொழிலில் ஈடுபட்ட ஆண்பாலார் காலாடி எனவும், அவரது பெண்டிர் காலாட்டி எனவும் வழங்கியிருக்க வேண்டும். இவரில் ஆற்ருேரங்களில் இருந்தவரை ஆற்றுக் காலாடி, ஆற்றுக்காலாட்டி என வழங்கியிருக்கலாம். செடியூல் வகுப்புப் பட்டியலில் 'காலாடி' என்ற பெயர் இடம் பெற்றிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

மள்ளர்

திவாகர நிகண்டில் மள்ளர் என்பதற்கு 'அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும் மள்ளர் எனும் பெயர்' என்றும், பிங்கல நிகண்டில், 'செருமலை வீரரும், திண்ணியரும் மருதநில மாக்களும் மள்ளரெனும் பெயர்' என்றும் கண்டுளது. திண்ணியர் என்பது யானைத்தலைவர், வலிமையுடையோர் என்றும் பொருள்படும். சூடாமணி நிகண்டு மள்ளன் என்பதற்கு வயவன், திறலோன், வீரன் என்றும், குறிஞ்சி, மருத நில மக்கள் என்றும் பொருள் கூறுகின்றது. இவரைக் குறிஞ்சி நில மக்கள் என்பது சரியன்று. இந்நிகண்டு கி. பி.

16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது இது நாயக்கர் காலமாகும் ஆசிரிய நிகண்டு மள்ளர் என்பதற்கு மறவர், வலிமை யுடையவர், கம்பளர், ஆரவாரமுடையவர் என்று பொருள் கூறுகின்றது. எனவே மள்ளர் ஏருக்கு உழவர், போருக்கு மறவர் என்பது தெளிவு. ஏர்த்தொழில் முடிந்தபின் மள்ளர் போருக்குச் சென்றதால் 'ஏரும் போரும் இணைபிரியாது' என்ற பழமொழி நாட்டில் வழக்கில் வந்தது எனலாம். சங்க இலக்கியங்களில் மள்ளர் உழுதொழிலில் ஈடுபடுங்கால் அவரை உழவர் எனக் கண்டுள்ளனர். சங்க காலத்திற்குப்பின் தோன்றிய சீவகசிந்தாமணி, [35] அரிச்சந்திரபுராணம், [43] பெரியபுராணம், [முனையவர் நாயனார் 1] கம்ப ராமாயணம், [பாலகாண்டம் நாட்டுப்படலம் 34-1] மற்றும் ஏராளமான தலபுராணங்களிலும் இதர இலக்கியங்களிலும், மள்ளர் உழவு தொழிலில் ஈடுபட்டதாகக் கண்டுளது. நற்றிணை, [260-3] ஐங்குறுநூறு, [432-3] கலித்தொகை, [முல்லைக்கலி 6:9-10] குறுந்தொகை, [34] அகநானூறு, [185] புறநானூறு, [10-9] பதிற்றுப்பத்து, [5 : 43-24—9 : 90-44] மற்றும் சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம், திரு விளையாடல் புராணம் முதலிய இலக்கியங்கள் மள்ளர் போர் மறவர் எனச் செப்புகின்றன.

நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் வேளாளர் பற்றிக் கூறுவதைக் காண்போம் : 'மன்னர் பின்னோரென்ற பன்மையான முடியுடையோரும், முடியில்லாதோரும், உழு வித்து உண்போரும், உழுது உண்போருமென மன்னரும் வேளாளரும் பலரென்றார். அவருள் உழுவித்துண்போர் மண்டலமாக்களும், தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும், நாங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரி யும், பெருஞ்சிக்கலும், வல்லமுங்கிழாரும் முதலிய பதியிற் றோன்றி வேளெனவும், அரசெனவும் உரிமையெய்தினோரும், பாண்டி நாட்டு காவிதிப் பட்டமெய்தினோருங் குறுமுடிக் குடிப் பிறந்தோர் முதலியோருமாய், முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்கு உரிய வேளாளராகுப. இருங்கோவேண் மானங் கடிப்பிடவூர் எனவும், ஆலஞ்சேரி மாயிந்தலூருண்கேணி,

நீரோப்பொன் எனவும் சான்ருேர் செய்யுட் செய்தார் : உரு வப்பஃதேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட் கோடலும், அவன் மகனுகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலுங் கூறுவார்.'

மேலே கண்ட சான்றுகளிலிருந்து உழவர் என்பவர் மருத நில மள்ளர் குடியினரே என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. இவர் மன்னர் மகட்கொடைக்கும் வேள், காவிதி பட்ட உரிமைக்கும் உடையோர் என்பதால் மருதநில உழவராகிய மள்ளர் குடியிலிருந்துதான் மூவேந்தரும் தோன்றினர் என்பது தெளிவு. மூவேந்தரின் தலைநகரங்களும், துறைமுகப் பட்டினங்களும் ஆற்ருேரத்தில் அமைந்திருந்ததுவும், நெல் உற்பத்தி நாகரிக வளர்ச்சிக்கு அடிப்படையானது என்பதுவும் யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றே. சங்க இலக்கியங்களில் மருதநிலத்து மக்களாகக் குறிப்பிடப்படும் ஊரன், மகிழ்நன், கிழவன் மள்ளர் குடியினரே என்பது குறிப்பிடத்தக்கது. இவரை நீர் நாடன், புனல் நாடன், 'நெல்லுடையான் நீர் நாடற்கோ' யாப்பெருங் கலவிருத்தி' 'சீர் சான்ற உயர் நெல்லின் ஊர்கொண்ட உயர் கொற்றவ' [மதுரைக் காஞ்சி 87-88] என்று சங்க இலக்கியங்கள் செப்புவதைக் காணலாம். மேலும் மன்னரில் சிலரை மள்ள! என்று இலக்கியங்கள் விளித்துக் கூறுவது மேலே கண்ட கருத்தை வலியுறுத்துவதாயுளது.

'மள்ளர் மள்ள மறவர் மறவ'
செல்வர் செல்வ செருமேற்படுந' [பெரும்பாண 455]
[இது தொண்டைமான் இளந்திரையனைக் குறிக்கிறது]
'முழூஉ வள்ளுரம் உனக்கும் மள்ள' [புறம் 219-2]
[இது கோப்பெருஞ் சோழனைக் குறிக்கிறது]
'செயல்மைக் கண்ணிச் சேரலர் வேந்தே
பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை
வாணுதல் கணவ மள்ளர் ஏறே' [பதி. பத்து 38. 15]

[இங்கு மள்ளர் ஏறே என்பது சேரன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரனைக் குறிக்கும் ]

'அறவர் அறவன் மறவர் மறவன்,
மள்ளர் மள்ளன், தொல்லோர் மருகன்'
[புறம் 399 19-20]

[மள்ள என்பது பழையோருடைய வழித்தோன்றல் தாமான் தோன்றிக்கோனைச் சுட்டுகிறது.]

'கவிகை மள்ளன் கைப்பட்டோரே' [புறம் 81 . 5]
[சோழன் கோப் பெருநற் கிள்ளியைக் குறிக்கிறது]

'இளையரும் முதியரும் வேறு புலம்படர,
எதிர்ப்ப எழாஅய் மார்ப மண்புல்ல,
இடைச்சுரத்து இறுத்த மள்ள! விளர்த்த' [புறம் 254.1-3]

[இங்கு மள்ள என்பது இளையோய் என்று பொருள் படுகின்றது]

'மள்ளர் ஏறே' என்பது 'மள்ளருள் சிறந்தவன்' 'ஆண் சிங்கம் போன்றவன்' என்று பொருள்படும். பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி பாண்டியருள் சிறந்தவன் என்பதற்கு 'பஞ்சவன் ஏறே' [புறம் 58-8[ என்றும், சேர மன்னன் இளஞ்சேரர் இரும்பொறை குட்டுவரில் சிறந்தவன் என்பதற்கு 'குட்டுவன் ஏறே' [பதிபத்து 90.26] என்றும் கண்டிருப்பது மள்ளர் குடியிலிருந்துதான் மூவேந்தர் தோன்றினர் என்ற முடிவுக்கு அறண் செய்வதாயுள. இம்மள்ளர் குடியினர் மன்னர் குடியினர் ஆனதால் மன்னரின் பின்னோர் என்பதற்கு அடையாளமாக மன்னரிடமிருந்து அனேக உரிமைகளைப் பெற்றிருந்தனர்.

இம்மள்ளர் குடியினர்தான் முதன்முதலில் தமிழகத்தின் ஆற்றோரப் பகுதியில் குடியேறி ஆறுகளுக்குக் கரை கண்டு— நிலங்களை வெட்டிக் கொத்தி சீர்படுத்தி வயல்களாக்கி வேளாண்மை கண்டு ஊர்கள், நகரங்கள் அமைத்து அரசுகளையும் தோற்றுவித்தனர். இவரது உடைமைகளைக் காட்டு வாணர் மற்றும் வேற்று நாட்டினர் தாக்கிக் கவரும் அபாயம் இருந்ததால் ஊர், நகரங்களைச் சுற்றி கோட்டைகள் எழுப்பினர். இக்கோட்டைகள்பற்றித்தான் தொல்காப்பியர் 'உழிஞைதானே மருதத்துப்புறனே' என்று கூறியுள்ளார்.

மருத நிலத்திலுள்ள ஊர், நகரத் தலைவர்களையே இலக்கியங்கள் ஊரன், கிழவன், மகிழ்நன் எனக் குறிப்பிடுகின்றன. பல ஊர்களும் சேர்ந்து கூட்டாட்சி ஏற்பட்டபோது அக்கூட்டாட்சியின் தலைவர் வேள் எனப் பட்டனர். பின்னர் பல வேளிருள்ளும் சிறந்தவர் முடியுடை வேந்தர் ஆயினர். அவர் சேர சோழ பாண்டியர் என வழங்கினர்.[1]

எம். இ. மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் மள்ளர் போர்க்காலங்களில் வெற்றி பெற்று எதிரி நாடுகளிலிருந்து கவர்ந்த பொருள்களை தம் நாட்டிற்குக் கொண்டுவருவர் என்றும், அதற்குச் சன்மானமாக மன்னர் அவர்க்கு யானைகளைப் பரிசிலாக வழங்குவர் என்றும், மள்ளர் தலைவரே மன்னர் என்றும் கூறுகிறார்.[2]

'The Mallar used to bring booty from victorious wars for which they received elephants as reward [Aham 349.8.9 & 14]. The ruler is said to be the leader of Mallar who beat the drums in the battle-field and participated in the festivals of swords which was conducted to celebrate the victory in wars [Aham 127.17.18]. They took part in festivals and used to make thunderous sound during celebration of victory [Aham 266. 21-23]. The interest showed by them to participate in the festivals by making thunderous sounds and the weapons used by them in warfare showed the special characteristics by which they are identified ! [Tolkappiam-Preamble-Panambaranar].[2]

பண்டைய கர்நாடக வரலாற்று ஆசிரியர் பாஸ்கர் ஆனந்த் சாலெட்டோர் என்பவர் சேர நாட்டைச் சேர்ந்த துளு

1 *பக். 164 மூவேந்தர் யார்? இரா. தேவ ஆசீர்வாதம்.*

2 *Page* 33. *Culture of Ancient Cheras. Prof. M.E. Manicka-Vasagam Pillai. Manjula Publications, Koilpatti.*

நாட்டில் மன்னர் குடியினரே மன்னராயிருந்ததாகக் கூறியிருப் பது காண்க. [1]

'The tradition of the Koragars some of whom seem to have formed a part of the Tulu people, the Mailos, the Holeyas, the Mogars and others justify our assumption that they belonged to a war-like race. It is believed that the Mailos [Mallars] were the rulers of the country'. [1]

மள்ளரும் இலக்கியங்களில் காணும் மல்லரும் ஒரே குடியினரே. இவர் இரு தனி மரபன்று. மன்னரில் சிலர் மல்லன் என வழங்கியுள்ளனர். [2]

மள்ளர் [ மல்லர்] இன்று உளரா ?

மூவேந்தர் மரபினராகிய மள்ளர் குடியினர் இன்று தமிழகத்தில் உளரா ? இல்லை, இவர் தெலுங்கரோடு நடத்திய போர்களில் அடியோடு மாண்டு மறைந்துவிட்டனரா ? கி. மு. 16-ஆம் நூற்றாண்டில் தமிழகம் தெலுங்கர் ஆட்சிக்கு உள்பட்டது நினைவிருக்கத்தக்கது. இம்மரபினர் முற்றிலும் மடிந்து தடமற மறைந்திருப்பர் எனக் கருதுவதற்கில்லை. எங்ஙனமேனும் இவருள் ஒருசிலர் எஞ்சியிருக்கவேண்டும். தமிழ் வேந்தர் ஆட்சி வீழ்ச்சியுற்றதன் விளைவாய் இம் மரபினர் நில உடைமை முற்றும் இழந்து, நலிந்து, மெலிந்து, அடக்குமுறைக்கு உள்ளாகிக்கீழ் நிலை எய்தியிருக்கவேண்டும். ஆதலால் இன்று பொருளாதாரத்தில் அடித்தளத்தில் உள்ள சமூகத்தினரில் ஒருவராகவே அவர் இருந்து வரவேண்டும். மருதநில மக்களில் கடைஞர், காலாடி என வழங்குபவர்

---

1 *Page 5. Ancient Karnataka Vol. I. (History of Tuluva.) Baskar Anand Saletore.* M. A., Ph. D., *Poona Central Book Agency-Poona 1936.*

2 *பக். 165. 174. மூவேந்தர் யார் ? இரா. தேவ ஆசீர்வாதம்.*

இன்று தேவேந்திர குல வேளாளர் என உரிமை பாராட்டி வரும் பள்ளர் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதை நம்மில் பலரும் அறிவர். செடியூல் வகுப்புப் பட்டியலில் இந்த இரண்டு பெயர்களும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். தமிழ் இலக்கியங்களில் வரும் மள்ளர் இன்றையப் பள்ளர் என்று அறிஞர் பலரும் பொருள் கண்டுளர். தெலுங்கர் ஆட்சியின்போது தோன்றிய பள்ளு நூல்களில் மள்ளர் என்ற பள்ளர்,தேவேந்திரப் பள்ளர்,புரந்தரன் குலம் என்று வருவதுவும் காண்க. மேனாட்டு அறிஞர் ஜி. ஒப்பர்ட். (Original inhabitants of India) டாக்டர் வின்சிலோ, [Tamil and English Dictionary[ டி. கே. வேலுப்பிள்ளை, [Trivandrum State Manual 1940] பண்டித சவரிராயர், [பக். 206 தமிழர் சரித்திரம், ந. சி. கந்தையாபிள்ளை] ஞா. தேவநேயப் பாவாணர், [செந்தமிழ்ச் செல்வி 1975 ஏப்ரல் வெளியீடு] சோ. இலக்குமிரதன் பாரதி [பக். 218 நமது சமூகம்] எம். சீனிவாச அய்யங்கார், [Page 71 Tamil Studies] டாக்டர் கி.ர. அனுமந்தன், [Page 129 untouchablity in Tamilagam] போன்றோர் பண்டைக்கால மள்ளர் குடியினர் வழித் தோன்றல்கள் இன்றையப் பள்ளர் சமூகம் என ஒருமிக்கக் கருதுகின்றனர். 1961-ஆம் ஆண்டு குடிக்கணக்கில் இக்கருத்து ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. (Census of India 1961—Vol. IX Madras Part VI. Village Survey Monograph. Kanakkangiri Village. Salem Dt. [ஏ.வி. சுப்பிரமணிய அய்யர் இம்மரபினர் பற்றிக் கூறுவதாவது: [1]

'மக்களின் முக்கிய உணவாகப் பயன்படும் நெல் பண்டைக்காலந்தொட்டு தமிழகத்திலும் பிறபகுதியிலும் பயிரடப்பட்டு வந்தது பலரும் அறிந்ததே. இதைப் பயிர் செய்தவர் பள்ளர் ஆவர். இவர் ஏற்கனவே செடியூல் வகுப்புப் பட்டியலில் இடம்பெற்று காந்தியால் அரிசன் என வழங்குபவரில் ஒரு சாராராவர். இவரது பழக்கவழக்கம் மற்ற மரபினரிலிருந்து முற்றிலும் வேறுபட்டது......இக்காலத்தில் பல்

---

1 *Page 67-68 Tamil Studies Part II A.V.SubramaniaAyyar*

வேறு பிரிவினரும் நெற்பயிர் சாகுபடியில் ஈடுபட்டுவருவது நாம் அறிந்ததே. ஆனால் இது சாகுபடித் தகராறு காரணமாகவேயாம். எனினும் இச்சாகுபடி பெரும்பாலும் பள்ளரின் கையிலேயே இன்னும் நீடித்துவருவது அவரது பரம்பரைத் தொழில் என்பதை மெய்ப்பிப்பதாக உளது. இத்தொழிலைச் செய்வதில் அவர் மிகவும் பெருமைகொள்வர். அவர்களுக்கு இதில் ஈடானவர் ஒருவரும் இல்லை என்றால் அது மிகை யாகாது.'[1]

'It is common knowledge that the tilling of the soil and the cultivation of the Staple food or paddy have been done in ages past mainly in the hands of a well-known community in this as in any other areas of the land. The community is known as pallar who constitute an important group of Harijans in Gandian parlance and of scheduled class in legal termilogy with a special culture of their own. Though in recent generations some people of other communities have also taken to paddy cultivation as a matter of necessity owing to agrarian trouble or other causes the bulk of the work even today is in the hands of the Pallas who take pride in this their hereditary occupation and whose skill in the technique of paddy cultivation is unsurpassed. Inspite of economic backwardness the community has been having a happy existence and would not give up the customs manners and way of life for all the world.[1]

ஏற்கனவே மருத நில மக்களாகிய மள்ளர் குடியினரின் தெய்வம் வேந்தன் என்றும் அவன் பிற்காலத்தில் இந்திரன், தேவேந்திரன், புரந்தரன் என வழங்கியதாகவும் கண்டோம். தமிழ் வேந்தரில் சிலர் தம்மை தேவேந்திர குலச் சக்கரவர்த்தி, தேவேந்திர வல்லபன் என வழங்கியுள்ளனர். இவர் மருத நில மள்ளர் குடியினர் என்பதனாலேயே இவ்வாறு வழங்கினர்

---

*1 Page 67-68. Tamil Studies Part II. A. V. Subramania Ayyar.*

என்பது வெள்ளிடைமலே. அதேபோன்று பள்ளர் மருத நில மள்ளர்குடி என்பதனுலேயே தம்மைத் தேவேந்திர குலம் என வழங்கி வருகின்றனர். பள்ளு நூல்களும் இவரை இந்திர குலம், புரந்தரன் குலம் தேவேந்திரப் பள்ளர் என்று கூறுவ தாக முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. செடியூல் வகுப்புப் பட்டியலிலும், குடிக்கணக்கிலும் தேவேந்திர குலத்தான் இடம்பெற்றிருப்பது காண்க. கரிவலம் வந்த நல்லூர், சீவிலிபுத்தூர் கல்வெட்டுகள் இவரைத் தேவேந்திரக் குடும்பன் என்றும், புராண மரபுப் பாண்டியன் உக்கிரப் பெரு வழுதியுடன் தொடர்புபடுத்துவதையும், மன்னர்க்குரிய உரிமைகள் வழங்கப்பட்டு பண்டுதொட்டு அவற்றை அவர் அனுபவித்து வந்ததாகச் செப்புவதையும் முன்பு கண்டோம். மள்ளர் ஏர்த் தொழிலும், போர்த் தொழிலும் செய்தனர் என் பதற்கொப்ப, பள்ளரும் அந்த இரு தொழிலும் செய்யும் ஆற் றல் பெற்றவராக இருந்து வருவது கண்கூடு. எம். சீனிவாச அய்யங்கார் பள்ளர் / மள்ளர் பாண்டியர் படைமறவர் என்று கூறுவதைக் காண்க. [1]

[Pallars correctly Mallas formed the Pandyan Army.]

1958-ல் முகவை மாவட்டம் முதுகளத்தூர் பகுதியில் நடை பெற்ற வகுப்புக் கலவரத்தில் இவர் வீரமரபினர் என்பதை தமிழகம்நன்கு அறியும்படி வெளிப்படுத்தியதை நம்மில் பலரும் அறிவர்.மேலும் இதர மரபினர் இடையே காணப்படாத தனித் தன்மை இவரிடம் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. தமிழ கத்தில் வேறு ஒரு மரபினர்க்கும் தனியாய் குருக்கள், வண் ணார், நாவிதர் இல்லாதபோது இவருக்குமட்டும் அத்தொழி லாளர் இருந்து வருவதுவும், மற்ற மரபினர் இறந்தவரைப் பாடை,பல்லக்குக்கட்டி அதிக ஆடம்பரமின்றி அடக்கம்செய்ய எடுத்துச் செல்லும்போது இவர் தேர்கட்டி அதில் இறந்த வரைப் படுக்கப்போடாமல் உட்காரவைத்து, மேளதாளம், வாண வேடிக்கைகளுடன் ஆடம்பரமாய் எடுத்து அடக்கம் செய்து வருவதுவும், அவர் ஊர் நத்தத்தில் தேவேந்திரனுக்கு

---

1 *Page 107. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

ஏற்பட்ட கீழ் திசையில் குடியிருந்து வருவதுவும், நிலக் கிரயப் பத்திரங்களில் தேவேந்திர குலம் எனப்பதிந்து வருவதுவும் இவர் மருத நில மள்ளர்குடி ஏன் மன்னர்குடி என்பதை நன்கு புலப்படுத்துவதாகும். இந்நூலாசிரியரின் மூவேந்தர் யார்? என்ற நூலில் இன்றையப் பள்ளரே மள்ளர் என்றும் அவர் தமிழ் மூவேந்தர் மரபினர் என்றும் நிருவியிருப்பது காண்க.

ஆக இன்றையப் பள்ளர்தான் இலக்கியங்களில் காணும் மள்ளர், மல்லர் எனக்கொள்ளும்போது, இவர்தான் வேளாண் மாந்தர் வேளாளர், வெள்ளாளர் என முடிவு செய்வதில் எவ் விதக் கருத்து வேறுபாடும் இருப்பதற்கு இடமில்லை. சோழர் காலக் கல்வெட்டுகளில் 'வெள்ளாளர் குடும்பும் புரவுஞ் செய் தனர்' எனக் கண்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. அந்நாளில் இம்மரபினர் குடும்பு பார்த்ததற்கொப்ப இவரது ஊர்த் தலை வர்கள் இன்று குடும்பன் என்ற பட்டம் தரித்து வருவது கண் கூடு. முக்கூடற்பள்ளில் (செ 88) 'குடும்பு செய்தூராருக்கு உழைத்தான்' என வருவது காண்க. பண்டைய மரபை ஒட்டி கோயிற் தேர்த் திருவிழாக்களில் இம்மரபினர்க்கு முதல் மரியாதை வழங்கப்பட்டு வருவதுவும், இம்மரபினர் வேந்தர் குலம் என்பதனாலேயாம்.

ஆக மேலே கண்ட சான்றுகளால் வேளாளர், வெள்ளா ளர் என்பதோ, உழவர் என்பதோ, மள்ளர் (மல்லர்) என் பதோ இன்றையப் பள்ளர் என்ற தேவேந்திர குல வேளாளப் பெருங்குடியினரே என்பதில் எவ்வித ஐயப்பாடும் கொள்வதற் கில்லை. எம். சீனிவாச அய்யங்கார் கலப்பற்ற வேளாளர், வெள்ளாளர், திராவிடர் என்று கூறுவது இவரையேயாம். [1]



---

1 Page 62. Tamil Studies. M. Srinivasa Ayyangar.

# நான்காவது வருணம்

இன்றைய வேளாளர் வந்தேறிகள் அல்ல என்றும், அவர் இடைக்காலத்திலிருந்து பல்வேறு பிரிவினரிலிருந்தும் தம் பண்டையக்குடிப் பெயரைவிடுத்து வேளாளர், வெள்ளாளர் என வழங்கி வந்தவர் என்றும் ஏற்கனவே கண்டோம். தமிழகத்தில் ஆரிய மரபுபோன்று நான்கு வருணங்கள் தொல்காப்பியர் காலத்திலிருந்து வழக்கில் இருந்து வருவதாகவும், அவர் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் எனவும், மருத நில மள்ளர் குடியினர் அரச குலம் எனவும், நாலாவது வருணம் இன்றைய வேளாளர் ஆவர் எனவும், அவரை ஆரிய மரபையொட்டி சூத்திரர் என வழங்கும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டதாகவும் அறிஞர் சிலர் கூறுவர். அவரது கூற்றுக்களைக் கீழே காண்போம்.

எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை தமிழகத்தின் தலை மக்கள் நான்கு பிரிவாகப் பிரிந்திருந்தனர் எனவும், அவருள் வேளாளர் நான்காவது வகுப்பினர் எனவும் கூறுவார்.[1]

ஆரியருக்கு நான் மறை, நான்கு வருணம் உண்டு எனவும், அந்த நான்கு வருணத்தில் கடை வருணம் சூத்திரர் எனவும், அதே போன்று தமிழகத்தில் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என நான்கு வகுப்புகள் இருந்தன எனவும் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை வாதிப்பார். இவரது கூற்றை ஆதரிப்பவர் பலர் நம் மத்தியில் உளர். இவர் தொல்காப்பியத்தில் காணும் பொருளதிகாரம் கற்பியல் மற்றும் மரபியல் சூத்திரங்களைத் தமது கருத்துக்கு ஆதாரமாகக் கூறுவர். இவற்றில் கூறப்படும் நான்கு வருணம் பற்றிப் பார்ப்போம்.

'மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்,
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே

[தொல். பொ. கற்பியல் 142]

Page 33-34. Tamil India M. S. Pooranalingam Pillai.

' நூலே கரகம் முக்கால் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய ' [தொல். பொ. 615]

' படையுங் கொடியும் குடையும் முரசும்
நடை நவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய'
[தொல். பொ. 616]

' வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை'
[தொல். பொ. 622]

' வேளாண் மாந்தருக்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி' [தொல்.பொ.625]

மேலேகண்ட சூத்திரங்களின்படி தமிழ் மரபினர் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என நான்கு வகுப்பினராய்ப் பிரிந்திருந்தனர் எனவும், அந்தணர்க்கு நூல், கரகம் முக்கோல் மணை எனவும், அரசர்க்குப் படை, கொடி, குடை, முரசு, குதிரை, களிறு, தேர், தார், முடி ஆகிய ஒன்பது எனவும், வைசியனுக்கு வாணிகத்தால் வாழும் வாழ்க்கை எனவும், வேளாளனுக்கு உழுதுண்ணும் வாழ்க்கை எனவும் வகுக்கப்பட்டிருந்ததாக அறிகின்றோம். தொல்காப்பியத்திற்கு உரை செய்தவர்கள் வணிகர்க்கு உழவும், நிரைகாத்தலும், வாணிகமும், வேளாளர்க்கு நிரையோம்பலும், உழவும் உண்டெனக் கண்டுள்ளனர். தொல்காப்பியத்தில் கண்டுள்ள அந்தணர் ஆரியப் பார்ப்பனர் என நாம் கொள்வதற்கில்லை. பௌத்தம், சமணம் முதலிய எல்லா சமயங்களிலும் குருக்கள் உண்டு என்பது நாம் அறிந்ததொன்றே. இன்றையச் சாதி இந்துக்களுக்கு குறிப்பாக வேளாளருக்குப் புரோகிதம் மற்றும் நன்மை, துன்மைச் சடங்குகளை தெலுங்குப் பார்ப்பனர் நடத்தி வருவது கண்கூடு. ஆரியப் பார்ப்பனரில் ஒரு பிரிவினர் அவரது மரபினர்க்கு மட்டும் புரோகிதம் பார்ப்பதுடன் இடைக்காலத்தில் தோன்றிய ஆலயங்களில் குருக்களாகவும் பணியாற்றி வருகின்றனர். இரண்டாவது பிரிவினராகிய அரசர் சேர, சோழ, பாண்டியரும் அவரது மரபினருமாகிய தேவேந்திர குல வேளாளரும் ஆவர். மூன்றாவது பிரிவின

ராகிய வைசிகர் தமிழருள் இல்லை எனலாம். தொல்காப்பியம் தவிர,மற்றத்தமிழ் இலக்கியங்களில் ஒரு இடத்திலும் வைசிகன் என்ற பெயர் இடம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. வைசியர் என்பவர் ஆரிய மரபுப்படி மூன்ருவது வருணத்தைச் சேர்ந்தவர். தொல்காப்பியத்திற்கு உரைகண்டவர்கள் இம் மரபிற்கு ஆநிரை காத்தல், உழவு, வணிகம் ஆக மூன்றும் உண்டு எனக் கண்டிருப்பது நாம் அறிந்ததொன்றே. இம் மூன்று தொழில்களில் ஆநிரை காத்தவர் தமிழகத்தின் முல்லை நிலவாழ் ஆயர்—இடையர் எனவும், உழவுத்தொழில் செய்தவர் மருத நிலவாழ் மள்ளர் குடி எனவும் ஏற்கனவே கண்டோம். மூன்ருவதாகக் கூறப்படும் வணிகத் தொழில் பாலை நிலம் தவிர்த்த எல்லாத் திணை நில மக்களுக்கும் பொது வானது. ஆரம்ப காலத்தில் வாணிகம் பண்டமாற்று மூலம் நடந்துவந்தது. ஆதலால் பண்டைய நாளில் வணிகர் என்ற ஒரு தனி மரபு இருந்ததாகக் கொள்வதற்கில்லை. எனினும் அதில் மருதநில மன்னர் குடியினரே இதை சிறப்பாகச் செய்ய வாய்ப்புப் பெற்றிருந்தனர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. நாலாவதாகக் கூறப்படும் வேளாளர் என்பவரும் மள்ளர் [மல்லர்] மரபினராகிய தேவேந்திர குல வேளாளர் என ஏற்கனவே கண்டோம். தொல்காப்பியத்தில் கண்ட அந்தணர் வேந்தர் குல மரபினராகிய தேவேந்திர குல வேளாளரின் குருக்களே என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. ஆகம் பொதுவாய் தொல் காப்பியத்தில் கண்ட நான்கு மரபினரும் மருதநில மள்ளர் குடியைச் சேர்ந்தவரேயாவர். இவற்றைக் கருத்திற்கொண்டே கா. சுப்பிரமணியபிள்ளை, பி. டி. சீனிவாச அய்யங்கார், டாக்டர் இலக்குவனர், டாக்டர். என். சுப்பிரமணியம், கா. அப்பாத்துரையார், வெள்ளைவாரணர் போன்ற அறிஞர் நான்கு வருணப் பாகுபாடுகள் தமிழர்க்குப் பொருந்தாது என்று கூறுகின்றனர்.

கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுவதாவது :

தென்னாட்டுத் தமிழர் வரலாற்றையும், பழக்கத்தையும் ஆராயுமிடத்து, நான்கு வருணம் தமிழருக்குள் கிடையாது : தொல்காப்பிய உண்மைப்பகுதி, திருவள்ளுவர், தேவாரம்

என்பவற்றில் நாற்குலத்தைப்பற்றிப் பேச்சில்லே 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல் பவர்' என்ற திருக்குறளின்படி உழுதுண்பார் முதன்மையும், பிற பல்வேறு தொழில் செய்யும் மக்கள் துணை நிலேயும் உடை யவராய் இருந்தனர். கோயிற் பூசனே செய்யும் பார்ப்பனர், அரசர் முதலியோர் உழுதுண்ணும் பெருங் குலத்தினின்று பிரிந்தவரேயாவர். 1

பி. டி. சீனிவாச அய்யங்கார் கூறுவதாவது :

தமிழர் வாழ்க்கை ஆயிரமாயிர மாண்டுகளாகச் சமய சார் பற்ற சமூக குடியரசாய்த் திகழ்ந்து வந்தது. சிறுநீர் கழிப்ப திலிருந்து சிதை ஏறுவது வரை நாள்தோறும் அனுசரிக்கும் ஒவ்வொரு செய்கையும் மத ஆச்சாரங்களேப் பின்னணியாகக் கொண்ட ஆரியர் தென் இந்தியாவிற்கு வரும் முன்பே வேள்வி வளர்க்கும் பழக்கம் மறைந்து வழக்கற்றுப் போனதால், அவ ரது நான்கு வருணப் பாகுபாடு தமிழர் மத்தியில் நன்கு பரவ முடியவில்லே. ஆனல் அவரது பழக்க வழக்கங்கள் தென்னிந் தியாவிலுள்ள மக்கள் மத்தியில் ஆயிரத்து ஐநூறு ஆண்டு களாக சாதிக் குழப்பங்களேயும், சமூகக் குரோதங்களேயும், பொருமையையும் வளர்த்து வந்திருக்கின்றன. 1

'The scheme of four varnas necessary to a people every detail of whose life from urination to cremation was influenced by the fire—rite could not well spread among Tamils whose life for many millions previously was mainly secular and based on social democracy and among whom Aryan fire-rite as it had lost its vitality before the Brahmins migrated to South India did not spread. It led only to the confusion of caste and prevalence of social jealousies that have characterized the life of Southern India for a thousand and five hundred years. 2

---

1 பக். 149-50. தமிழர் சமயம். கா. சுப்பிரமணிய பிள்ளே
2 *Pre-Aryan Tamil Culture. P. T. Srinivasa Ayyangar.*

டாக்டர். இலக்குவனுர் கூறுவதைக் காண்போம் :

' பழந்தமிழரிடம் இல்லாத சாதிப் பிரிவினைகள் இன்று அவர் மத்தியில் நன்கு வேரூன்றியுள்ளதைக் காண்கிறோம். சாதிப் பிரிவினைகளைத் தோற்றுவித்தவர்கள் இடைக்காலத்தில் மரபுபற்றி சூத்திரங்களைப் புனைந்து, தொல்காப்பியத்தில் இடைச்செருகலாய்ப் புகுத்தியுள்ளனர். ஆனால் இதை அவர்கள் திறம்படச் செய்யத் தவறிவிட்டனர். ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல், பொருந்தாத இடத்தில், அவ்வித இடைச் செருகல்கள் நிகழ்ந்திருக்கின்றன. மேலெழுந்த வாரியாகப் படிப்பவருக்குக்கூட இதன் பொருந்தாத் தன்மை நன்கு புலனாகும்.' 1

டாக்டர். என். சுப்பிரமணியம் கூறுவதாவது :

' தமிழகத்தில் மன்னரும், வணிகரும் வேளாண் மாந்தரிலிருந்து வேறுபட்டவர் அன்று. அவர் பண்டுதொட்டுச் செய்து வந்த தொழில்தான் அவ்ரைப் பிரித்துக் காட்டியது' 2

[In Tamil Nadu the Kings and merchants were not different from the peasant. Traditional occupations alone distinguished them ]

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் கூறுவதாவது :

தொல்காப்பியர் குறிப்பிடும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் பிரிவினை சாதி வேறுபாடு அன்று; தொழில் வேறுபாடே. அதுவும் நாட்டின் நடுப்பகுதியாகிய மருதத்திணையை மட்டுமே குறித்தது. நாலு வகுப்பும் வேளாள வகுப்பின் பிரிவுகளேயாகும். ஏனெனில் வேளாளரே மருத நிலக் குடிகள்' 3

---

1 Tolkappiam. Dr. Ilakkuvanar.

2 Page 336. History of Tamil Nadu. Dr. N. Subramaniam.

3. பக் 202. அடிக்குறிப்பு, ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு வி. கனகசபை, தமிழாக்கம் கா. அப்பாதுரையார்.

க. வெள்ளைவாரணர் கூறுவதாவது :

' மக்களை நிலத்தால் பிரித்துரைப்பதன்றி நிறத்தால் [வருணத்தால்] பிரித்துப் பேசுதல் பழந்தமிழ் மரபன்றும். அயலாரால் இந்நாட்டில் பிற்றை நாளில் புகுத்தப்பட்ட நால்வகைச் சாதிப்பிரிவு தொன்மை வாய்ந்த தொல்காப்பிய மரபியலிலும் பிற்காலத்தவரால் நுழைத்து உரைக்கப்பட்டுள்ளது,' [1]

இதுவரை பழந்தமிழகத்தில் நான்குவித வருணப்பாகுபாடுகள் வழக்கில் இல்லை எனவும், பிற்காலத்தில் அவற்றைத் தோற்றுவித்தவர் அவை பண்டுதொட்டு நிலவி வருவதாகக் காட்ட சூத்திரங்கள் புனைந்து தமிழரின் தொன்மை இலக்கியமான தொல்காப்பியத்தில் இடைச்செருகல்கள் மூலம் புகுத்தியுள்ளனர் எனப் பல அறிஞரும் கூறியிருப்பதைக் கண்டோம். ஆனால் இதற்கு மாறுபட்ட கருத்து உடையவரும் இல்லாமல் இல்லை. இதற்கு எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை ஓர் எடுத்துக்காட்டு. அவர் கூறுவதாவது : ' தொல்காப்பியத்தின் படி, தமிழகத்தின் தலைமக்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆவர். திணைமக்கள் குறிஞ்சி நிலவேட்டுவர் முல்லை நில ஆயர், இடையர் பாலை நில வேடர், மறவர், எயினர் மருதநில உழவர் நெய்தல் நிலப்பரதவர், நுளையர் ஆவர். தொழில் மக்கள் புரோகிதர், பள்ளர், பறையர், சாணர், சக்கிலியர், புலையர் மற்றும் கன்னர், தச்சர், தட்டார், கற்கொல்லர், குயவர், செக்கார், சேணியர் ஆவர் [2] '

மேலே கண்ட கூற்றுக்களில் மக்கள் திணை நிலையாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது என்பது உண்மை. ஆனால் அவரில் மருத நிலம் தவிர்த்து மற்ற நிலங்களில் வாழ்ந்தவர் தமிழரன்று. பூரணலிங்கம்பிள்ளை கூறும் தலை மக்கள் மருத நில மள்ளர் குடியினரேயாம். அவர் கூறும் தொழில் மக்களில் சாணர், சக்கிலியர் பண்டைய நாளில் தமிழகத்தில் இல்லை.

---

2 பக். 299. இலக்கிய வரலாறு தொல்காப்பியம் பிற்பகுதி. க. வெள்ளைவாரணர்

2 *Page 33-34 Tamil India. M. S. Poornalingam Pillai*

புலேயர் என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்படுவது உண்மையே. ஆனால் அன்று அது ஒரு மக்கள் பிரிவைக் குறிக்கவில்லே. [புறம் 28 புலேய—இழிசின] பறையர் திணே நில மக்களில் இடம்பெறவில்லே. பாணர், பறையர், துடியர், கடம்பர் என்ற குடிகள் இருந்தனர் எனச் சங்க இலக்கியம் [புறம் 335] கூறுவதுவும் நாம் அறிந்ததே. ஆனால் இதில் கண்டுள்ள பறையர் இன்றையப் பறையரின் முன்னோர் என நாம் கொள்வதற்கில்லே. எஞ்சி நிற்கும் பள்ளர் மருத நில மக்களாகிய மள்ளர் என்பது நாம் அறிந்ததொன்றே. பூரண லிங்கம் பிள்ளே குறிப்பிடும் தலே மக்கள் நால்வரும் ஏற்கனவே கூறியதுபோன்று மள்ளர் குடியைச் சேர்ந்தவரேயாம். தொழில் மக்கள் மருத நிலத்தில்தான் முதன் முதலில் தோன் றினர். அவர் கொல்லர், தச்சர், கன்னர், தட்டார், கற் கொல்லர், செக்கார், குயவர், வண்ணர், நாவிதர், ஓவியர் முதலிய பதினெண் குடியினர் ஆவர். நாகரிகம் பெருகப் பெருக, தொழில்களும் பல்கிப் பெருகின. அதனால் தொழில் மக்களும் பெருகலாயினர். பூரணலிங்கம் பிள்ளே குறிப்பிடும் தலே மக்கள், மற்றும் தொழில் மக்களில் பலர் தமிழகத்தில் பண்டைய நாளில் இல்லே என்பது தேற்றம்.

தொல்காப்பியத்தில் மரபியற்பகுதியில் மரபு பற்றிச் சூத் திரங்கள் இடம் பெற்றிருப்பதுபற்றி நாம் ஏற்கனவே பார்த் தோம். இச்சூத்திரங்கள் ஆரியக் கோட்பாடுகளே மனத்திற் கொண்டே வரையப்பட்டதென்பது குறிப்பிடத்தக்கது. ஆரியரில் பிருமணர், சத்திரியர், வைசியர் என மூன்று பெரும் பிரிவினர் உண்டு. இந்த மூன்று வகுப்பாரும் ஆரியரே ஆம். இவரது வேதங்களில் முதலாவதாகக் கருதப்படும் ரிக் வேதத் தில் இந்த மூன்று மட்டும் காணப்படுவதாக அறிஞர் கூறுவர். இந்த மூன்று வருணத்தாரில் முதல் வருணத்தாராகிய பிருமணர்க்கு குருத்துவம், கல்வி பயிற்றல், சட்டம் வகுத்தல் முதலிய தொழில்களும், சத்திரியர்க்குப் படைத் தொழிலும் [இவரிலிருந்து அரசர் தோன்றினர்] வைசியர்க்கு ஆநிரை பேணுதல், பயிர்த்தொழில், வணிகம் ஆக மூன்று தொழில் களும் ஏற்பட்டிருந்தன. ரிக் வேதத்தில் கருமர், கொல்லர்,

தச்சர் முதலிய தொழில் மக்களும் இருந்தனர் எனக் கண்டுள்ளது.

ஆரியர் இந்தியாவில் நுழைந்தகாலே அவருடன் பொருதி அடிமைப்படுத்தப்பட்டவர் ஏவல் மரபினராக்கப்பட்டனர். இவர் பின்னர் சூத்திரர் என வழங்கினர். போரில் வெல்லப்படாதவரும், மற்றும் நாகரிகம் எய்யாத பழங்குடியினரும் தஸ்யூக்கள் என வழங்கினர். காலப்போக்கில் இவர் நலிவுற்று ஆரியக்குடியினரை அண்டி, பிழைப்புத் தேடிய போது, ஊர், நகரங்களுக்கு வெளியே தங்கி குற்றேவல் செய்யப் பணிக்கப்பட்டு காலப்போக்கில் தீண்டப்படாதவராக மாறினர். ஊர், நகரங்களை அண்டாமல் காடு, மலைகளில் தங்கியவர் மலைவாழ்நர் (Scheduled tribes) ஆயினர். இவ்வகுப்புகள் கடமைகள்பற்றி பின்னுளில் தோன்றிய மனுதர்மச் சட்டத்தில் கண்டிருப்பதாவது : 'வேதங்களில் வகுத்துரைக்கப்பட்டவாரே சகல சீவராசிகளுக்கும் அவ்வவ்வற்றிற்கும் உரித்தான பெயர்களையும், இயக்கங்களையும், தொழிற்பாட்டைகளையும் நியமித்தருளினுர். அந்தணர் வேதம் ஓதவும், ஓதுவித்தும், *[மனு. அத். 1. பிரிவு எண். 21]* தியாக வேள்விகள் புரிந்தும் செல்வாராயின்; பிறர்க்கு ஈந்தும் வறிஞராயின் செல்வரிடம் ஏற்றும் வாழத்தக்கவராயினர். *[மனு. அத். 1-பிரிவு எண் 88]* பிரஜா பரிமாணம் செய்வது, ஈகை வேள்விகள் புரிவது வேத பாராயணம் செய்வது, விஷய சுகங்களில் மனத்தை அலையவிடாமல் உறுதியாக நிற்பது மன்னர் கடமையாகும். *[மனு. அத். 1-பிரிவு எண் 89]* வணிகர்க்கு ஆநிரைகளைக் காத்தல், தானம் கொடுத்தல், கடலாரம், மலையாரம், கனிப்பொருள், விளைபொருள் தானியங்கள் இவற்றை வியாபாரம் செய்தல், வட்டிக்கு விடுதல், பயிர்த்தொழில் செய்தல் ஆகியவற்றை விதித்தார் *(மனு. அத். 1 பிரிவு எண் 90)* ஏவலரான மக்கள் மேலே சொன்ன மூவர்க்கும் பொருமையின்றிப் பணிபுரிதல் ஒன்றையே முதன்மையாகக் கொள்ளக்கடவாரென்றும், ஈதல் முதலிய சத்கருமங்களும் அவர்களுக்கு உண்டெனப் பணித்தார். *(மனு. அத். 1 பிரிவு எண் 91)* மனுதர்ம சாத்திரத்தின்படி இடையர், உழவர்,

வணிகர் மூவரும் வைசியரில் அடங்குவர். நான்காவது பிரிவி னர் ஏவலர். மற்ற மூன்று பிரிவினர்க்கும் தொண்டு செய்யக் கடமைப்பட்டவர். இவர் ஆரியர்க்குப் போரில் அடிமைப்பட்ட வர் மட்டுமின்றி அவர் இந்தியாவிற்கு வரும்போது அவருடன் வந்த அடிமைகளும் அடங்குவர் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த நான்காவது பிரிவினருக்கு உழுதொழில் கூறப்படாத துவும் கவனத்திற்குரியது.

தென்னகத்தைப் பொருத்தமட்டில் ஆரிய மரபுப்படி நான்கு மரபுகள் இல்லை எனவும், நிலத்தை அவற்றின் இயற்கை கூறுபாட்டிற்குத் தக்கவாறு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பிரித்தும், அவற்றில் மருத நில மக்க ளாகிய மள்ளர் குடியினரைத் தலைமையாகக் கொண்டு இலக் கியங்கள் செய்துள்ளர் எனவும் ஏற்கனவே கண்டோம். ஆனல் இதற்கு மாருகத் தொல்காப்பியத்தில் காணப்படும் நான்கு வகுப்புக்கள் தமிழகத்தில் பண்டுதொட்டு நிலைத்திருந்த தாக இலக்கியங்கள், கல்வெட்டுகள் முதலியவற்றில் ஆங் காங்கே குறிப்புகள் காணக்கிடக்கின்றன. இதன் காரணம் யாது? நான்கு வருணங்கள் தமிழருக்குப் பொருந்தாது என்று நாம் கூறும்போது, ஒரு சாரார் தம்மை நாலாஞ்சாதி எனவும், ஆரியப் பார்ப்பனருக்கு அடுத்தபடி தாம் சாதியில் உயர்ந்தவர் எனவும் பாராட்டுவது ஏன்? இவர் பெருமை கொள்ளும் நாலாஞ்சாதி எவ்வாறு தோன்றியது?

ஏற்கனவே கூறியதுபோன்று ரிக் வேதப்படியும், மனு தர்மச் சாத்திரத்தின்படியும், பயிர்த்தொழில் மூன்ருவது வகுப் பிற்கே உரியது. நான்காவது வகுப்பினர் ஏவல் மாந்தர் ஆவர். இவருக்கு உழவுத்தொழில் கூறப்படவில்லை. ஆனல் தொல்காப்பியத்தில் மூன்ருவது வகுப்பிற்கு வணிகமும், நான் காவது வகுப்பிற்கு பயிர்த்தொழிலும் கூறப்பட்டுள்ளது. இம் மரபியல் பற்றிய சூத்திரங்களுக்குப் பின்னுளில் உரை கண்ட வர் மூன்ருவது வகுப்பினர்க்கு ஆரிய மரபையொட்டி ஆநிரை பராமரிப்பு, வணிகம், வேளாண்மை ஆக மூன்றும் உண் டெனக் கண்டுளர். ஏற்கனவே கூறியதுபோன்று தமிழ் மரபுப் படி ஆநிரைகளைப் பேணுவது முல்லை நில ஆயருடையது.

பின்னாளில் அகராதிகள் தோற்றுவித்தவர் இன்றைய வேளா ளரை வைசியராக உயர்த்த முயற்சித்துள்ளனர். வேளாளர் என்பதற்கு தனவைசியர், கோவைசியர், பூவைசியர் என அகராதிகளில் பொருள் கண்டுள்ளனர். தனவைசியர் என் பது வட்டி மூலம் பொருள் ஈட்டுபவர். கோவைசியர் என் பவர் இடையர். பூவைசியர் என்பவர் பயிர்த்தொழில் செய் பவர். இனி நிகண்டுகளுக்கு வருவோம். காலத்தால் முற் பட்டதாகக் கூறப்படும் திவாகர நிகண்டில் வேளாண்மை என் பதற்கு உபகாரம், ஈகையும் விளம்பும் என்று, கண்டுளது நாம் அறிந்ததொன்றே. ஆனல் இதில் வேளாளரது தொழில் கள் உழவு, பசு காவல், வாணிபம், குயிலுவம், காருகவினே. [நெய்தல் தொழில்] இரு பிறப்பாளர்க்கு ஏவல் செய்தல் என அறுவகையாகக் கண்டுளது. திவாரகத்திற்குப் பின் தோன் றியதெனக் கூறப்படும் பிங்கல நிகண்டில் வேளாண்மை என் பதற்குக் கொடையும், வாய்மையும் விளம்பும் என்றும், வேளாண்மாந்தர் தொழில்கள் ஆணேவழி நிற்றல், மான வினேத் தொடங்கல், கைக்கடனுற்றல், குற்ற மனத்திண்மை, சுற்றம் போற்றல், நீங்காத முயற்சி, மன்னிறைத்தருதல், ஒற் றுமை கோடல், ஒழுக்கம், விருந்து புரந்தருதல் எனப் பத்து வகையாகக் கண்டுளது. [780]. இவற்றில் உழவுத் தொழில் இடம்பெருதது குறிப்பிடத்தக்கது. மேலும் இந்நிகண்டில் வேளாளர் என்பதற்குச் சூத்திரரும் கொடையாளரும் எனப் பொருள் கண்டுளது. கொடையாளர் என்பவர் பண்டைய மரபுப்படி மருதநில மள்ளர் குடியினர் ஆவர். சூத்திரர் என் பவர் இக்கால வேளாளரா? இது ஆய்வுக்குரியது. நிற்க.

வீர சோழியம் என்ற இலக்கண நூலில் வேளாளரது தொழில்கள் ஈதல், உழவு, நிரையோம்பல், வணிகம், வழி பாடு [இசை சங்கீதம்] பார்ப்பனர்க்கு ஊழியம் [செ 85] எனக் கண்டுளது. தொகையகராதியில் இவரது தொழில்கள் ஆணேவழி நிற்றல், அழிந்தோரை நிறுத்தல், கைக்கடனுற்றல், கசிவகத்துண்மை, ஆக்கல், போற்றல், ஓவா முயற்சி, மன்னிறை தருதல், ஒற்றுமை கோடல், விருந்து புரந்தருதல் திருந்திய ஒழுக்கம் எனக் கண்டுளது. இதிலும் உழவு

தொழில் குறிப்பிடாதது காண்க. நவநீதப் பாட்டியலில் கண்டுள்ள வேளாளர் இயல்பு வருவாறு :

‘ திருந்திய நல்லறம், தீராத செல்வம், ஒழுக்கமேன்மை,
விருந்திய சுற்றத்தையாற்றுதல், மன்னர்க்குறை
யிறு பொருந்திய வொற்றுமை கோடல், புகழும்
வினை தொடங்கல், விருந்து புரந்தருதல் வேளாண்
குடிக்கு’ [செய்.79].

‘ வாணிபஞ் செய்தலுபகார மிசாரம்
வாபந்த செயல் பேணியு முதலிரு பிறப்பாளர்
நெறிவழுவா ஆணை வழி நிற்றலர் நிறை போற்றல்
அகன்றவல் குற்பூண் முலையாயிவை
வேளாண் குடிக்கு புகன்றனவே ’ [செ. 80]

வேளாளர் இயல்புபற்றி பரஞ்சோதியார் கூறுவதாவது :
‘ வழுக்காறு வாய்மைமாண்பும் கங்கைதன் மரபில்வந்த
விழுக்குடிப் பிறப்பும் மூவர் ஏவியவினை கேட்டாற்றும்
ஒழுக்கமும் அமைச்சாம், வேந்தர்க் குறிதிசூழ் வினையும்
குன்று
இழுக்காறு மேழிச்செல்வர் வளமறுகியம் பலுந்துறும்
வருவிருந்தேதிர் கொண்டேற்று நயனுரை வழங்கும்
ஓசை ’

சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய பட்டினப்பாலையில் கண்டுள்ள வேளாண்குடி இயல்பு வருவாறு :

‘ கொலை கடிந்து களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும், ஆவுதியிருத்தியும்
நல்வரனோடு பகடு ஓம்பியும்
நான்மறையோர் புகழ் பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங்கொடுத்தும்
புண்ணியம் முட்டாத்தண்ணில் வாழ்க்கை
கொடுமேழி நரையுழவர்’ [செய். 199-205]

சங்க காலத்திற்குப்பின் தோன்றிய பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்ருன திரிகடுகத்தில் வேளாண்குடியின் விழுப்பச் செய்கை எனக் கண்டிருப்பதாவது :

' கழகத்தான் வந்தபொருள் காமுருமை,
பழகினும் பார்ப்பாரைத் தீப்போலொழுகல்.
உழவின்கட் காமுற்று வாழ்க லிம்மூன்றும்
அழகென்ப வேளாண் குடிக்கு '  [செய். 42]

புறப்பொருள் வெண்பாமாலே வேளாண் வாகைபற்றிக் கூறுவதாவது :

' மேல் மூவரும் மனம்புகல
வாய்மையான் வழியொழுகின்று' [வாகைத்திணை-10-165]

அடுத்து நான்கு வருணம் பற்றித்தமிழ் இலக்கியங்கள் கூறுவதைக் காண்போம். சங்க இலக்கியத்தைச் சேர்ந்த புறநானூற்றில் பாண்டியன் நெடுஞ்செழியனுல் பாடப்பட்ட செய்யுளில் கண்டுள்ளதாவது :

' வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்பாலொருவன்
கற்பின் மேற்பாலொருவன் அவன்கற்படுமே' [புறம் 183]

சிலப்பதிகாரத்தில் நான்கு வருணம்பற்றி பேசப்படுவதுகாண்க

' கனகபாதமுங் களங்கமும் வந்துவும்
நால்வகை வருணத்து நலங்கே ழொழியவும்
[சிலம்பு-14-180-82]

' பால்வேறு தெரிந்த நால்வேறு தெரு' [சிலம்பு.22.110]

' பால்வேறு தெரிந்த நால்வேறு வீதி'
[சிலம்பு ஊர்காண்காதை-212]

' இடம் கெட ஈண்டிய நால்வகை வருணத்து'
' அடங்காக் கம்பலே உடங்கு இயைந்து ஒலிப்ப'
[சிலம்பு கடலாடு காதை 6-8-164-65]

பெரிய புராணத்தில் நால்வகைக் குலம் இருந்ததாகவும், அவற்றில் நாலாவது குலம் வேளாளர் எனவும் கண்டுளது.

' குறியின் நான்கு குலத்தினராயினும்
நெறியின் அக்குலம் நீங்கினராயினும் '

[குலச்சிறையார். 4]

' நாலாங் குலத்திற் பெருகு நலம் உடையார் வாழும் ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திரு ஞாயிற்றுக் கிழார்'

[29. ஏயர்கோன்-கலிக்காமநாயினர் 207]

'வேத நெறியின் முறைபிறழா மிக்க ஒழுக்கத் தலை நின்ற
சாதி நான்கு நிலை தழைக்குந் தன்மைத் தாகித்
தடமதில் சூழ்'

[37 சுழற்றறியார் 4]

'ஓங்கிய நாற்குலத் தொவ்வாப் புணர்வில் தம்மில்
உயர்ந்தனவும் இழிந்தனவும் ஆன சாதி
தாங்குழுமிப் பிறந்த குலபேதம் எல்லாம்'

[19. திருக் குறிப்புத்தொண்டர் நாயனர். செ 103]

கி. பி. 14-ஆம் நூற்ருண்டைச் சேர்ந்த அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கண்டிருப்பதாவது :

''நாற்பெரும்பண்ணும் சாதி நான்கும்
பாற்படுதிறனும் பண்ணெனப் படுமே''.

நால்வகைச் சாதியினர் இன்னின்னவர், அவர்க்குரிய இயல்புகள் இன்னின்னவை என்ற செய்திகள் கி. பி. 18-19 நூற்ருண்டுகளைச் சேர்ந்த அறப்பளி சுரசதகம், அண்ணுமலைச் சதகம், குமார சதகம், திருவேங்கடச் சதகம், கைலாசநாதர் சதகம் முதலிய நூல்களிலும் காணலாம். தவிர மிகவும் பிற்காலத்தில் தோன்றிய தல புராணங்களில் அந்தணர், அரசர், வணிகர்,வேளாளர் வீதிகள் இருந்ததாகப் பேசப்படுகின்றன. சமண இலக்கியமாகிய நீலகேசியிலும், கபிலர் அகவலிலும் நால்வகை வருணம் கூறப்படுவது காண்க.

'அந்தணரு மல்லவருமாகி யுடனுவ
மந்தமறு நால் வருண மாட்சியினராகித்'

[நீலகேசி. செ 19]

'முற்படைப் பதனில் வேருகிய முறைமை போல்
நால்வகைச் சாதியிற் நாட்டினீர் நாட்டினீர்'

[கபிலர் அகவில்]

வட ஆற்காடு திருவண்ணுமலை மடத்தில் இருந்ததாகக் கூறப் படும் விசய நகர ஆட்சிக்கால கி. பி. 1524-ஆம் ஆண்டு செப் பேடு ஒன்றில் 'நம்முடைய பெரிய நாட்டு மடத்துக்கு நிரு வாகம் சுவாமி சந்நதியிலே நாலாஞ்சாதி வெள்ளாளர்' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. [1]

இதுவரை இலக்கியங்கள் கல்வெட்டுகள் முதலியவற்றில் நான்கு குலங்கள் பற்றியும், அவரது இயல்புகள் பற்றியும் பேசப்பட்டுள்ளதைக் கண்டோம். சங்க இலக்கியமாகிய புற நானூற்றில் 'நாற்பாலொருவன், என வருவதைக் கொண்டு நான்கு வருணங்கள் அக்காலத்தில் இருந்ததாகக் கொள் வதற்கில்லை. மருத நிலத்தில் மள்ளர் குடியின்கீழ் தொழில் மக்கள் தோன்றி, அவரவர் மேற்கொண்ட தொழிற் பெயரால் வழங்கலாயினர். திருவள்ளுவர் வேளாண் குடியைத் தலைக் குடி என்றும், மற்றவரெல்லாம் அவரைத் தொழுது பணி செய் தவர் என்றும் கூறினது இதனுலேயாம். ஆனுல் சங்க இலக் கியங்களுக்கும், திருக்குறளுக்கும் மாருக இவற்றிற்கெல்லாம் மூந்தியதெனக் கூறப்படும் தொல்காப்பியத்தில் வேளாண்குடி நாலாவது குலத்தைச் சேர்ந்தவரென்றும் அவர் மற்ற மூவர்க் கும் பணி செய்பவர் என்றும் கூறுவானேன்? ஒரு வேளை தொல்காப்பியர் காலத்தில் கடைக்குலமாய் இருந்தவர் சங்க காலத்திலும், திருவள்ளுவர் காலத்தி லும் தலைக்குடியாகிப் பின்னர் மீண்டும் நான்காவது குலமா கிய கடை வகுப்பினராய் மாறினரா? நிற்க. தொல்காப்பி யத்தின் பொருளதிகாரம் அகத்திணையில் வேளாளரை மன்ன

1 தென் இந்திய கோயிற் கல்வெட்டுகள். பாகம் III-R. 336

ரின் பின்னோர் எனவும், மண்டலத்தலைவரும், தண்டத் தலைவரும், வேள், காவிதி என்ற பட்டங்களுக்கும், மன்னர் மகட்கொடைக்கும் உரியவர் என்று கண்டிருக்கும்போது அவரைப் பார்ப்பனருக்கும், வணிகருக்கும் ஏவல் செய்யும் பணிமக்களாக தொல்காப்பியத்தின் மரபியல் பகுதியிலும், நிகண்டுகளிலும் கண்டுள்ளது ஏனோ ? எனவே தொல்காப்பியத்தில் மரபியல் பகுதியில் காணப்படும் நான்கு வகுப்புகள் தமிழகத்தில் வழக்கில் இல்லை என்பது தெளிவு. பல தமிழறிஞர் கருத்துப்படி நான்கு வகுப்பு பற்றிய சூத்திரங்கள் இடைச்செருகல்கள் ஆம். இடைக்காலத்தில் தொல்காப்பியத்திற்கு உரை செய்தவர்கள் சூத்திரங்கள் புனைந்து இடைச்செருகலாய் அதனுள் நுழைத்திருக்கவேண்டும் என்றும், அவை வெற்றிகரமாய்ச் செய்யப்படவில்லை என்பதுவும் குறிப்பிடத்தக்கது. பெரும்பாலும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டிற்கு முன் உரைகள் தோன்றாமல் அதற்குப் பிறகே அவை தோன்றியிருப்பது சிந்திக்கத்தக்கதொன்றாம். இடைக்காலத்தில் சைவ, வைணவ சமயங்களின் எழுச்சியினால் சமுதாயத்தில் ஏற்பட்ட மாற்றங்களை மனத்திற் கொண்டு, அவற்றிற்குத் தக்கபடி உரைகள், நிகண்டுகள் செய்தும், அதேபோழ்து அக்கருத்துக்களுக்கு மாறுபட்ட இலக்கியங்கள், உரைகள், நிகண்டுகள் இவற்றை அழித்திருப்பதுவும் சாத்தியமே. ஆடிப் பதினெட்டாம் பெருக்கின்போது பழைய ஏட்டுச் சுவடிகளை ஆறுகளிலும் குளம் குட்டைகளிலும் விட்டு எரிந்து அவைகளை வீணடித்தது நம்மில் பலரும் அறிந்ததொன்றே.

தமிழறிஞர் பலர் பொதுவாக சிலப்பதிகாரத்தை கி. பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பர். இதை ஒரு சாரார் ஒப்புக் கொள்வதில்லை. வையாபுரிபிள்ளை இதை கி. பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்பார். மு. இராகவ அய்யங்கார் இதை கி. பி. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்கிறார். பேராசிரியர் செ. கோவிந்தன் [கேரளம், சித்தூர், பாலக்காடு அரசினர் கலைக்கல்லூரி] இதை கி. பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென வாதிக்கிறார். ஞானநாத்தெபேஸ்கர் இதை கி. பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்கிறார். சைவ சமய மறுமலர்ச்சி பல்லவர் காலத்தில் ஏற்பட்டது. இக்காலத்தில் ஆரியக் கோட்பாடுகள் அடிப்படையில் நான்கு வரு

ணங்கள் தமிழகத்தில் நிலே பெற்றிருந்ததாக திருமறைகள் கண்டு, மக்களுள் பேதத்தை தோற்றுவித்திருக்கவேண்டும். பல்லவ மன்னனாகிய பரமேஸ்வர வர்மன் [கி. பி. 670-700] சாதிகள்பற்றிச் சட்டங்கள் இயற்றி அமுல் படுத்தினன் எனக் கல்வெட்டுகள் கூறுவது இதற்குச் சான்ருகும். [Parameswara Varman enforced the laws of Castes] [1] டாக்டர் கே. கே. பிள்ளை பல்லவர் ஆரியப் பார்ப்பனராயிருக்கலாம் எனக் கருதுகிருர். [2] ஆரம்பத்தில் தமிழ் மொழியை ஆதரிக்காமல் பிராகிருதத்தையே ஆதரித்து வந்ததாலும், வைதீக மதத்தைப் பரப்ப ஆதரவு நல்கியதாலும், அவர் ஆரிய மரபுச் சார்புடையவர் என்பது உறுதிப்படுகின்றது. மேலும் ஆரிய மரபினரை வடக்கேயிருந்து வரவழைத்து தமிழகத்தில் குடியேற்றியவர் பல்லவரேயாவர். சதுர்வேதி மங்கலங்கள் பல்லவர் காலத்திலேயே முதன் முதல் இங்கு தோற்றுவிக்கப்பட்டது என்பது கவனத்திற்குரியது. நிற்க.

நீண்டகால இடைவெளிக்குப் பிறகு பிற்காலச் சோழமன்னன் இரண்டாம் குலோத்துங்கன் [AD 1133.50] சாதிகள், மறைநூல்கள் காவலன் என ஒரு கல்வெட்டு கூறுகின்றது. [3] [ Kulothunga II is described as the protector of the laws of castes and the sacred laws ] வைதீக மதங்கள் நாட்டில் நன்கு வேரூன்ற ஆரியருக்கு சமூகத்தில் உயர் அந்தஸ்து கிடைத்தது, அவரை முதல் குலமாகிய அந்தணர் எனவும், மூவேந்தர் மரபினராகிய தேவேந்திர குலத்தாரை இரண்டாவது குலமாகிய அரசர் எனவும், வணிகத்தில் ஈடுபட்டோரை வைசியன் எனவும், வைதீக மதங்களுக்கு ஈர்க்கப்பட்டு ஆரிய மரபினர் தலைமையை ஏற்றவரை நாலாவது வருணமாகிய வேளாளர் எனவும், செய்யுட்கள், சூத்திரங்கள் இயற்றி இலக்கியங்களில் இடைச் செருகல்கள் மூலம் புகுத்தி,

---

1 *S 11. Vol I. 151*

2 *Page 271-73. Studies in Indian History with special reference to Tamil Nadu [XIII Were the Pallavas Brahmins ?] Dr. K. K. Pillay.*

3 *S 11. IV. 546*

நிகண்டுகளும், உரை நூல்களும் தோற்றுவித்திருக்கின்றனர். இப்போக்கு திடீரென நிகழ்ந்திருப்பதற்கில்லை. பல்லவர் காலத்தில் தோற்றம் எடுத்து பிற்காலச் சோழர் காலத்தில் சிறிது ஆக்கம் பெற்றுத் தெலுங்கர் ஆட்சியில் நன்கு வேரூன்றியது எனலாம். எனினும் ஆரியப் பார்ப்பனர் தலைமையை ஏற்றவர் இன்று சமூக நிலையில் மேல் தட்டில் இருப்பவரேயாம். இவர் மிகவும் சிறுபான்மையோரே. பெரும்பாலானவர் இவரது தலைமையை ஏற்கவில்லை என்பது கண்கூடு. நிற்க.

நான்காவது வகுப்பு வேளாளர் பார்ப்பனருக்கு ஊழியஞ் செய்ய வேண்டுமென்று கூறும்போது திரிகடுகம் 'பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல் அழகென்ப வேளாண் குடிக்கு' என்று அறிவுறுத்துவது பண்டைய வேளாண் குடி பற்றியேயாம். இக்கருத்தை ஒரு பழம் பாடலும் வலியுறுத்துவது காண்க.

'செட்டி மக்கள் வாசல் வழிச் செல்லோமே
செக்காரப் பொட்டி மக்கள் வாசல் வழிப்போகோமே
முட்டிபுகும் பார்ப்பா ரகத்தை எட்டிப் பாரோமே
எந்நாளும் காப்பாரே வேளாளர் காண்'

பிற்காலத்தில் கபிலரும் மற்றும் சித்தருள் பலரும் நான்குவித சாதிப் பாகுபாடுகளைப்பற்றிச் சாடியிருப்பதுவும் இதற்குச் சான்றாகும். ஆரியப்பார்ப்பனர் தமக்கு உயர் இடம் தேடி வந்தகாலை பண்டுதொட்டு அவரது போக்குக்கு எதிர்ப்பு இருந்து வந்ததென்பதுவும் தெளிவு.

எனவே பண்டைத் தமிழகத்தில் நான்கு வருணப் பாகுபாடுகள் வழக்கில் இல்லை என்றும், அப்பாகுபாடு தமிழர் நெறிக்கு முற்றும் பொருந்தாது என்றும், வைதீக மதங்கள் தோன்றிய காலை, அவற்றிற்கு ஈர்க்கப்பட்ட ஒருசாரார் அறியாமையாலும், பேதமையாலும் தம்மை நாலாஞ்சாதி வேளாளர் எனக் கூறலாயினர் என்றும் நாம் முடிவு கொள்வோம்.

—X—

# சூத்திரர் யார் ?

ஏற்கனவே பண்டைத் தமிழகத்தில் மக்கள் மத்தியில் நான்கு வருணம் வழக்கில் இருந்ததா என்பதுபற்றி ஆராய்ந்ததில் அவை இல்லை எனவும், இடைக்காலத்தில் வைதீக மதங்கள் தோன்றியகாலை அவற்றில் ஈர்க்கப்பட்டு ஆரியப் பார்ப்பனர் தலைமையை ஏற்று, அவரது பழக்கவழக்கங் களைப் பின்பற்றியவர் தம்மை நாலாஞ்சாதி வேளாளர் என வழங்கினர் எனவும் கண்டோம். நாலாஞ்சாதி வேளாளர் ஒருபுறமிருக்க, இன்று தாழ்த்தப்பட்டோர் தவிர்த்து பார்ப்பன ரல்லாதோர் அனைவரையும் சூத்திரர் என ஒரு சாரார் வழங்கி வருவது ஏன் ? தமிழ் மரபில் நான்குவித சாதிப் பிரிவுகள் இல்லை என்கும்போது, நான்காவது வருணத்துடன் தொடர் புடையதாகக் கருதப்படும் சூத்திர வகுப்பும் இருப்பதற்கில்லை என்பது உறுதி. பின் தமிழ் மரபுக்குப் பொருந்தாத இந்த சூத்திர வகுப்பு தமிழகத்தில் எவ்வாறு தோன்றியது ? இது ஆய்வுக்குரியது.

சூத்திரர் என்பவர் ஆரியர் இந்திய நாட்டில் வட பகுதியில் குடியேறியகாலை அவருடன் வந்த அவரது அடிமைகள், மற் றும் வட இந்தியாவில் அவரால் வெல்லப்பட்டவர்களுமாவர். ஆனால் தமிழகத்தைப் பொருத்தமட்டில் இங்கு ஒருவரும் ஆரியரால் வெல்லப்படவில்லை. ஆரியர் படையெடுப்பைத் தமிழ் வேந்தர் முறியடித்ததாகச் சங்க இலக்கியங்களில் வரும் ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் என்ற பெயரால் தேற்றம். எனவே இங்கு அவர் சுமுகமான முறை யிலேயே குடியேறி, தமது சமயத்தைப் பரப்பி நான்கு வருணக் கோட்பாட்டையும், அவற்றுடன் தொடர்புடைய சூத்திர வகுப் பையும் தோற்றுவித்திருக்க வேண்டும். இச்சூத்திரவகுப்பு பற்றிக் கால்டுவெல் கூறுவதாவது :

'இன்று சூத்திரன் என்ற பட்டம் வட இந்தியாவிலுள்ள பெரும்பான்மையான மக்களைக் குறிக்க வழங்குகின்றது. கௌரியர், திராவிடர் என்று வேற்றுமை இதன் வழக்கில்

இன்று இல்லை. முதன்முதலில் இது சிந்து ஆற்றின் கரையிலுள்ள ஒரு பழங்குடியின் பெயர் என்று கருதப்பட்டது. லாங்சென் என்பார் சிந்து ஆற்றின் தென்பகுதியிலுள்ள ஸூத்ரோஸ் என்ற நகர் இப்பெயருடன் தொடர்புடையது என்றும், சிறப்பாக வட அரசோஸியாவிலுள்ள சுதராய் என்ற மக்களின் பெயரே இதன் வேர்ச்சொல் என்றும் கூறுகிறார். அபிரர், நிசாதர் முதலியோரைப் போலவே, இவர்கள் கறுத்த நீண்ட மயிருடைய பண்டைக் குழுவினர் என்றும், ஆரியரல்லாதார் என்ற போதிலும், ஆரியரால் வெல்லப்பட்டு ஆரியமயமாக்கப்பட்டவர் என்றும் அவர் கூறுகிறார். பழங்குடிகளில் பலரும் ஆரியரால் பின்னர் வென்றடிமைப்பட்டபோது இவர்கள் எல்லோரும் இவரது பெயராகிய சூத்திரர் என்ற பெயராலேயே அழைக்கப்பட்டனர். கீழ்படுத்தப்படாது எதிர்த்த பழங்குடியினர் தஸ்யூ என்றோ, மிலேச்சர் என்றோ அழைக்கப்பட்டனர். ஆராய்ச்சியாளர் பலர் ஸூத்திரர் எனப்பட்ட அனைவரும் இங்ஙனம் அடிமைப்பட்ட ஆரியரல்லாதோரே என்கின்றனர். அது முற்றிலும் பொருத்தமுடையதன்று. ஆரியர் முதலிலிருந்தே தம்முடைய அடிமைகளையும், பணியாளர்களையும் உடையவராயிருந்திருக்க வேண்டும். ஸ்லோவேனிய அடிமைகள் ஸ்லோவேனியராகவும், மாகிய அடிமைகள் மாகியரேயாகவும் இருப்பது போல், ஆரிய அடிமைகளும் முதலில் ஆரியராய் இருந்திருக்கவேண்டும். அங்ஙனமின்றேல் பாசுதங்களிலும், இன்றைய வட இந்திய மொழிகளிலும் இவ்வாறு பெருவாரியான வடசொற்கள் இருக்க இடமில்லை.' 1

எஸ். எ. டாங்கே ஆரிய வருணம்பற்றிக் கூறுவதைக் காண்போம். 'ஆரிய மரபில் ஆரம்பத்தில் வருணம் ஒன்றும் இல்லை. அவர் ஒரே வருணமாய்த்தான் இருந்தனர். பின்னர் அவருள் மூன்று வருணம் தோன்றியது. அதன்பின் நான்காவது வருணம் உண்டானது. இந்த நான்காவது பிரிவு

1 பக். 147. கால்டுவெல் ஒப்பியல் இலக்கணம். தமிழாக்கம் கா. அப்பாத்துரையார். காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை.

உண்மையிலேயே வருணம் ஆகாது. இது ஆரிய மரபுக்குள்ளிருந்தே உற்பத்தியானது. [1]

'But it is accepted by all that at first there was no Varna at all or only one; then came three and later was added the fourth one being not a real Varna originally arising out of that society itself.' [1]

அவர் மேலும் கூறுவார்: 'முதலில் வேதங்களுக்கெல்லாம் தொன்மையானதாகக் கருதப்படும் ரிக் வேதம் வைசிய வகுப்பைத் தோற்றுவித்தது. சாம வேதம் பிராமண வகுப்பைத் தோற்றுவித்தது. யசுர் வேதம் சத்திரிய வகுப்பைத் தோற்றுவித்தது. இந்த வேத கர்த்தாக்களும் சூத்திரர் நான்காம் வகுப்பு என்று கூறவில்லை.' [2]

'In this the order is that the most ancient Rig Veda gives off the Vaishya, the Sama Veda gives off the Brahmin and the Yajus gives off the Kshatriya. Both these authors do not mention the Sudra as the fourth Varna.' [2]

இந்த நான்காவது வருணமாகிய சூத்திரர் எவ்வாறு தோன்றினர்? என்பதுபற்றி எஸ். ஏ. டாங்கே மேலும் கூறுவதாவது: 'பிராமணரைத் தலைவராகக்கொண்ட கணங்களில் சூத்திரரோ, அடிமைகளோ இருக்க இடமில்லை. பின்னர் கணங்களுக்குள் போர்கள் நிகழ்ந்த காலை, போரில் பிடிபட்டவரை புருஷ மேதாப்படி கொன்று விடுவர். பின்னர் உணவுப் பண்டங்கள் அதிகமாய்த் தேவைப்பட்டபோது கைதிகளாய்ப் பிடிபட்டவரைக் கொல்லாமல் உணவுப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்காக அவரைப் போரில் வெற்றிபெற்றவர்

1 Page 101. India from Primitive Communism to slavery. S A. Dange.

2 Page 102. India from primitive communism to slavery. S. A. Dange.

வைத்துக்கொண்டனர். இவ்வாறு அடிமைப்பட்டவர் நான்காவது வருணமாகிய சூத்திரர் என வழங்கினர். இவர்கள் ஆரிய மரபினர்க்குத் தொண்டு செய்யவேண்டும். இவருக்கு எவ்வித உரிமையும் கிடையாது. இவரை உடையவருக்கு இவரைக் கொல்லவோ, விற்கவோ, அல்லது ஈடுவைக்கவோ உரிமை உண்டு. இவர் நிலமோ, மனைவியோ சொந்தமாக வைத்துக்கொள்ளக்கூடாது. தெய்வத்தைக்கூட வழிபட இவருக்கு உரிமை இல்லை.' 1

ஆரிய மரபில் சூத்திர வகுப்பு எவ்வாறு தோன்றியதெனக் கண்டோம். தமிழ் மரபில் இவ்வகுப்பு எவ்வாறு தோன்றியதென்பதுபற்றிப் பார்ப்போம்.

வி. கனகசபை பிள்ளை கூறுவதாவது : 'தொல்காப்பியர் வேளாளர் சூத்திரர் என்று கூறவில்லை. எனினும் அவரது சூத்திரங்களிலிருந்து சாதாரண வேளாளர் சூத்திரர் எனவும், மன்னர் பரம்பரையினர் சத்திரியர் எனவும் வழங்கினதாகக் கருத இடமாகின்றது. தமிழரை ஆரிய வருணப் பாகுபாட்டிற்குள் கொண்டு வருவதற்கு இது ஆரியப் பார்ப்பனர் மேற்கொண்ட முதல் முயற்சியாகும்.' 2

தர்ஸ்டன் கூறுவதாவது : 'சென்னை மாநகர ஆணையர் 1871-ஆம் ஆண்டு நகராட்சி குடிக்கணக்கெடுப்பில் வேளாளரை ஆரிய நான்கு வருண மரபை ஒட்டி, சூத்திரர் எனப் பதிந்து, தம் மரபை இழிவுபடுத்தியதாக அவர்மீது வேளாளர் குறைகூறினர்.' 3

1 *Page 102. India from primitive Communism to Slavery S. A. Dange.*

2 *Page* 116. *Tamils Eighteen hundred years ago. V. Kanagasabai Pillai.*

3 *Page 366. Castes and Tribes of South India. Vol. VII. E. Thurston.*

அவர் மேலும் வேருெரு இடத்தில் கூறுவதாவது : 'வேளாளர் சூத்திரரிலேயே முதன்மையானவர். கள்ளர் நடத்தும் திருட்டுக்களே உலகப் பிரசித்தி பெற்றவை.' [1]

'Of all the Sections of sudres the Vellala is the fore-most and of all the thefts committed in the world those of the Kallas are notorious.'[1]

ஸ்டூவர்ட் கூறுவதாவது : 'கிரமமாய்ப் பார்க்குமிடத்து சூத்திரர் என்ற வகுப்பு சென்னை மாகாணத்திலுள்ள மக்களுக்குப் பொருந்தாது. ஆனுல் ஆரியப் பார்ப்பனரைத் தொட்டால் தீட்டு உண்டாகாத சாதிகளைச் சுட்ட அது பயன்படுத்தப் பட்டிருக்கின்றது.' [2]

H. A. Stuart says : 'Strictly speaking the term Sudra is inapplicable to Madras castes; but it is a convenient expression to denote those castes which do not cause polution.'[2]

கால்டுவெல் கூறுவதைக் காண்போம் : 'மனுநூலாரும் பாரத ஆசிரியரும், புராண ஆசிரியர்களும் திராவிட குழுவைச் சேர்ந்த எல்லோரையுமே போர்வீரர் மரபில் சேர்த்து சத்திரியராக வகைப்படுத்திக் கூறுகின்றனர். ஆனுல் திராவிடரிடையே வந்து குடியேறி, அவர்களிடையே வடநாட்டு வகுப்புப் பிரிவினை கற்பித்த பார்ப்பனர்மட்டும், நாடாளும் அரச குடும்பத்தின் ரொழித்த மற்றையோர் அனைவரையும் சூத்திரர் என்ற பெயருக்கு மேற்பட்ட எப்பெயராலும் அழைத்ததாகத் தெரியவில்லை. இது வியப்பாகவே இருக்கிறது. ஏனெனில் அவர்கள் எளிதாக வேளாளரையும், வணிகரையும் வைசியர் என்று அழைத்து, மற்றைக் கீழ்தர வகுப்பைச் சூத்திரர் என அழைத்திருக்க முடியும். அங்ஙனம் அவர்கள் செய்யவில்லை.

1 *Page 388. Castes and Tribes of South India. Vol. VII. E. Thurston.*

2 *Page 213. Census of India 1891. Vol. XIII. H. A. Stuart.*

அஃதேதெனின், ஆரிய இனத்தைச் சேர்ந்தோரேயன்றி ஏனே யோரை சத்திரியரென்றோ, வைசியரென்றோ அழைப்பது அவர்கள் மரபுக்கு மாறுனதொன்றுகையால் ஆரியரல்லாத திராவிட மக்களை [அவர்கள் எவ்வளவு உயர்தர மக்களேயாயினும் ] சூத்திரர் என்றே அழைத்துள்ளராதலின் என்க.

மேற்கூறிய நிலைமையினால்தான் வட இந்தியாவில் சூத்திரர் என்ற மொழிக்கிருந்த பொருளைவிட தென் இந்தியாவில் அதற்கு சரியான பொருள் ஏற்பட்டது. வட இந்தியாவில் சூத்திரர்கள் என்போர் அடிமைகள்; சட்டத்தின் பாதுகாப்புக்குப் புறம்பானவர்கள்; அவர்களுக்கு நிலமோ, அரசியல் உரிமைகளோ கிடையாது. எனவே அடிமைகளும், தாழ்ந்த வகுப்பினருமே அங்கு சூத்திரர் எனப்பட்டனர். தென்னிந்தியாவிலோ எனின் உயர் வகுப்பினரும், நடு வகுப்பினருமே சூத்திரர் என்றழைக்கப்பட்டனர். வட நாட்டுக்குச் சரியான தென்நாட்டு மக்களோ சூத்திரர் என்றழைக்கப்படாமல் பள்ளர், பறையர் முதலிய பெயர்களாலேயே அழைக்கப்பட்டனர். சூத்திரர் என்ற பெயர் கொண்டு அழைக்கப்பட்டதாலேயே சிற்றரசர்களும், வீரர்களும், வேளாளரும் ஆரியரால் அடிமைப் படுத்தப்பட்டவர்களாகிவிடமாட்டார்கள். உண்மையில் பார்ப்பனர் அவர்களை சூத்திரர் என்றழைத்தபோது அப்பெயர் மதிப்புக்குரியதொரு பட்டப்பெயர் என்று கூறி அவர்களை ஏமாற்றியிருக்கக்கூடும். இவ் வடஇந்தியாவில் சூத்திரர் எல்லா வகுப்பிலும் தாழ்ந்த வகுப்பினர்; தென்னிந்தியாவிலோ சூத்திரர் பார்ப்பனருக்கு அடுத்தபடியான உயர்ந்த வகுப்பினர் ஆவர். உண்மையில் சத்திரியர், வைசியர் என்பவற்றையொப்ப, சூத்திரர் என்பதுவும் திராவிடருள் எவ்வகுப்பினேர்க்கும் பொருத்தமற்ற பெயரேயாகும் என்க. திராவிடரை ஆரியப் பாகுபாட்டுடன் தொடர்புபடுத்தாமல் திராவிடர் தம்மரபிற் கேற்ப வேளாளர், நாயக்கர் என்ற அவரவர் பழங்குடிப் பெயராலேயே அழைத்தலே சால்புடையதாகும்.[1]

---

1 பக். 147. கால்டுவெல் ஒப்பிலக்கணம்.
தமிழாக்கம் கா. அப்பாத்துரையார் காழி
சி. வ. கண்ணுசாமி பிள்ளை.

சூத்திரர்பற்றி அறிஞர் சிலர் கூறிய கருத்துக்கள் என்ன என்பதைக் கண்டோம். வி. கனகசபைபிள்ளை வேளாளரில் அரசமரபினர் தவிர்த்து மற்றவரைச் சூத்திரராக்கும் முயற்சி நாட்டில் நடந்ததாகக் கூறுகிறுர்.ஸ்டுவர்ட் போன்ருேர் தாழ்த் தப்பட்டவர் தவிர்த்து தமிழர் என்போர் அனைவரும் சூத்திரர் என வழங்கினர் என்கின்றனர். கால்டுவெல் தென்னகத்தி லுள்ள அரச மரபினரையும் ஆரியப் பார்ப்பனர் சூத்திரர் என வழங்கியதாகக் கூறுகிருர். இவரது கூற்றுக்களின் தன்மை பற்றி ஆராயுமுகத்தான் தமிழ் இலக்கியங்களில் இப்பெயர் இடம் பெற்றிருக்கின்றதா? என்பது பற்றிப் பார்ப்போம்.

‘ அறம்பொருள் இன்பம் அரசர் சாதி,
அறம்பொருள் வணிகர் சாதி.
அறமேற் சூத்திரர் அங்கமாகும்’ (செயிற்றியம்)

‘ சூத்திராணியின் தோகையர் கனகநெல்
வாய்ப்ப மன்ன மகிழ்ந்து வாழ்குவரே’
(சிலப்பதிகாரம். அடியார்க்கு நல்லார் உரை)

‘ மன்னுசீர் மயிலைந் திருமாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத்தொல் குலம் ’
(பெரியபுராணம். வாயிலார். செ. 6.)

‘ தம்பு வாய்மையில் நீடு சூத்திர நற்குலஞ் செய்
தவத்தினுல் இம்பர் ஞாலம் விளக்கினுர்
இளையான் குடிமாறனுர் ’
(பெரியபுராணம் இளையான்குடி மாறநாயனுர். செ. 1)

சூத்திரர் நிறம் கறுப்பு என்பதாக ஒரு பழஞ் செய்யுள் வழக்கில் உள்ளது,

‘ அந்தணன் வெள்ளை, அரசன் சிவப்பு, வந்த வசியன்
பச்சை, அந்தமில் சூத்திரன் கறுப்பு.’
என்ற மேற்கோளால் விளங்கும்.

இடைக்காலத்தில் தோன்றிய நிகண்டுகளில் சூத்திரன் என்ற பெயர் இடம் பெற்றிருக்கின்றது. மிகவும் பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் சோழன் பூர்வ பட்டயத்தில்

பிரம்ம சாதி, சத்திரிய சாதி, வைசிய சாதி, சூத்திர சாதி எனக் கண்டுளது.

இலக்கியங்களைத் தவிர கல்வெட்டுகள் சிலவற்றில் சூத்திரர் என்ற பெயர் இடம்பெற்றிருப்பது காண்க.

'வேட்டைக்குப்போன ஒரு சூத்திரன் குறி தவறி ஒரு வேளாளன்மீது அம்பை எய்துவிட்டான். எழுபத்தொன்பது நாட்டு விவசாயிகளும் ஒன்றுகூடி சூத்திரனைக் குற்றவாளி எனத் தீர்ப்பளித்தனர்.' [1]

[இக் கல்வெட்டு பிற்காலச் சோழர் காலத்தியது. இதிலிருந்து வேளாளர் வேறு, சூத்திரர் வேறு எனத் தெரிகிறது.]

'A Sudra who went on hunting missed his aim and shot a Vellala. The agriculturists of the seventy nine districts assembled together and declared the Sudra guilty.' [1]

முதலாம் குலோத்துங்கச் சோழன் காலத்திய கி. பி. 12-ஆம் நூற்றுண்டு கல்வெட்டு ஒன்றில் பூவளூர் தலைவனும், வைஷ்ணவனுமான நல்ல சூத்திரரில் முதன்மையான சோழன் மந்திரி மாவிருஞ் சோலை என்று கண்டிருக்கின்றது. [2]

திருச்சி மாவட்டம் முசிறித் தாலுகா அரசலூர் தாயுமான சுவாமி கோயில் சௌமிய வருஷத்தியக் கல்வெட்டு ஒன்றில் சூத்திரத்தெரு என்று பொறிக்கப்பட்டிருக்கின்றது. [3]

பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார் கி. பி. 12-ஆம் நுற்றுண்டைச் சேர்ந்தவர் என்பது நாம் அறிந்ததே. சிலப்

1 *ARE. 67|1906*

2 *ARE. 271|1929*

3 *தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் II. சாசனம் 796. D 2985*

பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கி. பி. 14-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவர் என்பர். செயிற்றியமும் இடைக் காலத்தில் தோன்றியதே. சோழன் பூர்வபட்டயமும் மிகவும் பிற்காலத்தைச் சேர்ந்தது என்பது நாம் அறிந்ததே. நிற்க.

வடமொழி நூல்களில் சூத்திரர் என்பதற்கு குயவர், கொற்றர், கைக்கோளர், துன்னர், கொல்லர், தட்டார், தச்சர், ஓவியர், நாவிதர், வண்ணார், கூத்தர், பாணர், வேடர், கள் வினைஞர், ஊன்வினைஞர், இழிகுலத்தோர், மடவோர் என்று பொருள் கண்டுளது. மனுமிருதி எட்டாம் அத்தியாயம் சூத்திரர் நிலைபற்றிக் கூறுவதாவது: 'ஒரு சூத்திரன் விலைக்கு வாங்கப்பட்டாலும், விலைக்கு வாங்கப்படாவிட்டாலும், அவனை அடிமைவேலை செய்யும்படி ஒரு பார்ப்பனர் கட்டாயப்படுத்தலாம். ஏனென்றால் அவன் பார்ப்பனனுக்கு அடிமையாயிருக்கும்படி கடவுளால் படைக்கப்பட்டான். தன் தலைவனால் விடுவிக்கப்படினும் ஒரு சூத்திரன் தன் அடிமைத்தன்மையினின்றும் விடுவிக்கப்பட்டவன் அல்லன், அஃது அவனுக்கு இயற்கையாய் இருப்பதனால் அவனை அதினின்றும் யார்தான் விடுவிக்கக் கூடும்? சண்டையில் வென்று சிறையாகப் பிடித்துக் கொள்ளப்பட்டவன், தன் அற்றைச் சோற்றுக்காக ஊழியஞ் செய்பவன், தன் வீட்டில் வேசிக்குப் பிறந்தவன், விலைக்கு வாங்கப்பட்டவன், பிறரால் கொடுக்கப்பட்டவன், தம் முன்னோர் காலந்தொட்டு அடிமைப்படுத்தப்பட்டவன், என சூத்திரர் ஏழுவகைப்படுவர் [பக. 33-34. சாதி வேற்றுமையும் போலிச் சைவரும் மறைமலையடிகள்] எனவே ஏற்கனவே கூறியபடி சூத்திரர் என்பவர் ஆரியப் பார்ப்பனருக்கு அடிமைப்பட்டு தொண்டூழியம் செய்யக் கடமைப்பட்டவர் ஆவர். இவர் ஆரியராகவும் இருக்கலாம்; ஆரியரல்லாதவராகவும் இருக்லாம். போரில் வெல்லப்பட்டவர் சூத்திரரானர். வெல்லப்படாதவர் தஸ்யூ, மிலேச்சர் எனவும், பின்னர் தீண்டப்படாதவர் எனவும் வழங்கலாயினர். இது வட இந்தியாவில் ஏற்பட்ட வழக்கு. தென்னகத்தில் குறிப்பாகத் தமிழகத்தில் இப்பெயர் யாரைக் குறிக்கிறது என்று பார்ப்போம்.

நிகண்டுகளில் முந்தியதாகக் கருதப்படும் திவாகரத்தில் சூத்திரர் என்பவர் காராளரில் ஒருவராகக் கண்டுளது. திவாகரத்திற்குப் பின்னர் தோன்றிய பிங்கல நிகண்டில் பதினொரு பிரிவினர் சூத்திரர் எனக் கண்டிருக்கின்றது. பின்னவர், சதுர்த்தர், பெருக்காளர், வளமையர், முத்தொழிலர், மண்மகள் புதல்வர், உழவர், ஏரின் வாழ்நர், காராளர், விளைஞர், மேழியர் இதில் அடங்குவர். ஆசிரிய நிகண்டில், மேழியர், வேளாளர், காராளர், விளைஞர், பின்னவர், சூத்திரர் எனக் கண்டுளது. சூடாமணி நிகண்டில் மண்மகள் புதல்வர், வளமையர், களமர், சதுர்த்தர், உழவர், மேழியர், வேளாளர், ஏரின் வாழ்நர், காராளர், விளைஞர், பின்னவர், சூத்திரர் எனக் கண்டுளது. இந்த நிகண்டின்படி சதுர்த்தர் என்பது நான்காம் வருணமுடையவர்; மேழியர் என்பது மேழிக்கொடியையுடையவர்; பின்னவர் என்பது பின்வருணமுடையவர் என்று பொருள். அமர நிகண்டில் சூத்திரர் என்பதற்கு மடமையுடையோர், பிறர்க்கு ஏவல் செய்வோர் எனப்பொருள் கண்டுளது. திவாகரத்தின் காலம் கி. பி. 9-ஆம் நூற்றுண்டு எனவும், பிங்கல நிகண்டு கி. பி. 10-ஆம் நூற்றுண்டு எனவும் ஏற்கனவே கண்டோம். ஆசிரிய நிகண்டு, சூடாமணி நிகண்டின் காலம் கி.பி.16-ம் நூற்றுண்டு எனவும், அமர நிகண்டின் காலம் கி. பி. 17-ஆம் நூற்றுண்டு எனவும் அறிஞர் கூறுவர்.

ஆக இதுவரை நாம் கண்ட இலக்கியங்கள், கல்வெட்டுகள், நிகண்டுகள் இவற்றிலிருந்து சங்க காலத்தில் இல்லாததும், தமிழ் மரபிற்கு முற்றிலும் மாறுபட்ட சூத்திரர் என்ற வகுப்பு இடைக்காலத்தில் தோன்றியதாகத் தெரிகிறது. நிகண்டுகளின்படி கி. பி. 9-ஆம் நூற்றுண்டில் சூத்திரர் காராளரில் ஒருவர் ஆவர். கி. பி. 10-ஆம் நூற்றுண்டில் காராளரில் அடங்கியவர் அனைவரும் சூத்திரராக்கப்பட்டுளர். கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் வேளாளர் சூத்திரரில் ஒருவராகி விட்டனர். இக்காலத்தில் தெலுங்கர் ஆட்சி தமிழகமெங்கும் பரவியிருந்ததென்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் சூத்திர வகுப்பும் நாம் ஏற்கனவே கண்ட நான்காவது வருண வேளாளரும் ஒரே மரபா அல்லது வேறு மரபா என்பது ஆய்வுக்குரியது.

வி.கனகசபை பிள்ளை இன்றைய வேளாளரைச் சற்சூத்திரர் என வழங்கு முகத்தான் நாலாஞ்சாதி என சித்திரிக்கப்பட்டுள்ளதாகக் கூறுவதையும், இடைக்காலக் கல்வெட்டுகளில் வேளாளர் என்றும், நாலாஞ்சாதி வேளாளர் என்றும், சூத்திரர் என்றும் கண்டிருப்பதையும், பெரிய புராணத்தில் சேக்கிழார் பதினொரு அடியார்களை வேளாளர் எனவும் வாயிலாரையும், இளையான்குடி மாறனாரையும் சூத்திர நற்குலம் எனவும் குறிப்பிடுவதையும் கண்டோம். இச்சேக்கிழார் வேளாளரில் சிலரை நான்காவது வருணம் என்று கூறுவதுவும் நினைவிருக்கத்தக்கது. அறுபத்து மூன்று நாயன்மார்களில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் தவிர்த்து வேறுபல மரபினர் உள்ளனர். இவர்கள் ஒருவரையும் நாலாவது வருணம் என்றோ, சூத்திரர் என்றோ சேக்கிழார் குறிப்பிடக் காணோம். ஏற்கனவே கூறியதுபோன்று சேக்கிழார் காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு ஆகும். இவர் மீது புராணம் பாடிய உமாபதி சிவாச்சாரியார் காலம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டு என்பர். கி. பி. 12-ஆம் நூற்றாண்டில் சூத்திரர் என சேக்கிழாரால் வழங்கப்பட்ட இளையான் குடிமாறனாரும், வாயிலாரும் கி. பி. 14-ஆம் நூற்றாண்டில் உமாபதி சிவாச்சாரியாரால் வேளாளராக உயர்த்தப்பட்டுள்ளனர். [1]

உமாபதி சிவாச்சாரியார் சேக்கிழாரை நாற்பத்தெண்ணாயிரம் நற்குடி வேளாளரைச் சேர்ந்தவர் என்று கூறுகிறார். அவ்வாறெனில் இவர் நாலாவது குலத்து வேளாளரேயாவர். சேக்கிழார் சேவையர் குடியைச் சேர்ந்தவர் என்றும், சேவையர் எனில் சேவை செய்பவர் எனப் பொருள்படும் என்றும் ஏற்கனவே கண்டுளது நினைவிருக்கத்தக்கது. பாண்டிய நாட்டில் இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களில் சேர்வை என்ற ஒரு வகுப்பு இருந்து வருவது அனைவரும் அறிந்ததே. இவர்கள் மறவர் பாளையப்பட்டுகளிடம் சேவை அல்லது ஊழியம் பார்த்தவர் என்பதால், ஆரம்பத்தில் சேவை

---

1 *சேக்கிழார் புராணம்—செய். 39-40*

யர் எனவும், பின்னர் சேர்வை எனவும் மாறி வழங்கிவரு வதாகக் கருதவேண்டியுளது. இவர் அகம்படியர் வகுப்பைச் சேர்ந்தவர் என்பர். அகம்படியத் தொண்டும் சேவையர் என்ற பொருளையே உணர்த்துகிறதென்பதுவும் நாம் அறிந் ததுவேயாம். மேலும் அகம்படி என்ற பெயரும் இடைக் காலத்தில் தோன்றியது என்பது நாம் அறிந்ததுவே.

சங்க இலக்கியங்களில் இம்மாதிரிப் பணிகளைச் செய்தவர் தொழுவர் என வழங்கியுள்ளனர். இலக்கியங்களில் காணும் களமர், தொழுவர், மற்றும் நிகண்டுகளில் காணும் சதுர்த்தர், பின்னவர், காராளர், பெருக்காளர் போன்றோர் இன்று நாட் டில் காணப்படாதது குறிப்பிடத்தக்கது இவரில் ஒரு சாரார் தம்மை வேளாளர் என வழங்கிவந்திருக்கவேண்டும். இதற்கு திருவரங்கம் கோயில் ஒழுகு சான்றாக அமைகின்றது. இக் கோயில் ஒழுகில் சூத்திரரில் முதன்மையான வேளாளரது கடமைகள்பற்றிக் கண்டுளதாவது :

" காலாளப்பன் [மரக்காலால் அளப்பவன்] கடமையா வது: கோயில் பண்டாரத்தில் நெல்லை அளந்து கொட்டுகிற தும், கோயிலின் அன்றாடப் பணிவிடைக்குத் தேவையான நெல்லை அதிலிருந்து எடுப்பதுவுமாகும். கோயிற்காத்த பெரு மாள் [கோயிற் வாசற் காப்போன்] கடமை கோயிலின் இராச மகேந்திரம் என்ற கூடத்தின் வாசலைக் காப்பது ஆகும். விழுப்பரையன் [கணக்கன்] கடமை கணக்குகளை எழுதுவது. இவர்கள்தான் சூத்திரருள் அடங்கும் வேளாள வேலைக்காரர் ஆவர் " [1]

V. N. Hari Rao says :

'The following are the duties of the first among the Sudras [Non-Brahmin or Sattada Vaishnava group in the vellala] The duty of the Kalalappan [one who measures with marakkal] is to measure in the store-house and measures out grain required for daily use in the temple.

The duty of Koil Katha Perumal [i. e., the guard] is to guard the gate-way of the Raja Mahendram enclosure.

1 *Page 90 Koil Olugu. Srirangam. V.N. Hari Rao, M.A., Ph.D.*

The duty of Vilupparayan (the accountant) is to maintain accounts. These are the Vellala servants among the Sudrars.' 1

சூடாமணி நிகண்டில் (செ 54) கண்டுள்ள சூத்திரர் கடமை களாவது : 'பசுகாத்தல், பொருளீட்டல், பயிரிடல், புராணுதி களே ஓதல், ஈதல், அந்தணர் முதலியோர்க்கு அனுகூலமாகிய தொழில் செய்தல்.' சங்க காலத்திற்குப் பின்னர், மருதநில மக்கள் வேளாளர், வெள்ளாளர் எனச் சிறப்பிக்கப்பட்டபோது, பல்வேறு பிரிவினர் தம்மை நாலாஞ்சாதி வேளாளர், சூத்திரர் எனவும், காலப்போக்கில் இவரில் ஒரு சாரார் தம்மைச் சூத்திர ரில் முதன்மையானவர் எனவும், நற்குடி, கங்கைகுலம், பெருக்காளர், காராளர், ஏரின்வாழ்நர், மேழிக்கொடியோர், மண்மகள் புதல்வர், பூமிபுத்திரர் எனவும் பலவாறு வழங்கி வந்திருக்கின்றனர். தர்ஸ்டன் சூத்திரரில் முதன்மையானவர் வேளாளர் எனக் கூறுவது இவர்பற்றியேயாம் என்பதில் எள் ளளவும் ஐயம் இல்லை எனலாம். ஏனெனில் பண்டைய வேளாண் மரபினர் நாயக்கர் காலப் பகுதியிலிருந்து பெயர் மாற்றம் பெற்றுப் பள்ளர் என வழங்கி வந்திருக்கின்றனர். இதற்குப் பள்ளு நூல்கள் சான்ருகும்.

பெரியபுராணம், நிகண்டுகள் மற்றும் கல்வெட்டுகள் ஆதாரத்தைக் கொண்டு இக்கால வேளாளர் தவிர்த்து வேறு மரபினர் ஒருவரும் சூத்திரர் என வழங்கவில்லை எனத் தெரி கிறது. ஆனால் காலப் போக்கில் தாழ்த்தப்பட்டோர் தவிர்த்து, பார்ப்பனர் அல்லாதார் அனைவரையும் சூத்திரர் என வழங் கும் பழக்கம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. இப் போக்கு எவ்வாறு வழக்கில் வந்தது? இந்திய நாடு ஆங்கி லேயர் ஆட்சிக்குட்பட்டபோது இன்றையப் பார்ப்பனரும், முதலி, பிள்ளை என்போரும் கல்வி அறிவு உடையோராய் இருந்ததால் அவரே அரசுபணிகளில் இடம்பெறும் வாய்ப் பைப் பெற்றிருந்தனர். மேலும் சமயத் துறையிலும் அவரே

1 *Page 90 Koil Olugu. Srirangam. V.N.Hari Rao,* M.A.,Ph.D.

முதன்மையும், ஆதிக்கமும் பெற்றிருந்தனர். முதலி, பிள்ளை என்பவர் பார்ப்பனரின் தலைமையைப் பரிபூரணமாக ஏற்று, அவருக்கு ஊழியம் செய்வதே தெய்வத்திற்கு ஊழியம் செய் வதற்குச் சமம் என்று கருதுபவர். இந்நிலையில் 1784-ல் இசுலாம், கிறித்துவம், பௌத்தம், சமணம் முதலிய பிற சம யத்தார் தவிர்த்து, இந்தியாவிலுள்ள அனைவரையும் தாழ்த் தப்பட்டவர் உட்பட இந்துக்கள் எனவும் ஆரிய நான்கு வேதங்களும், மற்றும் தர்மச் சாத்திரங்களும் அவர்களுக்குப் பொருந்தும் எனவும் சட்டம் தொகுத்தனர். அதில் ஆரிய வர்ணாஸ்ர மதத்திற்கு உட்படாத பதினெண்குடி மக்களையும் மற்றும் பரர்ப்பனர் தலைமையை ஏற்காத தாழ்த்தப்பட்டோர், மலைவாழ்நர் தவிர்த்து பல்வேறு பிரிவினரையும் இந்து வாரிசுரிமைச் சட்டத்தில் [Hindu Law] சூத்திரர் எனக் கண் டனர். தாழ்த்தப்பட்டோர், மலைவாழ்நர் இவர் சூத்திரர் பட்டி யலில் இடம் பெறவில்லை. எனவே தமிழகத்தில் தாழ்த்தப் பட்டோர், மலைவாழ்நர் தவிர்த்து இந்துக்கள் என வழங்கும் அனைவரையும், அவர் பார்ப்பனர் தலைமையை ஏற்றாலும், ஏற்காவிட்டாலும் பார்ப்பனருக்கு ஊழியம் செய் யும் சூத்திரராக்கப்பட்டுவிட்டனர். கா. சுப்பிரமணிய பிள்ளை இதுபற்றிக் கூறுவதாவது. 'உழுதுண்பாரைத் தொழுதுண் ணும் சூத்திரர் எனவும், தத்தம் தொழிலுக்கு ஏற்பப் பெயர் பெற்று விளங்கும் பதினெட்டு குலத்தாரையும், பிறரையும் சூத்திரர் எனவும் கூறும் இந்து சட்டம் உண்மையை அடிப் படையாகக் கொண்டதல்ல.'[1]

பஞ்ச சாதியார் எனப்படும் தட்டார், தச்சர், கொல்லர், கற்கொல்லர், கன்னார் தங்களுக்கெனத் தனியாய்த் தம் மரபைச் சேர்ந்தவரையே குருக்களாக ஏற்படுத்தியுள்ளனர். நெல்லை, இராமநாதபுரம், மதுரை, புதுக்கோட்டை மாவட்டங்களிலுள்ள கள்ளர், மறவர், சேர்வை (அகம்படியர்) பொதுவாக நன்மை, துன்மைச் சடங்குகளுக்குப் பார்ப்பனப் புரோகிதரை அழைப்ப தில்லை. வலையர், இடையர் முதலானோரும் அப்படியே.

---

1 பக். 150. தமிழர் சமயம். கா.சுப்பிரமணியபிள்ளை M.A., M.L.

கவுண்டரும் பார்ப்பனர் தலைமையை ஏற்காதவரே. கொங்கு வேளாளர் என வழங்கும் இம்மாதிரிப் பார்ப்பனப் புரோகி தரை ஏற்காதவர்களைச் சூத்திரர் என வழங்குவது சரியன்று. பார்ப்பனரல்லாத பல்வேறு பிரிவினரையும் சூத்திரர் என வழங்க முற்பட்டதால் பிள்ளைமார், முதலிமார் என்பவரில் ஊன் உணவு தவிர்த்தும், வைதீக நெறிகளைக் கடைப்பிடித் தும் வருபவர் மற்றவரிலிருந்து வேறுபடுத்திக் காட்டத் தம்மை, சற்சூத்திரர் என்று கூறலாயினர். சற்சூத்திரர் என்றால் உண்மையான, நல்ல சூத்திரர் எனவும், அசற் சூத் திரர் என்றால் கெட்ட, போலி சூத்திரர் எனவும் பொருள் படு வதாயுளது. இதிலிருந்து ஊன் உணவு தவிர்த்து, வைதீக நெறியைப் பின்பற்றும் பிள்ளைமார், முதலிமார்களே சூத்திரர் என்ற பட்டத்திற்கு உரிமையுடையவரென்பதால்அவர்தவிர்த்த பார்ப்பனரல்லாத இந்துக்கள் என வழங்கும் அனைவரையும் சூத்திரர் என வழங்குவது சரியல்ல என்பது தேற்றம். எனினும் அசற் சூத்திரரில் சிலர் சற் சூத்திரராகும்பொருட்டு நாளடை வில் ஊன் உணவைத் தவிர்த்தும், வைதீக ஆச்சாரங்களை மேலும், மேலும் பின்பற்றியும், தங்களது சமூக நிலையை உயர்த்தி வந்திருக்கின்றனர்.

சற் சூத்திரர், அசற் சூத்திரர்பற்றி காரட் என்பவர் கூறு வதாவது: 'சற் சூத்திரருக்கும் அசற் சூத்திரருக்கும் இடையே வித்தியாசம் உளது. சற் சூத்திரர் தமது சாதி ஆச்சாரத்தைப் பின்பற்றியும், ஒழுக்கமாய் நடந்தும், தெய்வ வழிபாடு முதலியவற்றைக் கடைப்பிடித்தும் மீட்புப் பெறத் தகுதியுடையவர் ஆவர். பார்ப்பனப் புரோகிதர் வைதீக நெறிப்படிக்குள்ள சடங்குகளை இவருக்கு நிறைவேற்றிவைக்க லாம். ஆனால் வேதத்தை ஓதவோ, மந்திரங்களைப் பயிலவோ இவர்களுக்கு உரிமை இல்லை. அசற் சூத்திரர் மீட்புக்கு அப் பாற்பட்டவர். வைதீக முறைப்படிக்குள்ள சடங்குகளை பார்ப் பனப் புரோகிதர் இவருக்கு நடத்திவைப்பதில்லை.' [1]

---

1 *Page 238. Legacy of India. G. T. Garrat*

G. T. Garrat says :

'Even when ways and means of allownig him access to Gods by prayer and sacrifices were subsequently devised, a distinction was drawn between the Sat-Sudra who merited emancipation by the observance of his caste duties and good conduct and the Asat-Sudra who was past all hopes of redemption. Only to the good-ones was allowed the privilege of Brahmin rites and sacraments but even in their cases the recital of the mantra or the vedic formula was forbidden.' [1]

டாக்டர் கே. கே. பிள்ளை பெரிய புராணத்திற்கு உரை செய்த ஆறுமுக நாவலர் முதன் முதலாக நான்காவது குலத்தை சற் சூத்திரர் எனப் பொருள் கண்டதாகக் கூறுவார். [2]

இதிலிருந்து ஆறுமுக நாவலர் காலத்திற்குமுன் சற் சூத்திரர் என ஒருவரும் வழங்கப்படவில்லை என்பது இதனால் தேற்றம். ஆக ஆங்கிலேயர் காலத்தில் ஏற்பட்ட இந்துச் சட்டத்தில் பார்ப்பனரல்லாத எல்லாத் தமிழ் மக்களையும் (தாழ்த்தப்பட்டோர் தவிர) சூத்திரர் எனக் குறிப்பிட்டதனாலேயே சற் சூத்திரர், அசற் சூத்திரர் என்ற பாகுபாடு ஏற்பட்டதெனலாம்.



1 *Page 138. Legacy of India. G. T. Garrat.*

2 *Page 412. Studies in Indian History with Special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.*

# இன்றைய வேளாளர் தோற்றம்

தமிழகத்தில் சங்ககாலத்தில் வேளாளர் என்ற பெயருடைய ஒரு வகுப்பு இல்லை எனவும், சங்ககாலத்திற்குப் பிறகு மருத நில மன்னர் குடியினர் அவரது ஈகை, கொடைப்பண்பு காரணமாய் வேளாண், வேளாண் மாந்தர், வேளாளர் என சிறப்பிக்கப் பட்டதாகவும், பின்னர் இடைக்காலச் சோழர் ஆட்சியில் ஊர்ச் சபைகளுக்குத் தலைமை தாங்கியவர் வெள்ளாளர் என வழங்கியதாகவும். வேளாளர், வெள்ளாளர் உயர்குடியினராக அந் நாளில் மதிக்கப்பட்டதால், குல உயர்வு காரணமாய் பலதரப் பட்டவரும் தம்மை வேளாளர், வெள்ளாளர் என வழங்கும் நிலை எழ, மள்ளர் குடியினரை அரச குலம் எனவும், புதிதாய் வேளாளர் என வழங்க முற்பட்டவரை நாலாஞ்சாதி வேளாளர், சூத்திரர் எனவும், அச்சூத்திரருள் ஊன் உணவு தவிர்த்து வைதீக நெறியைக் கடைப்பிடித்தவர் சற்சூத்திரர் என வழங்கலாயினர் எனவும் ஏற்கனவே கண்டோம். இந்த நாலாஞ்சாதி வேளார் தோற்றம் பற்றி ஈண்டு ஆராய்வோம்.

நாட்டில் இன்று கணக்கற்ற சாதிப் பிரிவுகள் இருந்துவரக் காண்கிறோம். இச்சாதிப் பிரிவுகள் முதன் முதல் மருத நிலத்தில்தான் தோன்றியதென ஆராய்ச்சியாளர் கூறுவர். மருத நில மள்ளர் குடியினர் உழவர்மட்டுமின்றிப் போர் மறவரும் ஆவர் என்றும், இவருக்கு உழவுதொழிலுக்கும், போர்த் தொழிலுக்கும் வேண்டிய கருவிகளைப் படைக்கும் தொழிலாளரும், உதவியாளரும் இங்கு தோன்றினர் என்றும் இவர் வேளாண் பற்றுடைய பதினெண்பர் என வழங்கியதாகவும் ஏற்கனவே கண்டோம். மருத நிலத்தைப் பயிர்த் தொழிலுக்கு கொண்டு வந்த பிறகு, அந்நில மக்கள் அண்மையிலுள்ள காட்டை அழித்து நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கினதாகப் பட்டினப்பாலை முதலிய சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. காட்டை அழித்து நாடாக்கும்போது, காட்டுவாணர் பண்டைய நாடோடி வாழ்க்கையைத் துறந்து, நாட்டு மக்களை அண்டித் தொழில் கற்றுத் திருந்தும் நிலை எழுந்தது, இது

பற்றிக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் 'பல் ஒளியர் பணிவு ஒருங்க, தொல்லருவாளர் தொழில் கேட்ப' [பட்டினப்பாலை செ. 27475] என்று கூறுவது காண்க.

### சேரிகள் தோற்றம்

மருதநில மக்கள் ஊர்கள், நகரங்கள் அமைத்து அவற்றைச் சுற்றிக் கோட்டைகள் எழுப்பி வாழ்ந்தனர். இக் கோட்டைகளுக்கு வெளியே பிற நிலத்து மக்களும், காட்டுவாணரும், பிற நாட்டாரும் மருதநிலத்து மக்களிடம் தொழில் செய்து பிழைப்பதற்காக தற்காலிகக் குடியிருப்புகள் அமைத்து அவற்றில் தங்கலாயினர். இம்மாதிரித் தோன்றிய குடியிருப்புகள் தான் சேரி என வழங்கின.

'ஏமப் பேரூர்ச் சேரியும் கரத்தும்' [தொல் பொருள் 40]

'ஊரும் அயலும் சேரியோரும்' [தொல் பொருள் 492]

'ஊரும் சேரியும் உடனியைந்து அலற் எழக்'

[அகம் 383-2]

'ஊரிற் முறையோ சேரியிற் முறையோ'

[சிலம்பு 23-161]

என்ற இலக்கிய மேற்கோள்கள் ஊர் வேறு, சேரி வேறு என்பதற்கும், ஊரை அடுத்து, சேரிகள் இருந்ததென்பதற்கும் சான்றாகும். ஊரில் வாழ்ந்தவர் தமிழர் ஆவர். சேரிகளில் வாழ்ந்தவர் தமிழரல்லாதவர் ஆவர். [அகம் 212] இவர் தமிழரை அண்டி வாழ்ந்ததால் தமிழை அரை குறையாய்ப் பேசினர். ஆதலால் இவர் பேசிய தமிழைத் திருந்தாத மொழி என உணர்த்தச் சேரி மொழி என்றனர். இதுபற்றித் தொல்காப்பியர் கூறுவதாவது;

'சேரிமொழியால் செவ்விதற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றில்
புலன் என மொழிப புலனுணர்ந்தோரே'

[தொல் பொருள் 542]

மருதநில மக்கள் வாழ்க்கை முறையும், மற்றத் திணை நில மக்கள் வாழ்க்கை முறையும் வேறுபட்டிருந்த தென்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகரும் என்பது ஈண்டு குறிப் பிடத்தக்கது.

இம்மாதிரி தமிழரல்லாதரர் ஊர், நகரங்களைச் சுற்றி வாழ்ந்ததன் காரணமாய்ப் பாண்டிய மன்னர்கள் மதுரையில் சங்கம் நிறுவித் தமிழை அவர் மத்தியில் பரப்ப வேண்டிய நிலை எழுந்தது எனலாம். பாண்டியர் சங்கம் அமைத்து, தமிழ் மொழிக்கு இலக்கணம் கண்டு அதை நாட்டில் பரப்பிய தால் பாண்டிய நாடு செந்தமிழ் நாடு எனவும், மற்றப் பகுதி கொடுந் தமிழ் நாடு எனவும் வழங்கியதாகக் கூறுவர். மேலும் வேங்கடத்திற்கு வடக்கே இருந்த நாடு, மொழிபெயர்தேயம் எனவும், அதையொட்டிய தமிழகம் அருவா நாடு, அருவா வடதலை நாடு எனவும் வழங்கியதாகவும் கூறுவர்.

மருதநில நாகரிகம் தோன்றுமுன் மருமக்கத் தாயமுறை [தாய்தான் குடும்பத் தலைவி. தகப்பன் என ஒருவரும் இரார்.] வழக்கில் இருந்ததாக அறிகின்றோம். அக்காலத்தில் மருத நிலம் தவிர்த்த இதரப் பகுதியில் நிரந்தரக் குடியிருப்புக்கள் இல்லாததால் மக்கள் நாடோடி வாழ்க்கையையே மேற் கொண்டிருந்தனர். ஒரு பெண்ணுக்கு ஒரு கணவன் என்ற முறை அவரிடம் ஏற்படவில்லை. பெண்கள் தாம் விரும்பும் ஆடவருடன் கூடிக் குழந்தைகள் பெறுவர். இக்குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு தாயையே சாரும். ஆடவர்க்கு இதில் பொறுப்பு இல்லை எனலாம். எனவே குழந்தைகளை வளர்க் கும் பொறுப்பு தாயுடையதேயாம். இவர்களுக்குத் தந்தை யார்? என அறுதியிட்டுக் கூறமுடியாது. அதைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் அக்காலத்தில் ஏற்படவில்லை எனலாம். கேரளாவில் நாயர், நம்பியார், மேனன், பிள்ளை, குருப் மற்றும் நாஞ்சில் நாட்டு வேளாளர் மத்தியில் இம்மருமக்கத் தாய முறையே சமீபகாலம் வரை வழக்கில் இருந்துவந்தது இங்கு குறிப்பிடத்தக்கது. இவைபண்டைக்கால வழக்கத்தின் எச் சமே ஆம். இவர்களைப் பத்து தகப்பன்மார் பிள்ளை [Son of Ten

Fathers] என அழைப்பது வழக்கம். பிறமலைக் கள்ளரிடமும் இப்பழக்கம் வழக்கில் இருந்ததாக தர்ஸ்டன் கூறுகிருர். [1]

இவர் பத்து, எட்டு, ஆறு, இரண்டு தகப்பன்மாரின் பிள்ளை என வழங்கியதாகத் தெரிகிறது. இப்பழக்கம் கூட்டுக் கணவன் முறை இவர் மத்தியில் நிலவியதைக் காட்டுகிறது எனலாம். தெலுங்கர் மத்தியிலும் கூட்டுக் கணவன்மார் முறை வழக்கில் இருந்ததென்பதற்குரிய அடையாளக் கூறுகள் இன்னும் காணப்படுகின்றன. தொட்டியான்கள் குடும்பத்தில் ஒரு ஆடவனுக்கு மட்டும் மணம் செய்வித்து, அப்பெண்ணை அந்த வீட்டிலுள்ள எல்லா ஆடவரும் மனைவியாகப் பாவித்து வருவதுவும், கொங்கு வேளாளர் [கவுண்டர்] சிறு பையன்களுக்கு வயது வந்த பெண்ணை மணம் முடித்து வீட்டிலுள்ள வயதுவந்த ஆடவர் அவளை மனைவியாகப் பாவிப்பதுவும், தெலுங்கரில் இன்னும் ஒரு சில பிரிவினர் மத்தியில் பெண்கள் தாம் விரும்பும் ஆடவருடன் கூட அனுமதித்து வருவதுவும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. தொட்டியான் அல்லது கம்பளத்தான் இடையே திருமணத்தின்போது அனுசரிக்கும் ஒரு பழக்கம் கவனிக்கத்தக்கது. 'தொட்டிய வகுப்பு மணமகள் அவளது கணவனின் உறவினர் மற்றும் வீட்டில் உள்ள மற்ற ஆண்களுடன் கூடி வாழவேண்டும். இம்மாதிரிக் கூடி வாழ்வது அவமானத்துக்கு உரியது என அவர் நினைப்பதில்லை. மணமகள் ஒருவேளை அவ்விதம் பிற ஆடவருடன் கூடுவதற்கு இணங்க மறுத்தால் திருமணத்தை நடத்திவைப்பவர் அப்பெண்ணை வற்புறுத்தி இணங்க வைப்பதுண்டு. [2]

'After marriage it is customary for a Tottiyan or a Kambalathan woman to co-habit with her husband's near relatives and their males and so far from any disgrace attaching to them, in consequence their priests compel them to keep up the customs if by any chance they are unwilling.' [2]

1 Page 77. *Castes and Tribes of South India. Vol. III. E. Thurston.*
2 Page 82. *Madura Manual. J. H. Nelson.*

இம்மரபுப் பெண்டிர் கணவன் உயிருடன் இருக்கும்போது மண உறவை ரத்து செய்யாமல் தனது மரபுக்குள் வேறு ஒரு ஆடவனுடன் கூடி வாழ்ந்து பிள்ளைகள் பெறுவது சர்வ சாதாரணம். சொத்துப் பாத்தியதைக்காக 4, 5 வயதுப் பெண்களைக்கூட 50, 60 வயதுள்ள ஆடவருக்கு மணம் செய்து கொடுப்பர். அம்மாதிரிப் பெண்கள் வயதிற்கு வந்தபின் தாம் விரும்பும் ஆடவருடன் நட்புக்கொண்டு வாழலாம்; குழந்தைகளும் பெறலாம். இதை ஒழுக்கக்குறைவாக இம்மரபினர் கருதுவதில்லை.

நாட்டுப்புறங்களில் தெலுங்கரில் சில பிரிவினர் இல்லங்களில் வேற்று ஆடவர் உள்ளே சென்றிருப்பதன் அடையாளமாக காலணி, அல்லது வேறு ஏதாவது பொருளை வாசற்புறத்தில் விட்டுச் சென்றால் அந்த இல்லத்தைச் சேர்ந்த ஆடவர் உள்ளே செல்வதில்லை. அனேக இடங்களில் இப்பழக்கம் இன்னும் மறையவில்லை எனலாம்.

E. Thurston says : In connection with marriage Mr. Hemingsway writes that the Tottiyans very commonly marry a young boy to a grown-up woman and as among the Kongu vellalas, the boy's father takes the duties of a husband upon himself until the boy is grown up. Married women are allowed to bestow their favours upon their husband's relations and it is said to be an understood thing that a man should not enter his dwelling if he sees another's slippers placed outside as a sign that the owner of them is with the mistress of the house [1]

காரைக்கட்டு வேளாளரிடமும் சிறு பையன்களுக்கு வயது வந்த பெண்ணைத் திருமணம் செய்து வைப்பதுவும், விருந்தினரை உபசரிக்க தம் வீட்டுப் பெண்டிருடன் உறவாட அவரை அனுமதிப்பதுவும் இவரது பண்டைக்கால பழக்க வழக்கத்தின் எச்சமே எனலாம்.

1 Page 193-94. *Castes and Tribes of South India. Vol. VII.* E. Thurston.

தமிழர் வாழ்க்கைமுறை

மருதநில மக்கள் திருந்திய நாகரிகம் எய்தி யிருந்த பழங்குடியினர். 'கல்தோன்றி மண்தோன் ருக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்தகுடி' எனவும், 'படைப்பு காலந்தொட்டு மேம்பட்டுவரும் குடி' எனவும் சிறப்பிக்கப்பட்டவர் ஆவர். பிற மக்களைத் திருத்தி நாகரிகம் எய்யச் செய்யக் காரணமாய் இருந்தவரும் ,நிரந்தரமான குடி யிருப்பும். உடைமையும், உடையவரும் இவரேயாம். இவர் மத்தியில்தான் குடும்ப வாழ்க்கை முறை [கணவன்-மனைவி-குழந்தைகள்-அடங்கியது] முதன் முதலில் ஏற்பட்டிருந்தது. குடும்பத்திற்குத் தலைவன் தகப்பனே ஆவன். அவனுக்குபின் ஆண் சந்ததியினர் வாரிசாவர். இவ்வாரிசு முறையை மக்கள் தாயம் என்பர். ஒரு பெண்ணுக்கு ஒரு கணவன் என்பதாலும், மக்கள் தாயமுறை வழக்கில் இருந்ததாலும் மருத நிலப்பெண் டிரிடமே கற்புநெறி பேணப்பட்டது. வள்ளுவர் கற்பு நெறி பற்றி உயர்வாகப் பேசுவது இம்மருதநிலப் பெண்டிரை மனத்திற் கொண்டேயாம். இம்மக்கள் மத்தியில் திருமணங்கள் நடைபெற்றதென்பதற்குச் சங்க இலக்கியங்கள் [அகம் 86, 136-221] சான்று பகரும். பிற நிலத்து மக்கள் வேற்றினத் தார் ஆனதாலும், பழக்கவழக்கத்தில் மருதநில மக்களிட மிருந்து வேறுபட்டிருந்ததாலும் அவரது பெண்டிரை மருத நிலத்தினர் மணம் செய்வது பொதுவாகத் தவிர்க்கப்பட்டது. [ நற்றிணை 45; குறுந்தொக 322 ]

பண்டையச் சேரிவாழ்நர் எங்கே ?

மருதநிலத்து ஊர் நகரங்களுக்கு வெளியே அமைந்த சேரிக ளில் வாழ்ந்தவர் மத்தியில் ஏற்கனவே கண்டதுபோல கற்பு நெறி பேணப்படாததால் இவரில் சிலர் பரத்தையர் தொழிலை மேற்கொண்டு மருதநில மக்களின் இல்லற வாழ்க்கைக்குப் பெரிதும் இடையூருய் இருந்தனர். இதற்குச் சங்க இலக்கி யங்களில் ஏராளமான சான்றுகள் உள. இம்மாதிரித் தோன் றிய பரத்தையர், விறலியர் போன்ருேர் இன்று எங்கே? மருத நில மக்களிடம் தொழில் செய்ததாகக் கூறப்படும் களமர்,

தொழுவர், விளைஞர் இன்று அதே பெயருடன் நம் மத்தியில் இல்லையே! இவர் எல்லோரும் எங்கே சென்றுவிட்டனர்? அக்காலத்தில் கோசர், மழவர், எயினர், அருவாளர், ஒளியர், யவனர், துடியர், கடம்பர், மோரியர் எனப் பல்வேறு மரபினர் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் செப்புகின்றன. இவர் இன்று நம் மத்தியில் இல்லையே! இவர் தொழில் கற்று பழைய குடிப்பெயரை விடுத்து, தொழிற் பெயரை மேற்கொண்டிருக்க வேண்டும். அல்லது இன்று வழக்கில் உள்ள ஒரு குலப் பெயரைத் தழுவியிருக்கவேண்டும். இவர் தமிழகத்தை விட்டு வெளியேறிவிட்டனர் எனக் கொள்வதற்கில்லை. இன்று நிலவும் சாதிப்பிரிவுகள் அன்று வழக்கில் இல்லை. மக்கள் குடிப் பெயரைக் கொண்டிருந்தனர். [ Tribal in character ] மருத நிலத்தில்தான் தொழில்கள் ஏற்பட்டதால் அந்நில மக்களை அண்டித் தொழில் செய்தவர் குடிப்பெயரை விடுத்து தொழிற் பெயரை மேற்கொண்டனர். இதுபற்றியே வள்ளுவர் 'பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய் தொழில் வேற்றுமையான்' என்றார்.

### சங்க காலத்திற்குப்பின் சமூக நிலை

சங்க காலத்தில் இன்று நாட்டில் நிலவும் சமயநிலை வேர்க்கொள்ளவில்லை. பல்லவர் ஆரம்பத்தில் சமணராய் இருந்து, பின்னர் சைவராய் மாறியவர். அன்று பௌத்த, சமண சமயங்கள் நாட்டில் பரவியிருந்தது. இவற்றின் செல்வாக்கைக் குலைக்க சைவ சமய எழுச்சி ஏற்பட்டது. இதற்கு ஆரியப் பார்ப்பனர் தலைமை தாங்கினர். பல்லவ மன்னர் இதற்கு ஆதரவு நல்கினர். இக்காலத்தில் பார்ப்பனர் பல்லவரால் வடக்கேயிருந்து தமிழகத்தில் குடியேற்றப்பட்டு ஆதரிக்கப்பட்டிருக்கின்றனர். உத்தரமேரூர் போன்ற இடங்களில் பார்ப்பனர் குடியேற்றம் இக்காலத்தில் ஏற்பட்டதே. உத்தரமேரூர் என்பது ஏற்கனவே உத்தரமல்லூர் என வழங்கியதாகத் தெரிகிறது. தேவதானம், பிரம்மதானம் முதலியவை பல்லவர் காலத்தில் வழங்கப்பட்டன. பார்ப்பனர் குடியிருப்புக்காகச் சதுர்வேதி மங்கலங்கள் இக்காலத்தில் தான் தோன்றின. பல்லவரால் பார்ப்பனர் தென்னகத்தில் குடி

யேற்றப்பட்டதுபற்றி டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவதாவது: 'மகத நாட்டிலிருந்து தென்னகத்தில் பார்ப்பனர் குடியேற்றப்பட்டதுபற்றி சென்னை மியூசியத்தில் செப்பேட்டுச் சான்றுகள் உள்ளன. இக்காலத்தில்தான் பார்ப்பனர் செல்வாக்கு தமிழகத்தில் ஓங்க ஆரம்பித்தது. பல்லவர் அவர்களை மிகவும் உயர்த்தினர்' 1

Dr. K. K. Pillay says: 'In the Madras museum plates there is a reference to a group of Brahmins brought from Maghada and settled in the south. It was during this period that the dominance of the Brahmins in Tamilagam became pronounced. The Pallavas exalted the Brahmins.' 1

ஆரியக் கலாச்சாரத்தை அடிப்படையாகக்கொண்டு நான்மறை, நான்கு வருணம் என்ற கருத்துக்கள் தமிழகத்தில் பரப்பப்பட்டு அவற்றை தமிழ் இலக்கியங்களிலும் இடம்பெறச் செய்தனர். சமய நூல்களில் பார்ப்பனருக்கு முதல் இடம் கொடுக்கப்பட்டிருப்பது யாவரும் அறிந்ததே. தமது உயர் இடத்தை இம்மியும் விட்டுக் கொடுக்காமல் மற்ற எல்லா மரபினரையும் பக்தர் அடியார் கூட்டத்தில் சேர்த்து ஈசன் முன்பாக எல்லோரும் சமம் எனப்படும்படி ஒரு போலித் தன்மையை மெருகிட்டு மறைத்துக் காட்டினர். சைவ சமய அறுபத்துமூன்று நாயன்மார்களில் அரசர், அந்தணர், வேளாளர், வணிகர், தவிர பல்வேறு குடி மற்றும் தொழில் பிரிவினரும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஆயனர், திருமூலர்-இடையர்; ஏனாதிநாதர்-ஈழவர்; அதிபத்தர்-நுளையர்; திருக்குறிப்புத் தொண்டர் - ஏகாலியர்; திருநாளைப்போவரர் - புலையர்; திருநீல கண்டர்-குயவர்; சிறுத் தொண்டர்-மாமத்திரர்; நேசர்-சாலியர்; கண்ணப்பர்-வேடர்; திருநீலகண்டயாழ்ப்பாணர்-பாணர்; இவர்களுள் திருநாளைப் போவார் ஆவுரித்துத் தின்னும் தீண்டப்படாதவர். குலம் தெரியாத அறுவர், அடியார்களில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

1 Page 320. Studies in Indian History with special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.

சைவ சமயத்தைப்போன்று வைணவ சமயத்திலும் பல் வேறு பிரிவினரும் ஆழ்வார்களாகச் சேர்க்கப்பட்டுளர். அவருள் திருப்பாணழ்வார் தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவர் ஆவர். ஆவுரித்துத் தின்பவர்கூட சிவனடியார் கூட்டத்தில் சேர்வதற்கு தகுதியுடையவர் என்பதற்கு

' ஆவுரித்துத் தின்னும் புலையரேனும் கங்கைவார்ச்
சடையர்க்கு அன்பராகில் அவர் தாம் நாம்
வணங்கும் கடவுளாரே '

எனவரும் திருநாவுக்கரசர் வாக்கால் விளங்கும்.

பல்லவர் ஆரம்பத்தில் சமணராய் இருந்தவர் என முன்னர் குறிப்பிட்டது நினைவிருக்கத்தக்கது. அதேபோன்று சோழ இளவரசி மங்கையர்க்கரசியை மணந்த பாண்டியன் அன்னளில் சமண சமயத்தைத் தழுவியிருந்தவன். 'மன்னன் எப்படியோ அவன் வழியே குடிகள்' என்பதற்கொப்ப பல்லவ, பாண்டியநாடுகளில் அன்று பெரும்பாலோர் சமண சமயத்தைச் சேர்ந்தவராய் இருந்திருக்கவேண்டும். திருநாவுக்கரசு நாயனரும் சமண சமயத்திலிருந்து சைவராக மாறியவர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. திருச்சி மாவட்டம் உடையார் பாளையம் காரைக்கட்டு வேளாளர், நெல்லை மாவட்டம் நீர்பூசி வேளாளர் இவர்கள் ஏற்கனவே சமண சமயத்தைச் சேர்ந்தவர் என முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இராமநாதபுரம் பகுதியில் மஞ்சப்புரத்துச் செட்டிகள் இருப்பதாகவும், அவர் தற்போது சைவ சமயத்தைச் சேர்ந்தவர் எனினும் இளையான்குடி சிவன் கோயிலுக்கு வெளிப்புறத்தில் உள்ள அம்மணசாமி என்ற சமண தெய்வத்திற்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் வழிபாடு நடத்தி வருவதாகத் தெரிகிறது. [1]

Dr. K. K. Pillay says : 'In the Ramnad Dt. there live a group of people kown as Manchappathu Chettigal. They are now Saivaits. But every Friday they offer worship for the jain deity known as Ammanaswamy housed in the outskirts of Siva Temple at Ilayankudi. They consider Ammanasamy as the ancestrial family deity. [1]

*1 Page 106. Studies in Indian History with special reference to Tamil Nadu Dr. K. K. Pillay.*

இதுபோன்று வைதீக மதங்களுக்கு மாறினவரில் அரச மரபினர் தவிர்த்து மற்றவரைப் பார்ப்பனர் நாலாவது குலத்தினர் சூத்திரர் என ஆரிய மரபினர் பாவித்து வந்துளர் என்பதுவும், பல்லவர்காலத்தில் சாதிவேற்றுமை தோன்றியது என்பதுவும் பரமேஸ்வர வர்மன் சாதிபிரிவுகள் பற்றிய சட்டங்களை அமுல்படுத்தினான் என ஏற்கனவே, குறிப்பிட்டுளதுவும் நினைவிருக்கத்தக்கது. பல்லவர் பார்ப்பன வகுப்பைச் சேர்ந்தவராக இருக்கலாம் என டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவதுவும் நினைவு கூரத்தக்கது. [1]

ஆக காஞ்சிபுரமே தமிழகத்தைப் பொறுத்தமட்டில் சாதிகள் தோற்றத்தின் உறைவிடம் எனலாம். பௌத்த, சமண, சைவ, வைணவ ஆலயங்களும், மடங்களும் இங்கு இருந்ததைப்போல் நாட்டில் வேறு எங்கும் இருந்ததில்லை என்பதை வரலாறு படித்தோர் அறிவர். இக்காலத்தில் கோயில்களில் தேவரடியார் நியமனமுறை தோற்றுவிக்கப்பட்டுள்ளது. அதன் நோக்கம் தெய்வத்திற்குத் தொண்டுசெய்வதற்குத் எனக்கூறப்பட்டாலும், ஆலயம், மடங்கள் இவற்றில் பணிபுரியும் ஆடவரின் ஏன் துறவியர், குருக்களின் சுகபோகத்திற்கே இப்பெண்டிர் பெரிதும் பயன்பட்டனர் எனலாம். சுந்தரமூர்த்தி நாயனார் பாவை நாச்சியார் என்னும் தேவரடியாளை அடைய கயிலாயத்திலிருந்து வந்ததாகப் பெரிய புராணம் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது. இம்முறையினால் நாட்டில் ஒழுக்கக் கேடுகள் மலியவும், கலப்பு இனங்கள் (அனுலோமா-பிரதிலோமா) -தோன்றவும் வாய்ப்பு ஏற்பட்டது. இக்கலப்பு இனங்கள் கோயில்கள், மடங்கள் இவற்றில் பணி செய்ய அமர்த்தப்பட்டனர். ஐரோப்பியர் இந்தியப் பெண்டிர் உறவால் உற்பத்தியான ஆங்கிலோ இந்தியச் சிறுவர்கள் கிறித்துவ நிலயங்களில் பராமரிக்கப்பட்டதுவும் ஆங்கிலேயர் அவர்களுக்கு கல்வி வசதி, உத்தியோகம் இவைகளில் வசதிவாய்ப்புகள் வழங்கி வந்ததுவும் இதனுடன் ஒப்பிடத்தக்கது,

---

1 *Page272-275. Studies in Indian History with Spl.reference to Tamil Nadu XIII Were the pallavas Brahmins. Dr. K. K. Pillay.*

அடுத்து சோழர் காலத்திற்கு வருவோம். இவர் கி. பி. 9-ஆம் நூற்ருண்டின் நடுப்பகுதிவரை நான்கு நூற்ருண்டுகள் ஆட்சிபுரிந்தவர். பல்லவர் காலத்தில் ஏற்பட்டிருந்த பார்ப் பனர் செல்வாக்கு சோழர் ஆட்சியில் தொடர்ந்து நீடித்து வந்ததாகவே அறிகிருேம். இவர் கல்வி அறிவு உடையவர், அரசு பணிகளிலிருந்து அக்காலச் சூழ்நிலையில் இவரை அகற்றுவது சாத்தியமற்றதாயிருந்தது எனலாம். எனவே வேளாண் குடியினருடன் இவரும் அரசுபணிகளில் ஈடுபட்டு வந்திருக்கின்றனர். அதோடு மட்டுமின்றிச் சமயப்பிரசாரங் களும் நடத்தி வந்திருக்கின்றனர். இக் காலத்தில் அரசு பணியில் உள்ளவர்க்கு அரசினர் அனேக சலுகைகள் வழங்கி வருவதுபோன்று, அக்காலத்திலும் இது நடைமுறையில் இருந்து வந்ததாகவே அறிகிருேம். இம்மாதிரிச் சலுகைகள் வழங்கப்பட்டதற்குக் கல்வெட்டுகள் பல சான்ருக உள. பிற் காலச்சோழரில் இரண்டாம் குலோத்துங்கன் சாதிகள், மற்றும் மறை நூல்களின் பாதுகாவலஞக இருந்ததாக ஒரு கல்வெட்டு கூறுவதை ஏற்கனவே கண்டோம். எனினும் சோழர் காலத் தில் இன்று நிலவும் சாதி வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் வழக்கில் இல்லை என்றே துணிந்து கூறலாம். இன்று தாழ்த் தப் பட்டவராகக் கருதப்படும் பறையரில் புல்லுப் பொறுக்கு கிற பறையர் என்ற பிரிவினர் [குதிரைக்குப் புல்லு இடும் காமிகண்] [1] மூன்ரும் குலோத்துங்கச்சோழன் காலத்தில் கீழாக மதிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனல் இவர் இன்று சேனைத் தலைவர், கொடிக்கால் வேளாளர், இல்லத்துப் பிள்ளைமார் எனப் பலவாறு வழங்குகின்றனர் என நாம் கருதவேண்டி யுளோம். [2]

அரிப்பர் என்ற ஒரு வகுப்பார் அன்ஞளில் கீழாக மதிக்கப் பட்டதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. [3] ஆனல் அவர்

1 *S II Vol. VII. 118. ARE 156/1906*

2 *பக். 312 மூவேந்தர் யார்? இரா. தேவ ஆசீர்வாதம்*

3 *S II Vol. VII. 118 P. 49.*

இன்று உயர்ந்த சாதியாக மாறியிருக்கவேண்டும். இன்றையத் தாழ்த்தப்பட்ட வகுப்புக்களில் அரிப்பர் என்ற பிரிவு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. அன்னாளில் பறைச்சேரி[1] பறைச் சுடுகாடு[2] தீண்டாச் சேரி[3] கம்மாளச் சேரி[4] வண்ணாரச் சேரி[5] ஈழவச் சேரி[6] தளிச் சேரி[7] பார்ப்பனச் சேரி [உத்தரமேரூர் கல்வெட்டுகள்] தலைவாய்ச்சேரி[8] எனச் சேரிகள் பல இருந்திருக்கின்றன. தீண்டாச் சேரியில் இருந்தவர் தவிர்த்து மற்றவர் தீண்டாதவராகக் கருதப்படவில்லை. இந்த தீண்டாச் சேரியில் வாழ்ந்தவர் புலையர் என வழங்கியதாகத் தெரிகிறது. சங்க இலக்கியங்களில் புலையர் இழிசினன் என்ற சொற்கள் காணப்படுகின்றன. ஆனால் இவைகளுக்கு அன்று வேறு பொருள் வழக்கில் இருந்ததாக அறிகிறோம். 'துடி ஏறியும் புலைய, எறிகோல் கொள்ளும் இழிசின.' புறம் 287 ] இங்கு புலைய என்பதற்கு செல்வ என்றும், இழிசினன் என்பதற்கு இயல்பினன் என்றும் பொருள்படும். வேறுசில இடங்களில் சிதை எரிய விடுபவரைக் குறிக்கவும் கரணலாம். 'புலையன் ஏவப் புன்மேல் அமர்ந்துண்டு' [புறம் 360.19] பெண்பாலாகிய புலத்தி என்பது துணி வெளுப்பவளைக் குறிப்பதாகத் தெரிகிறது. 'கறைசேர் வள்ளுகிர் பசைவிரற் புலைத்தி நெடிது கிசைந்து ஊட்டிய' [அகம் 387-5 6] இன்று கடைஞர் என்றால் கடைசி வருணம் என்பர். ஆனால் இச்சொல் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை எனவும், கடைசியர் என்ற சொல் இடம் பெற்றிருப்பதாகவும் ஏற்கனவே கண்டோம். பிற்காலச் சோழர் காலத்தில் புலையர் என்ற வகுப்புப் பெண்டிரை கடைஞர் என சேக்கிழார் [18 திருநாளைப் போவார் நாயனார் புராணத்தில் செ. 11] கண்டுள்ளார். ஆனால் இன்று கடைஞர் என்ற ஒரு பிரிவினர் தேவேந்திர குலத்தார் மத்தியில் இருந்து

---

(1) S II. II. No 5.
(2) S II. II. No. 3.
(3) S II. II. No. 5.
(4) S II. II. No. 5.
(5) S II. II. No. 4.
(6) S II. II. No. 5.
(7) S II. II. No. 5.
(8) S II. II. No. 6.

வருவது நாம் அறிந்ததே. எனவே முன்பு கூறியதுபோன்று கடைஞர் என்பதற்கு கடை வருணம் எனப் பொருள் காண்பது சரியன்று. அக்காலத்தில் பறையர் தீண்டாதவராகக் கருதப்படவில்லை என்பதற்குப் பல கல்வெட்டுகள் சான்ருக உள்ளன. பறையடியான் ஒருவன் திருக்கழுக்குன்றம் கோயிலில் விளக்கு எரிக்க ஏற்பாடுகள் செய்துவைத்தான் என ஒரு கல்வெட்டு கூறுகின்றது.[1] ஊர்ப் பறையன் மண்டைச் சோமநாதன் எழிசை மோகப் படைச்சன் என்பவன் முதலாம் இராசராசன் காலத்தில் கோயிலில் சந்தி விளக்கு எரித்துவரத் தானம் அளித்ததாக ஒரு கல்வெட்டு கூறுகின்றது.[2] பறை முதலிகளும்[3] இருந்திருக்கின்றனர் என்பதற்குச் சான்றுகள் இல்லாமல் இல்லை, பணிசெய் மக்களும் இருந்தனர் என மூன்ரும் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுகள்[4] செப்புகின்றன. மூன்ரும் இராசராசன் காலத்திய புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் தாலுகா கீரனூர்க் கல்வெட்டு[5] அன்னூற்றுப் பறையன் கிடாரங் கொண்ட பறையன் இருவரும் முறையே பேர் அரையன், நாடு அரையன் என்ற பட்டம் தரித்திருந்தனர் என்று கூறுகின்றது. இரண்டாம் இராசேந்திரன் காலத்திய திருச்சி மாவட்டம் கரூர் கல்வெட்டு[6] வீரராசேந்திர மங்கலப் பறையன் என்பவன் பேர் அரையன் என்றும்,அரசனுடைய விருதுப் பட்டமும் பெற்றிருந்தான் என்றும் கூறுகின்றது. ஆனால் சோழர் வீழ்ச்சி காலத்தில் தோன்றிய குறுநில மன்னன் கோப்பெருஞ்சிங்கன் ஆட்சிக்குட்பட்ட திருக்கோயிலூர் பகுதியில் பறையர் மிகவும் இழிவாக நடத்தப்பட்டதாக ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது.[7] இது கி. பி. 13-ஆம் நூற்ருண்டு ஆகும். சோழர் காலத்தில் மறவர், அகம்படியர் என்ற சாதிகள் இருந்தன என்பதற்குச் சான்றுகள் இல்லை. அகம்படி என்பது பணி செய் மக்களைக் குறிக்கும் என ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்

---

(1) S II. VIII. 31,32, 33. (2) S II. VII. 794.
(3) S II. VII. 118.
(4) ARE. 172 / 1906. ARE 157 / 1906.
(5) IPS. 198. (6) S II. II. 91. (7) S II. IX. 164.

தக்கது. பள்ளன் என்ற சாதிப் பெயர் அந்நாளில் ஏற்படவில்லை. இடையரில் பள்ளன் கூத்தன், பள்ளன் கிழான் என்ற பெயர்கள் தாங்கியவர் இருந்தனர் என முதலாம் இராசராசனுடைய கல்வெட்டு [1] கூறுகின்றது. ஈழவர், பார்ப்பனரின் சதுர்வேதி மங்கலத்திலுள்ள தென்னை மரங்களிலிருந்து கள் இறக்கக்கூடாதெனத் தடை விதிக்கப்பட்டிருந்தனர். [திருவாலங்காடு செப்பேடு.]

கோயில் மடங்கள் இருந்த இடங்களில் ஒழுக்கக்கேடுகள் தோன்றின என ஏற்கனவே கூறியது நினைவிருக்கத்தக்கது. இடைக்காலச் சோழர் ஆட்சியில் சோழ நாட்டில் 72 பெருங் கோயில்கள் எழுந்தன. சிறு ஆலயங்கள் எண்ணிக்கைபற்றிக் கூறுவதற்கில்லை. இக்கோயில்களில் ஊழியம் பார்க்க ஏராளமான பணியாளர் நியமனம் பெற்றிருந்தனர். தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்தில்மட்டும் 609 பணியாளர் இடம்பெற்றிருந்தனர். இவரில் 400 பேர்கள் நடன மாதர் ஆவர். இந்த நானூறு பேர்களுக்கும் வீடுகள் கட்டி வழங்கப்பட்டிருக்கின்றது. இக்குடியிருப்புகள்தான் தளிச்சேரி என வழங்கியது. நடன மாதர் தவிர நடன ஆசிரியர், பாடகர், குழல் ஊதுவோர், மேளக்காரர், தாளம் போடுவோர், ஒத்தி ஊதுவோர், ஆரியம் பாடுவோர், தேவாரம் பாடுவோர், பெரிய மேளம் வாசிப்போர், சங்கு ஊதுவோர், பக்க வாத்தியக்காரர், காந்தர்வ சங்கீதம் இசைப்போர், தப்புக் கொட்டுகிறவர், பாடகர்கள், திருவாய் கேள்வி, வண்ணார், குயவர், நாவிதர், தையற்காரர், தச்சர், விளக்குப் போடுபவர், பல்லக்குத் தூக்குபவர், புரோகிதர், கணக்கர், கோயிற் மேற்பார்வையாளர் எனப் பல்வேறு வகை ஊழியர் இடம்பெற்றிருந்தனர். இதுபோன்று மற்ற எல்லா ஆலயங்களிலும் பணியாளர் ஏராளமானவர் நியமனம் ஆகியிருந்தனர் என அறிகிறோம். [2] பண்டாரஞ் செய்ய பிராமணரையும், திருப்பரிசாரஞ் செய்ய மாணிகளையும் கணக்கெழுத கர்ணத்தார்களையும் இராசராசன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு நியமித்ததாக ஒரு கல்வெட்டு கூறுகின்றது. [3]

---

*1* S II. 11. 95.

*2 Page 274. Ecconomic Condition in South India 1000—1500 A. D. Vol. I. K. Appadurai.*

*3 பக். 101. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு இரா. நாகசாமி.*

இம்மாதிரிக் கோயில்கள், மடங்கள் உள்ள இடங்களில் தோன்றிய கலப்பினங்களுள் உயர் வகுப்பு ஆடவர்க்கும் தாழ்ந்த வகுப்புப் பெண்டிற்கும் பிறந்தவர் அனுலோமா எனவும், தாழ்ந்த வகுப்பு ஆடவர்க்கும் உயர் வகுப்புப் பெண்டிற்கும் பிறந்தவர் பிரதிலோமா எனவும் வழங்கினதாகத் திருவாரூர் கோயில் கல்வெட்டு [1] செப்புகின்றது. மூன்றும் குலோத்துங்கச் சோழன் காலத்திய கல்வெட்டு ஒன்றில் இவ்வூர் பணிசெய் மக்களும், உழவு குடி மக்களும் எனக் கண்டுளது காண்க. [2]

### வேளம்

இடைக்காலச் சோழர் ஆட்சியில் போரில் கைதுசெய்யப் பட்டவர் வேளமேற்றப்பட்டனர் என கல்வெட்டுகள் மூலம் அறிகின்றேம். உய்யகொண்டான் தெரிஞ்ச மஞ்சனத்து வேளத்துக் கைக்கோளன் கூத்தன் வீமநாதன் [3] [முதற் குலோத்துங்கச் சோழன் காலத்தியது.] பாண்டி வேளத்து இருக்கும் இடையன் [4] வேளத்து இருக்கும் இடையன் காத்தன் [5] கிழானடிகள் வேளத்துப் பெண்டாட்டி [6] மதுராந்தகச் சுந்தர சோழன் வேளத்துப் பெண்டாட்டி கள்ளச்சி [7] [புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் தாலுகா கொடும்பாளூரில் உள்ளது] 'தஞ்சாவூர் மஞ்சனத்துவேளத்து' [8]

வேளம் என்பது சிறைபிடிக்கப்பட்டவர் தங்கியிருக்கும் இடம், அரண்மனை ஊழியம் பார்ப்பவர் குடியிருக்கும் இடம் என இருவகைப்படும் என்பர். இந்த வேளங்களிலிருந்த

---

1 *ARE 558 | 1904.*
2 *ARE 172 | 1906.*
3 ARE. 147 / 1906.
4 *பக். 214. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு. இரா. நாகசாமி*
5 *ARE 488 | 1904.*
6 *ARE 488 | 1904.*
7 IPS 82
8 ARE 190 / 1931.

வரின் வழிவந்தோர் அரசியல் அதிகாரிகளாகவும் படைத் தலைவர்களாகவும் இருந்தனர் என்றும், ஆனால் இவரது எண்ணிக்கை மிகவும் குறைவு என்றும் ஒரு கல்வெட்டு குறிப்பிடுகின்றது. [1]

'The children born and bred in velams seem to have formed a normal recruiting ground for the army though they could have formed a small proportion. [1]

கரணத்தார்

கோயில்களுக்குக் கணக்கெழுதக் கரணத்தார்களை சோழ மன்னர் காலத்தில் நியமித்ததாக ஏற்கனவே கூறியது நினைவிருக்கத்தக்கது. இக்கரணத்தார்பற்றி டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவதைக் காண்போம்: 'கரணர் என்ற வகுப்பு வைசிய ஆடவரும் சூத்திரரும் கலந்து பிறந்தவரெனப் புருஷத்தர் புராணம் குறிப்பிட்டுள்ளது. கரணர் சாதி பற்றி தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளில் குறிப்புகள் காணப்படுகின்றன. திருக்கோயில்களில் கணக்கரும், பேரவைகளின் கணக்கரும் இவர்களிலிருந்தே தேர்ந்தெடுக்கப்பட்டனர். தக்காணத்தில் வடதிசை, மேற்திசை தாயஸ்தர்களைச் சூத்திரர்களாக ஸ்மிருதிகள் கருதின. அவர்கள் எழுத்தாளர் தொழிலும், மற்ற அலுவல்களும் செய்து வந்தனர்.' [2] தமிழகத்தின் வட மாவட்டங்களில் கர்ணீகர் என்ற வகுப்பு இருந்துவருவது கண்கூடு. இவர் பெரும்பாலும் கர்ணம் வேலை பார்த்து வருகின்றனர். பிள்ளை என்ற குலப்பட்டம் தரிக்கின்றனர். கர்ணீகர், சீர்கணீகர், சாடு கர்ணீகர், சுண்ணாம்புக் கர்ணீகர், கைகட்டிக் கர்ணீகர், சோழி கர்ணீகர் என ஆறு பிரிவினராய் இருக்கின்றனர். இவருள் ஊன் உணவு எடுப்பவரும் உண்டு; அதைத் தவிர்ப்பவரும் உண்டு. தென் மாவட்டங்களில் கர்ணீகர் என்ற வகுப்பு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. பார்ப்பனர் தவிர்த்து இங்கு கரணம் வேலை பார்ப்பவர் பெரும்பாலும் வெள்ளாளர் (பிள்ளை, முதலி) ஆவர்.

1 *ARE 627 / 1909. Page 228. The Cholas. Vol. II. Part I. K. A. Neelakanda Sastri.*

2 *பக். 111. தென்னிந்திய வரலாறு. டாக்டர் கே. கே. பிள்ளை.*

கைக்கோளர்

கைக்கோளர் என்ற வகுப்பு இடைக்காலத்தில் தோன்றியது. இதன் தோற்றம்பற்றி எம். சீனிவாச அய்யங்கார் கூறுவதைக் காண்போம்: 'கைக்கோளர் என்றும், வீரபாகு கோத்திரம் என்றும் பூணூல் தரித்து உயர்ந்த சாதி எனக் கூறிவரும் நெசவாளர் கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன்பு நெசவுத் தொழில் புரியும் பறையரில் ஒரு பிரிவினராகிய கோலியப் பறையரைப்போன்று நெசவுத் தொழில் புரிந்துவந்த எயின மரபினரே, இவரில் ஒரு சாரார் பூணூல் தரித்துக்கொண்டு உயர் சாதி எனப் பாராட்டி வருகின்றனர்.' 1

'The Kaikolas who trace their descent from Virabahu one of the nine commanders of God Subramanya seem to have been originally before the 10th century A. D. Eyina weavers like the Koleya Parayas though some of them have recently caught the infection of wearing the sacred thread to claim equal position with high castes.' 1

அவர் மேலும் கூறுவதாவது: 'முதன் முதல் கைக்கோளர் என ஒரு தனிச் சாதி இருந்ததாக கி. பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த காஞ்சீபுரம் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது. இவர்கள் ஒரு தனி வகுப்பாகக் கருதப்பட்டது கி. பி. 11 முதல் கி. பி. 14-ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலமேயாம். கி. பி. 1150 வாக்கில் குலோத்துங்கச் சோழனிடம் இம்மரபைச் சேர்ந்த ஒட்டக்கூத்தன் செல்வாக்குப் பெற்றிருந்ததால் இக்காலத்தில் இம்மரபும் செல்வாக்குப் பெற்றது என்பர். கம்மாளர் பூணூல் தரிக்கும் உரிமை வழங்கப்பட்டதற்குச் சில ஆண்டுகள் கழித்து இவரது நிலை உயர்ந்திருக்கவேண்டும்.' 2

---

*1 Page 82. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

*2 Page 83. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

'Since the earliest mention of Kaikolas as a caste, the same is found in Conjeevaram inscriptions of the fourteenth century. It is highly probable that the class of weavers were recognised as a distinct caste of some standing between the eleventh and the fourteenth century when the greatest kaikolar poet ottakkoothar commanded great influence in the court of kulothunga chola in 1150 A. D and it happened probably a few years after the Kammalas were granted the privilege of wearing the sacred thread.' [1]

முதலாம் குலோத்துங்கன் காலத்திய கி. பி. 1099-ஆம் ஆண்டு தென்னாற்காடு மாவட்டக் கல்வெட்டு ஒன்றில் யாம்பன் வீரபத்ரபிள்ளை என்ற கைக்கோளன் பெயர் பொறிக்கப் பட்டுளது. [2]

விசயநகர ஆட்சியில் இக்கைக்கோளர் கோயில்களுக்கு அருகாமையில் வீடுகள் அமைத்து குடியேற்றப்பட்டும், அவரது மரபுப் பெண்டிர் கோயில்களில் தேவரடியாராகவும். ஆண்கள் கணக்கர் மற்றும் பணியாளராகவும் நியமனம் பெற்றனர் எனவும் அறிகின்றோம். [3] கைக்கோளர் கோயில்களில் திருவாசகம், தேவாரம் ஓதும் பணியில் ஈடுபட்டனர் என்பதாக வும், அவர்கள் வரி இன்றித் தறிவைத்துக்கொள்ள அனுமதிக் கப்பட்டதாகவும் ஒரு கல்வெட்டு கூறுகின்றது. [4] இப்பணியைச் செய்தவர் பிடாரர் என அழைக்கப் பட்டிருக்கின்றனர். காஞ்சிபுரம் கோயிற் கல்வெட்டு ஒன்றில் கைக்கோளர் கோயிலில் ஆடகராகவும், பாடகராகவும் நிய மனம் பெற்றதாகக் கண்டுள்ளது. 'முதன்மையும் அடைப்பும் தேவர் அடிமையும், கைக்கோள்மையும் தாங்கள் நின்ற அடைவுகளிலே விற்றும் ஏற்றிவைத்தும் கொள்ளக்கடவர் [5] புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் தாலுகா

1 *Page 83. Tamil Studies. M. Srinivasa Ayyangar.*

2 *S II Vol VII-921]*

3 ARE 319-1911. 4 ARE 486—1937-38. 5 S II. I-122.

குடுமியான்மலைக் கோயில் கல்வெட்டு ஒன்றில் கோயில் கணக்கர் கைக்கோளரும், இக்கோயில் தேவரடியாரில் துக்கை யாண்டார் மகள் நாச்சி தேவகன்மியர், கோயிற் கணக்கர் கைக் கோளரும் எனக் கண்டிருக்கின்றது. [1] காஞ்சிபுரம் பகுதியில் புதிதாய் தோன்றிய கைக்கோள வகுப்பார் விசய நகர ஆட்சி காலத்தில் பல்லக்கு, சங்கு உபயோகிக்க உரிமை கள் வழங்கப்பட்டுப் பின்னர் பிற பகுதிவாழ் கைக்கோளருக் கும் இவை வழங்கப்பட்டதாக கி. பி. 1487-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று செப்புகின்றது. [2] விசயநகர ஆட்சியின்போது கோயில் மற்றும் அரசு பணியில் கைக் கோளர் உதவினதாகவும் அவர்கள் கோயில் மட விளாகங் களில் குடி இருந்ததாகவும் ஏ. கிருஷ்ணசாமி கூறுகிறார். [3]

'The Temples and administration seem to have been directly under the supervision of Kampanna and his officers carried out his orders effectively. In this task Kampanna and his officers were helped by the Kaikolas who were living in Madavilagarms of Temples. [3]

ஊர்கள் தோறும் கைக்கோளருக்கு என தனித் தெருக்கள் அமைந்திருந்தன. [4] இவர்கள் ஊரில் புதிதாய்க் குடியேறியது பற்றிக் கல்வெட்டுச் சான்றுகள் உண்டு[5] இவருக்குச் சில சிறப் புரிமைகளும் வழங்கப்பட்டிருக்கின்றன. [6] இவருக்கு முதலி என்ற பட்டம் வழங்கிற்று. [7] தேவரடியாரில் ஒரு பிரிவினர் இக்குலத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். [8]

---

1 IPS 367. 2 ARE. 473-1921

3 *Page 42. The Tamil Country under Vijayanagar. Dr. A. Krishnasamy.*

*PIHC. 1945. Proceedings of Indian History Congress 1945.*

4 Epi Report 319/1911

5 Epi Report 207/29-30

6 Epi Report 162/18

7 Epi. Report 292/28-29

8 Epi. Report 276/28-29.

நாயக்கர்கால சமூக நிலை

விசயநகரம் அதைத் தொடர்ந்த நாயக்கர் ஆட்சியில் தெலுங்கரில் தொட்டியர், கம்மவார், வடுகர், ரெட்டி, பார்ப்பனர், சக்கிலியர் என்பவர் திரள் திரளாய்த் தமிழகத்தில் குடியேறினர். ஆட்சியாளர் தெலுங்கராய் இருந்ததால் தமிழகத்தில் இருந்தவரில் அரசுபணியில் ஈடுபட்டுத் தெலுங்கரைஅண்டிப் பிழைத்தவர், அவரது [தெலுங்கர்] பழக்க வழக்கங்களைப் பின்பற்றலாயினர். தீபாவளி, நவராத்திரி முதலிய பண்டிகைகளை இங்குள்ளோர் கொண்டாட ஆரம்பித்தனர். தமிழ் வேந்தர் காலத்தில் நன்மை துன்மைச் சடங்குகள் நடத்தி வைக்கப் பார்ப்பனரை அமர்த்தவில்லை என்பது இதனால் தெளிவு. நாயக்க மன்னர் அவரைப் பின்பற்றிப் பாளையப் பட்டுகள் மற்றும் அரசியல் தலைவர்கள் அரசு பணி செய்வோர் அனைவரும் நன்மை துன்மைச் சடங்களுக்கு வள்ளுவப் பண்டாரத்திற்குப் பதிலாய் தெலுங்குப் பார்ப்பனரைக் குருவாகக் கொண்டனர். படைத் தொழிலில் தெலுங்கருக்கு உதவியாக ஈழத்திலிருந்து சிங்களவரில் ஒரு சாராரை வரவழைத்தனர் எனத் தெரிகிறது, மறவருள் குறிப்பாகச் செம்பி நாட்டு மறவர் இவராயிருக்கலாம் என யூகிக்க இடமுளது. கி. பி. 11-ஆம் நூற்றூண்டுக்கு முன்பு இன்றைய மறவர் தமிழகத்தில் இருந்தனர் என்பதற்குச் சான்றுகள் இல்லை என்றே தெரிகிறது. வணிகத் தொழிலில் ஈடுபட கோமுட்டி, பேரிச் செட்டி, பலிஜா என்ற வகுப்பார் தெலுங்கு நாட்டிலிருந்து தமிழகத்தில் குடிபோந்தனர். நெசவுத் தொழிலினிமித்தம் சாலியர், பட்டு நெசவாளர் வடக்கேயிருந்து வரவழைக்கப்பட்டனர். மேலும் அரசு பணிகளில் உதவி செய்யத் தொண்டை மண்டலப் பகுதியிலிருந்து ஒரு சாரார் தென் தமிழ் மாவட்டங்களிலும், யாழ்ப்பாணத்திலும் குடியேற்றப்பட்டனர். இவர் அன்று காரைக்காட்டார் என வழங்கிப் பின்னர் காரைக்கட்டுப் பிள்ளைமார், கார்காத்த வேளாளர் எனப் பெயர் மாற்றம் பெற்றதுபற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத் தக்கது. இங்கு முன்பு கிராம அதிகாரிகளாக இருந்த பண்டைய வேளாண் குடியினரையும் பொற்கொல்லரையும் அகற்றிவிட்டுப் பார்ப்பனர் அமர்த்தப்பட்டதாக விசயநகர மன்னன் முதலாம் அரிகரன் காலத்திய மாயூரம் தாலுகா கோமல் சாசனம் கூறுவதாகத் தெரிகிறது. [1]

1 **Page 254. History of South India. K.A. N.**

விசயநகர மன்னன் கிருஷ்ணதேவராயனிடம் அமைச்சனு யிருந்து, பின்னர் மதுரையில் விசுவநாத நாயக்கனிடம் தளவா யாகவும், முதலமைச்சனுகவும் பணிபுரிந்த அரியநாயகம் தன் மரபினரைச் செங்கற்பட்டுப் பகுதியிலிருந்து தென்மாவட்டங் களில் குடியேற்றி ஆதரித்தான் என்பது 'அரியநாயகம் முதலியாரவர்கள் தொண்டைமண்டலம் காஞ்சீபுரம் சீமையி லிருந்த பெருநாட்டிற் உறவு முறையாரிற்...... அவர்களை சோழவந்தானிலே... கொட்டகை போட்டுக் கொடுத்து அதில் முன்னூறு வீடுகட்டிக் கொடுத்து, அதிலிருந்த உறவின் முறையாருக்கு வெற்றுழில் செய்வதற்கு வெள்ளாளப் பிள்ளை வீரக்குட்டியான் முதல் பெருங்கொல்லன் தச்சன் உட்பட பதினெட்டுத் தொழிலாளிகளையும் கையிநீட்டுப் பறையன் கலிலினைப் பறையனையும் பிரத்தியேகமாய்க் கொண்டுவந்து சுபசீவனங்களாகச் செய்விச்சுக் கொண்டிருக்க.'[1]

'அப்பால் திரிசிபுரம் கோட்டை, மதுரைக் கோட்டை, தஞ்சாவூர்க் கோட்டை, சீரங்கப்பட்டினம் கோட்டை, ராய வேலூர்க் கோட்டை, பாளையங்கோட்டை முதலாகிய கெடிய ஸ்தலங்களில் கோட்டைகளும் கட்டிவைத்து தங்கள் உறவின் முறையாருக்கு சோழகுலாத்தான் நகரி, திருமங்கலம், புத்த னேரி முதலாகிய கிராமங்களில் இரண்டாயிரம் குடும்பத்துடன் வீடு வாசல் விவசாயத்துடன் இருக்கச் சொல்லி விட்டுக் கொடுத்து.'[2]

என்ற மேற்கோள்களால் புலனுகும்.

தெலுங்கர் ஆட்சியில் பண்டைய வேளாண்மரபினரிட மிருந்து நில உடைமை பறிமுதல் செய்து, அரசுடைமையாக்கி பாளையப்பட்டுகளுக்கும், அரசியல் அதிகாரிகளுக்கும், பார்ப் பனருக்கும், அரியநாயகம் அழைத்துவந்து குடியேற்றிய அவனது உறவினர்க்கும் வழங்கப்பட, பண்டைய வேளாண் மரபினர் கொத்தடிமை, பண்ணையாள் நிலைக்கு உள்ளாயினர்

---

*1 Page 118. William Taylor Collections Vol. II. 1935.*

*2 Page 116. William Taylor Collections Vol. II. 1935.*

என முன்னர்க் குறிப்பிட்டுள்ளது அறிந்ததே. தெலுங்கர் ஆட்சியில் உழவர் சமூகம் நசுக்கப்பட்டது என்பது வரலாறு படித்தோர் அறிவர். இவரது பதினெண் குடியைச் சேர்ந்த பஞ்சசாதி என வழங்கும் தச்சர், கொல்லர், கற்கொல்லர். தட்டார், கன்னார் வகுப்பினரும் பெருந் தொல்லைகளுக்கு உள்ளாக்கப்பட்டனர் என அறிகின்றோம். இந்த ஐந்து பிரிவினரும் ஒன்று சேரக்கூடாதென நாயக்கர் காலத்தில் தடை விதிக்கப்பட்டதாக ஒரு கல்வெடடு கூறுவது [1] காண்க.

தெலுங்கு நாட்டிலிருந்து பல்வேறு பிரிவினரும் கூட்டம் கூட்டமாய்த் தமிழகத்தில் குடியேறவும், இங்குள்ள பண்டைய வேளாண்மரபினரும், அவரை அண்டி வாழ்ந்தவரும் அடக்கப்படவும், இடைக்காலத்தில் புதிய குலங்கள் பல தோன்றவும், தமிழகத்தில் சாதிக் குழப்பம் ஏற்படலானது. பலதரப்பட்டவரும் தம்மை வலங்கை, இடங்கை என இரு பிரிவாக வகுத்துக் கொண்டு, ஒவ்வொரு பிரிவும் தம் தம் பிரிவுதான் உயர்ந்தது எனவும் கிளர்ச்சிகள் செய்து, தமக்கெனத் தனி விருதுகளும், கொடிகளும், சிறப்புக்களும் வேண்டுமென அரசிடம் வேண்டிப் பெற்று வந்திருக்கின்றனர். இதில் ஒரு பிரிவினர்க்கு வழங்கப்பட்ட உரிமையை மற்ற பிரிவினர் தங்களுக்கும் உரியதெனப் பாராட்ட எத்தனிக்க, இரு பிரிவினர்க்கும் இடையே கலவரங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

மேலும் ஒவ்வொரு சாதியும் தங்கள் தங்களுக்கு உயர்வு தேட புராணக் கதைகளையும், மற்றும் இலக்கியங்களையும் படைத்திருக்கின்றன. ஏற்கனவே கூறியது போன்று புதிதாய் தோன்றிய நாலாஞ்சாதி வேளாளர் தங்களுக்கு ‘ஏரெழுபது’ ‘திருக்கை வளக்கம்’ ‘வேளாளர் புராணம்’ சதகங்கள் முதலிய நூல்களைத் தோற்றுவித்திருக்கின்றனர். இந்த நூல்களில் முன்னவை இரண்டும் கம்பனால் இயற்றப்பட்டதென வாதிப்பர். ஆனால் கம்பனின் கவித்திறனை இதில் காண்பதற்கில்லை. ஏரெழுபதில் உழவரை இராமாயணத்தில் கண்டது

---

1 ARE. 378 / 1916.

போன்று மள்ளர் எனச் சுட்டாமல் பெருக்காளர், காராளர் என்றே கண்டிருப்பதால் இது புதிதாய்த் தோன்றிய நாலாஞ் சாதி வேளாளர்க்கு உயர்வுதேட வேருெரு புலவரால் புனையப் பட்டதென்பது தேற்றம். பள்ளி வகுப்பில் தம்மைப் படை யாச்சி எனவும், வன்னிய குல சத்திரியர் எனவும் கூற முற் பட்டனர். தம் கூற்றுக்கு ஆதாரமாக ‘ சிலை எழுபது ’ என்ற ஒரு நூலைத் தோற்றுவித்தனர். ஈழவர் என்றும், பின்னர் சாணூர் என்றும், தற்போது நாடார் என்றும் வழங்குபவர் ‘ வலங்கை மாலை ’ ‘ சாணூர் குல மரபு காத்தவர் ’ ‘ சாணூர் விசர்ப்ப விஞவிடை ’ ‘நாடாரும் நாயக்க மன்னரும் ’ என்ற நூல்களையும் செங்குந்தர் என்று தம்மை உயர்வாகக் கூறி வரும் கைக்கோள நெசவாளர் ‘ ஈட்டி எழுபது ’ என்ற நூலையும், மறவர் ‘ வான் எழுபது ’ என்ற நூலையும், சேனைத் தலைவர் ‘ சேனைக் குலத்தார் பட்டயம்,’ ‘ சேனைத் தலைவர் மரபு காத்தல் ’ என்ற நூல்களையும் எழுதுவித்தனர். வைசிய புராணம், கருணீகர் புராணம் என்ற நூல்களும், இக்காலத்தில் தோன்றின.

மேலும் தேவேந்திர குலத்தாரை இழிவுபடுத்த நெல்லு வகையை எண்ணினுலும் பள்ளுவகையை எண்ண முடியாது என்ற பழமொழிக்கொப்ப, கணக்கற்ற பள்ளு நூல்களையும் தோற்றுவித்தனர் என்பதுவும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தில் சங்க காலத்தில் மக்கள் திணை நிலையாகவும், மருத நிலத்தில் மட்டும் தலைமக்கள் தவிர்த்து மற்றவர் தொழில் மக்களாகவும் பிரிந்திருந்தனர் எனவும், அக்காலத்தில் தமிழரல்லாத காட்டு வாணரும், வேற்று நாட்டினரும் இருந் தனர் எனவும், பின்னர் அவரில் பலர் பண்டையக் குடிப் பெயரை விடுத்து ஏதோ ஒரு தொழிற் பெயரோ அல்லது குலப் பெயரோ மேற்கொண்டனர் எனவும், களப்பிரர் இடை யூட்டாலும், பல்லவர் காலத்தில் வைதீக சமயங்களின் தோற் றத்தாலும் சமுதாயத்தில் பல மாற்றங்கள் ஏற்பட்டு இறுதி யாய் தெலுங்கர் ஆட்சியில் சாதிக் குழப்பம் ஏற்பட்டதாகவும் ஏற்கனவே கண்டோம். தெலுங்கர் காலத்தில் இந்தச் சாதி களை ஒழுங்குபடுத்தும் முகத்தான் சோழர் காலத்திலேயே

இப் பிரிவுகள் தொன்று தொட்டு இருந்து வந்ததாகக் காட்டவோ என்னவோ, சோழன் பூர்வபட்டயம் என்ற ஒரு நூலை இயற்றியுள்ளனர். சாதிகள்பற்றி அந்நூலில் கண்டுள்ளதாவது :

'காமாக்ஷி பாதத்தில் வைத்துப் பாத சரணம் பண்ணியெடுத்துவந்து பட்டி வாசித்தான். பட்டி வாசித்தபடி மூவர் இராசாக்களும் அந்தப் பட்டி விபரங்கண்டு இப்புவனத்தில் குலம் வகுத்தார். குலம் வகுத்த நாள் விபரம்... கசுயுகச சுகாத்தம் ஆயிரத்திநானூற்றி நாற்பத்திநாலுக்கு மேல் செல்லா நின்ற சுக்கிர வருஷம் வைகாசி மாதம் பத்தாம் தேதி சோமவாரம் பூர்வ பக்கத் தசமியினுள். காஞ்சிபுரத்துக் கச்சி ஏகாம்பரர் காமாச்சி பாத சன்னிதிவாசலில் கச்சி வீரன்மகன் கச்சிமுத்து வீரப்பன் ஆதிபூருவச் செப்பேட்டுப் பட்டயத்தி லுள்ளபடி, தன்கைவிபரப்பட்டியிலுள்ளபடி வாசித்துக் காண்பித்தபடி வீரசோழன், உலாராசச் சேரன், வச்சிராங்கப் பாண்டியன் இந்த மூவர் இராசாக்களும் கேட்டு அந்தக் கைவிபரப் பட்டியிலுள்ள இப்புவனத்தில் பதினெண் சாதி குல வகுப்புங் கண்டு தொன்னூற்றெட்டுச் சாதியாய் வகுத்தார். வகுத்தபடி விபரங்காண்க. பதினெண் பாஷைக்கும் பதினெண் சாதியாகவும், இப்பதினெண் சாதியும் தொண்ணூற்ருறு சாதியாய் வகுத்த விபரங்காண்க. பிரும சாதி, சத்திரிய சாதி, வைசியசாதி, சூத்திர சாதி, ஆக சாதி வருணம் 4 ஒரு வருணம் 4 சாதியாகவும், சாதி நாலுக்கும் ஒரு சாதிக்கு ஆறு சாதியாகவும் ஆக வருணம் நாலுக்கும் தொண்ணூற்ருறு சாதியாகவும் இதன் கீழ்ப்படி பறையன் சாதி, மாதிகன் சாதி ஆக சாதி தொண்ணூற்றெட்டு சாதியாய் வகுத்த விபரங் காண்க.' 1

வைதீக மதங்களில் ஆரியப் பார்ப்பனருக்கு உயர் இடம் வழங்கப்பட்டிருந்ததாலும், தெலுங்கு மன்னர் வைதீகப்பற்று நிரம்பியவர் ஆனதாலும், அரசை அண்டிப்பிழைத்தவரும்,

1 பக்கம் 42-43. சோழன் பூர்வபட்டயம். தமிழக அரசு வெளியீடு.

கோயில், மடங்கள் இவற்றில் பணிசெய்தவரும் தம்மை ஆரிய நான்கு வருணங்கள் ஏதாவது ஒன்றினுள் இணைத்துக்கொள்ள முயன்று வந்திருக்கின்றனர். இக்காலத்தில் தமிழ் அந்தணர் தமது நிலையை இழந்து தீண்டாதவராக மாறினர். அரச மரபினராகிய தேவேந்திர குலத்தார் பள்ளர் எனவும், கீழ் சாதி எனவும், தீண்டாதவர் எனவும் வழங்கும் நிலை எழுந்தது. தமிழரில் வைசியர் என்ற ஒரு மரபு இல்லை. எனினும் வணிகத் தொழிலில் ஈடுபட்ட பல்வேறு பிரிவினரும் தம்மை சிரேஷ்டர் என்றும் செட்டி என்றும் வைசியர் என்றும் ஒரு தனி சாதியாகக் கருதலாயினர். அரசாங்கம், கோயில், மடங்கள் இவற்றில் தொழில் புரிந்தோர் தம்மை நாலாஞ் சாதி வேளாளர், சூத்திரர் என வழங்கலாயினர். இன்றைய வேளாளர் பிரிவுகளை நாம் பார்க்கும்போது இவரனைவரும், காலப்போக்கில் பல்வேறு பிரிவுகளிலிருந்து தம்மை நாலாங்குலம், சூத்திரர் என்ற பொருளில் வேளாளர் என வழங்கியவர் என்பது தேற்றம். பின்னர் ஆங்கிலேயர் ஆட்சியில் பார்ப்பனரல்லாதாரில் [இசுலாம், கிறித்துவம், புத்த, சமண மதங்களைத் தழுவியவர், தாழ்த்தப்பட்டவர் தவிர] எல்லாப் பிரிவினரையும் சூத்திரர் என வழங்க முயற்சித்தபோது, ஊன் உணவு தவிர்த்தவர் குல உயர்வுதேட தம்மைச் சற் சூத்திரர் என வழங்க முற்பட்டனர். டாக்டர் கே. கே. பிள்ளை இதுபற்றிக் கூறுவதாவது: ' சூத்திரர்பற்றிய குறிப்பு முதன் முதலில் ஆறுமுக நாவலர் ' எழுதிய பெரிய புராண உரையில் காணப்படுகின்றது. அவர் நாலாவது வருணத்தைச் சற் சூத்திரர் என்கிறார். சங்க இலக்கியங்களாகிய பரிபாடல், நான்மணிக் கடிகை முதலிய நூல்கள் வேளாளரை விவசாயிகளாகவும், நிலக்கிழாராகவும் கண்டுள்ளன அவரை சூத்திரர் எனக் கொள்ளவில்லை.'[1] [குறிப்பு சூத்திரர் என்னும் பெயர் தமிழ் நிகண்டுகளிலும், பெரிய புராணம், மற்றும் சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை, மற்றும் சில பிற்கால இலக்கியங்களிலும், இடைக்கால கல்வெட்டுகளிலும் இடம் பெற்றிருப்பது ஈண்டு நினைவு கூரத் தக்கது.]

---

*1 Page 412. Foot note 15. Studies in Indian History with special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.*

Dr. K. K. Pillay says: 'The earliest reference in Tamil literature of Sudras is in the commentary to Periya puranam of Arumuga Navalar who speaks of the fourth class as sat-Sudras. The Sangham works like Paripadal and Nanmanikkadigai state that the Vellalas are agriculturists and land-owners but they do not describe them as Sudras.' [1]

**வேளாளர்பற்றிய கல்வெட்டுகள்**

வேளாளரில் பல்வேறு பிரிவினரும் இடம் பெற்றிருப்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் இருக்கக் காண்கிறோம். முதலாம் குலோத்துங்கச் சோழன் காலத்தியக் கல்வெட்டு ஒன்றில் பூவளூர் தலைவனும் வைஷ்ணவனுமான நல்ல சூத்திரரில் முதன்மையான சோழன் மந்திரி மாவிருஞ்சோலை என்று கண்டுள்ளது. [2] விக்கிரம சோழன் காலத்திய திருமுருகன் பூண்டிக கல்வெட்டில் வெள்ளாளன் மாப்புள்ளிகளில் பறையன் ஆனதனபாலன் என்று கண்டுளது [3] வீரராசேந்திர சோழன் காலத்தில் மலைநாட்டைச்சேர்ந்த விழுப்புரம் வெள்ளாளனை காமிண்டன் என்று கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. [4] ஆதித்த சோழன் காலத்தில் ஈசானமங்கலத்து வெள்ளாளன் கங்கப் பெருமானடி அரிஞ்சகுடி வெள்ளாளன் புழலயன் என்பவன் குறிக்கப்பெறுகிறன். இவன் தஞ்சாவூர் மடிகை மாணிக்க வாணியன் கருநாடக புழலயன் செட்டி என்று அழைக்கப் பெறுகிறன். [5] வெள்ளாளரில்கீழ் மணியரில் நீலன் புலியன் [277/5] என்றும், மேல் மணியரில் காவன் உடையான் [279/5] என்றும் கல்வெட்டுகள் செப்புகின்றன.

---

1 *Page 412. Foot note 15. Studies in India History with special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.*

2 ARE 271/1929 3) S II 253/5

4 ARE 43/1913

5 *பக். 162-63. யாவரும் கேளீர். ஆர். நாகசாமி.*

ஒரு கல்வெட்டில் களஞ்சியன் தேவனுன கொங்கு இளங் கோன் என்று கண்டிருக்கிறது. [280/5] வட ஆற்காடு திரு வண்ணமலை மடத்தில் இருந்ததாகக் கூறப்படும் செப்பேட்டில் நாலாஞ்சாதி வெள்ளாளர் எனப் பொறிக்கப்பட்டுளது.[1] திருவெள்ளாரைக் கல்வெட்டில் கைக்களூர் செம்பியன் மழ நாட்டு வேளாளனுகிய கொற்றன் மாறன் என்று கண்டிருக் கிறது[2] இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் கல்வெட் டில் கடம்ப வேளான் என்ற மறவன் அனுக்கப் பெரையன் என்று பொறிக்கப்பட்டுளது.[3] தஞ்சாவூர் தாலுகா திருப் பழனம் கல்வெட்டு புரிசைக் கிழானுகிய செம்பியனுற்காட்டு வேளாளனுயின் மறவன் நக்கன் என்று கூறுகிறது.[4] இன் ஞெரு கல்வெட்டு வேட்டுவரில் வெள்ளாளனுகிய மருதங்க வேளான் என்று கூறுகிறது.[5] வட சென்னை ஜார்ஜ் டவுன் கி. பி. 1842 ஆம் ஆண்டு கல்வெட்டு தொண்டை மண்டலத் தாரில் வைசிய குலம் துளுவ வேளாளர் பல்லவராய கோத்தி ரம் என்று கூறுகிறது[6] சென்னை நுங்கம்பாக்கத்திலுள்ள கி. பி. 1808 ஆம் ஆண்டுக் கல்வெட்டு பூவசியநாதன்......... துளுவ வேளாள குலத்தார் என்று கூறுகிறது.[7] காளமேகப் புலவர் 'வாணியனும், பொன்னேரி வாழும் வெள் ளாளனும் சேணியனுமென்றே தெரிந்து' என்று கூறியுள்ளது பற்றி ஏற்கனவே கண்டோம். இவ்வாறு பல்வேறு தரத்தாரும் தம்மை வேளாளர் என வழங்க முற்பட்டதால் 'கள்ளர், மறவர், கனத்தால் அகம்படியர் மெள்ள மெள்ள வந்து வெள் ளாளராகி முதலியார் என்று சொன்ஞர்.' 'காயிலே கெட்டது கத்தரிக்காய்; சாதியிலே கெட்டது வெள்ளாள சாதி' என்ற பழமொழிகள் வழக்கில் வந்தனபோலும். இம்மாதிரிப் புதி

---

1 *தென்னிந்திய கோயில் சாசனங்கள். சாசன எண். 100-R 336.*

2 ARE 322/1905

3 ARE. 137/1908.

4 ARE 170/1928.

5 S II. III Page 45.

6 *சென்னை நகர் கல்வெட்டுகள். 250/1967*

7 *சென்னை நகர் கல்வெட்டுகள். 197/1967*

தாய் தோன்றிய நாலாஞ்சாதி வேளாளர் ஏற்கனவே கூறி யதுபோன்று தமக்கு உயர்வு தேட 'ஏர் எழுபது,' 'திருக்கை வளக்கம்', 'வேளாள புராணம்' என்ற நூல்களைப் புனைந் தும் தம்மைக் கங்கை குலம், பூமி புத்திரர், ஏரின் வாழ்நர், எனக் கூறுமுகத்தான் சிவன், பார்வதி முயற்சியால் கங்கைக் கரையில் தோன்றியதாகக் கதை கட்டலாயினர். மேலும் இவர் மன்னருக்கு முடிசூட்ட உரிமையுடையவர் என்று காட்ட கதைகள் புனைந்திருப்பதுடன், கம்பராமாயணம், சோழ மண்டல சதகம், மருதவனப் புராணம் முதலிய நூல்களில் ஆதா ரம் காட்டுவர். சதகங்களும், தலபுராணங்களும் கி.பி. 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியதென ஏற்கனவே கண்டோம். கம்பராமாயணத்தில் சடையப்ப வள்ளல் முடி எடுத்துக் கொடுக்க வசிஷ்டர் இராமனுக்கு முடிசூட்டினனெனஒருபாடல் வருவதை ஆதாரமாய்க்கொண்டு சடையப்ப வள்ளல் வேளா ளன் என்றும், மன்னருக்கு முடிசூட்டும் உரிமை வேளாளருக்கு உண்டு எனவும் ஒரு சாரார் வாதிப்பர். சேக்கிழாரைப் போன்று சடையப்ப வள்ளல் பண்டைய வேளாண் குடியைச் சேர்ந்தவன் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. இன்றைய வேளாளர் பொதுவாய் சடையப்ப வள்ளலையே தம் குல முதல்வனாக பாவிக்கின்றனர் என்பது அவரது மத்தியில் வழங்கும் ஊஞ்சல் பாட்டு சான்றாகும்.

'வெண்ணெய் நல்லூர் சடையன் மரபிலரான
வேளாளர் மீது கவி விரைந்துபாடி
கந்தனார் மாமன்போல் கீர்த்தியோங்க
காராளர் பூவசிய குலத்தில் வந்து
தந்திரமாய் தலங்களையே படையால் வென்ற
தழைத்த செஞ்சினுடையா வாடிரூஞ்சல்.' 1

அரியநாயகம் பற்றிய கூற்று

அமைச்சன் அரியநாயகம் விசயநகர மன்னனிடம் முதல் அமைச்சனாயிருந்து, பின்னர் மதுரை விசுவநாத நாயக்கனிடம்

---

1 *Madras Oriental Manuscript Library R. 5962.*

தளவாயாகவும், முதலமைச்சனுகவும் இருந்தான் என முன்னர் குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இவன் நாலாஞ் சாதி வேளாளன் ஆனதால் முடி சூடும் உரிமை வழங்கப்பட வில்லை எனத் தெரிகிறது. நெல்சன் இதுபற்றிக் கூறுவதாவது: 'பதினாறும் நூற்றாண்டைச் சேர்ந்த நாயக்கர் படைத் தளபதி அரியநாயகம் வேளாள மரபைச் சேர்ந்தவனுதலாலும், வேளாளருக்கு முடி அணியும் உரிமை இல்லை என்பதாலும் அவனது குலகுரு அவன் மன்னனுக முடிசூடக்கூடாதெனத் தடுத்துவிட்டதாக செவிவழிச் செய்தி கூறுகிறது. ஆனுல் இக்காரணம் சரி என முடிவுகொள்வது சிரமமாயுள்ளது. இது பற்றிய உண்மையைத் தெரிந்துகொள்ளப் பழங்கால வரலாற் றறிவு இன்றியமையாதது. இதற்கு வருங்காலம்தான் முடிவு காணவேண்டும். [1]

'Tradition also says that Ariyanayagam Muthali the great general of the sixteenth century was disuaded by his family priest from making himself a King on the ground that he was a Vellala and no Vellalan ought to be King. And looking at all the facts of the case, it is somewhat difficult perhaps to avoid coming to the conclusion that the reason assigned for his not assuming the crown was the true one. This however is a question the settlement of which requires great antiquarian learning and it must be settled hereafter.' [1]

கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் அரியநாயகம் வேளாளன் என வழங்கப்படவில்லை எனத் தெரிகிறது. மெக்கன்சி தொகுத்த கைப்பிரதிகளில் அரியநாயகம் தன் உறவின் முறை யாரை தென்மாவட்டங்களில் குடியிருப்புக்கள் அமைத்து குடி யேற்றி அவர்களுக்குத் தொழில் செய்ய வெள்ளாளரையும் மற்றும் தொழிலாளரையும் நியமித்தான் என ஏற்கனவே கண்டவற்றால் அறிவோம். மேலும் இங்கு குறிப்பிட்டுள்ள

---

*1 Page 31. Madura Manual. Part II. J. H. Nelson.*

வெள்ளாளர் வேலைக்காரர், பணி செய்வர் என்ற பொருளையே உணர்த்துவதாகத் தெரிகிறது. அரியநாயகம் வேளாளன் அல்லது வெள்ளாளன் எனில் தன் மரபினரை வேலைக்காரஞகவோ, பணி செய்வாஞகவோ நியமித்திருக்கான் என்பது திண்ணம். நெல்சன் பாண்டிய மன்னர் தம் மரபிலிருந்தும் தம்மை விடத் தாழ்ந்த மரபிலிருந்தும் பெண் எடுத்தனர் எனவும், அம்மாதிரித் தாழ்ந்த மரபிலிருந்தும், காதற் கிழத்திகள் மூலமும் பிறந்தவர்தான் வெள்ளாளர் என வழங்கியதாகவும் கூறுகிருர். [1]

Nelson says: 'with regard to the assertion so commonly made that Pandyas belonged to the Vellala caste, it is observable that tradition is at issue with it and declares that Pandyas proper were Kshtriyas but they were accustomed to marry wives of inferior castes as well as in addition to wives of their own caste and some of their descendants born of the inferior and irregularly married wives were Vellalas and after the death of Kun or Sundara Pandya formed a new dynasty known as that of the Pseudo-Pandyas.' [1]

நெல்சன் கூற்றிலிருந்து கலப்பு இனத்தாரும் தம்மை வேளாளர் என்று வழங்கினதாகத் தெரிகிறது. சேர, சோழ, பாண்டியர் பண்டைய வேளாண் மரபைச் சேர்ந்தவர் என்பது நாம் அறிந்ததே. ஆனல் அரியநாயகம் அம்மரபைச் சேராதவன் என்பதால் மன்னஞக முடிசூட அனுமதிக்கப்படவில்லை என்பது தெளிவு.

### பண்டைய வேளாளர் பிற்காலநிலை

தமிழ் வேந்தர் ஆட்சி வீழ்ச்சியுற்றபின் அவரது மரபினராகிய வேளாண் குடியினர் [தேவேந்திர குலத்தார்] நிலை தலைகீழ் மாற்றம் பெற்றது என ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இதுபற்றி நெல்சன் கூறுவதைக் காண்போம் :

---

1 Page 31. Madura Manual. Part II. J. H. Nelson.

' கூன்பாண்டியன் காலப்பகுதியைச் சேர்ந்த கல்வெட்டிலிருந்து கி. பி. 11-ஆம் நூற்றுண்டில் வேளாளர் ஒரு பிரதான வகுப்பினராக இருந்ததாகத் தெரியவருகிறது. ஆனால் விசயநகரப் படையெடுப்பின் விளைவால் தமிழகத்தில் தெலுங்கர் திரள்திரளாய் கி. பி. 15, 16-ஆம் நூற்றுண்டுகளில் குடிபுகவும், வேளாளர் முற்றிலும் செல்வாக்கு இழந்து தெலுங்கரின் பின்னுக்குத் தள்ளப்பட்டனர். இக்காலத்தில் கிறித்துவ மறையைத் தென்னகத்தில் பரப்பிய சேசு சபையைச் சேர்ந்த சமயப் பிரச்சாரகர்கள் தங்களது குறிப்புகளில் வேளாளர் பற்றி குறிப்பிடாததில் வியப்பு ஒன்றும் இல்லை. அவ்வாறு அவர்களைப்பற்றி குறிப்பிடாததற்குக் காரணம் பாண்டியநாடு சிதறுண்டகாலை ஏற்பட்ட குழப்ப நிலையில் வேளாளர் தங்கள் உடைமைகளையும், செல்வாக்கையும் அறவே இழந்துவிட்ட நிலையில் இருந்தனர் என்பதுவேயாம்.' [1]

Nelson says, 'It is observable that the names of his first division of Milalai Kurram occurs in an inscription of the time of Kun Pandyan which will be found translated in the 2nd chapter of the Historical portion of the manual and it occurs in such a manner to lead to the presumption that in the eleventh century the Vellalas of Madura were one of the principal castes. But in the course of time they were apparently completely thrown into the shade by the Telugus who immigrated into the Madura country in large bodies in the fifteenth and sixteenth centuries and the Jesuits of Madura if they have mentioned the Vellalas at all which is doubtful certainly have not mentioned them as holding a prominent position amongst the castes of the times in which they wrote. It is possible that they lost a great portion of the wealth and influence in the trouble-some period which succeeded the breaking up of ancient Pandyan Kingdom at the end of the eleventh century or the begining of the twelth century and that it was then that the Kallans and Vallambans found themselves in a positon to attack and oust them'. [1]

---

*1 Page 29-30. Madura Manual. Part II. J. H. Nelsan.*

அக்காலத்தில் பாண்டிய மரபைச் சேர்ந்தவர் [பண்டைய வேளாளர்] என்னிலையில் இருந்தனர் என்பதுபற்றி கால்டு வெல் கூறுவதாவது : 'முற்றிலும் வறுமை நிலைக்கும், அதிருப்திக்கும் உள்ளாக்கப்பட்ட பாண்டிய மரபைச் சேர்ந் தவர் அமைதியையும், பொறுமையையும் கடைப்பிடித்தால் காரியசித்தி ஆகாது எனக் கருதியதால் புரட்சி செய்வ தற்கு ஏற்ற தருணத்தை எதிர் நோக்கி இருந்தனர். [1]

Caldwell says: 'Then again there were the impoverished and discontented adherents of the Pandya-men who could hope for every thing from revolution from peace and quiet nothing' [1]

இம்மரபினரை அடக்கி ஒடுக்குமுகத்தான் பாளையப்பட்டு முறையைத்தோற்றுவித்து, நில உடைமையை இவரிடமிருந்து பறிமுதல் செய்து அரசுடைமையாக்கி பாளையப்பட்டுகள், அரசியல் அதிகாரிகள் மற்றும் அவரது நெருங்கிய உறவினர், பார்ப்பனர் இவர்களுக்குப் பகிர்ந்தளிக்க, வேளாண் குடியினர் நிலமற்ற கொத்தடிமை நிலைக்கு உள்ளாயினர் என்பதுவும் நினைவிருக்கத்தக்கது.

டாக்டர் கே. கே. பிள்ளை கூறுவதாவது : 'பர்டன் ஸ்டெ யின் என்பார் தென் இந்திய சமய சார்பற்ற அரசின் நடு நிலையை விவசாயிகள் பாதுகாத்து வந்தனர் என்றும், ஆனால் மத்தியகாலத் தென் இந்திய அரச மரபினர் மறைவிற்கும். சத்திரிய [அரசமரபு] மரபு பாரம்பரியம் நிலைக்காததற்கும் பார்ப்பனர், வெள்ளாளர் கூட்டே காரணம் என்றும் கூறுகிறார்.' ஆனால் இது சரியன்று. வெள்ளாளரில் சிலர் அமைச்சர் களாகவும், படைத்தலைவர்களாகவும் இருந்தது உண்மையே. தமிழகத்தில் மட்டும் சத்திரிய மரபு பாரம்பரியம் மறைந்த தென்று கூறுவதற்கில்லை. ஆனதால் வெள்ள ளர், பார்ப்பனர் கூட்டைப்பற்றிப் பேசுவதில் அர்த்தம் இல்லை.' 2

---

*1 Page 56. History of Tinnelvely. Dr. R. Caldwell.*

*2 Page 326-27. Studies in Indian History with Special reference to Tamil Nadu. Dr. K. K. Pillay.*

Dr. K. K. Pillay says: 'Burton Stein has advanced an interesting theory. He describes the Vellala-Brahmin relation as an alliance and adds that in South India peasants held the balance of secular power. He adds that the alliance formed one reason for the failure of a Kshtriya tradition in medieval South India. This seems to be an exaggeration. Though some vellalas were employed as ministers and generals, it is too much to speak of an alliance between Brahmin and vellalas. Nor did the failure of Kshtriya tradition appear only in Tamil Nadu. '[1]

வெள்ளாளர்பற்றிய பழமொழிகள் :

கி. பி. 17, 18-ஆம் நூற்றுண்டுகளில் தோன்றிய பள்ளு நூல்களில் பண்டைய வேளாண் குடியினரைப் பள்ளர், மள்ளர் என்ற பள்ளர் என்றும் இன்று வேளாளர் என உரிமை பாராட்டுபவரில் ஒரு சாரரைக் காரைக்காட்டார் என்றும் குறிப்பிடுவதன்றி வேளாளர் என்று குறிப்பிடவில்லை என்பது நாம் அறிந்ததே. இக்காலத்தில் வேளாளர்பற்றி வழங்கும் பழமொழிகள் வெவ்வேறு பொருளை உணர்த்துவதாயுள்ளன. ' வெள்ளாளன் செய்யாதவெளாண்மை ஒரு வேளாண்மையா? ' என்ற பழமொழி வெள்ளாளன் என்பது விவசாயியைக் குறிப்பதாயுளது. ' வெள்ளாளன் கெடுக்காவிட்டாலும் அவன் வெள்ளோலை கெடுக்கும் ' இங்கு வெள்ளாளன் என்ற பெயர் கணக்கு எழுதும் தொழில் செய்பவனைக் குறிக்கிறது ' வெள்ளாளன் மினுக்குப்பண்ணிக் கெட்டான்; வேசி தளுக்குப்பண்ணி கெட்டாள். ' இங்கு வெள்ளாளன் என்ப்து விவசாயியையோ அல்லது கணக்கனையோ குறிக்கக் காணோம். 'வேல மரத்திற்கு நிழல் இல்லை, வெள்ளாளனுக்கு உறவு இல்லை ' ' வெள்ளாளன் போன இடமும், வெள்ளாடு போன இடமும் வெட்டை ' ' வெள்ளி குறுக்கிட்டாலும் வெள்ளாளன் குறுக்

---

*1 Pages 376-27 studies in India History With special reference to Tamil Ndau. Dr. K. K. Pillay.*

கிடக் கூடாது' இங்கு வெள்ளாளன் மோசக்காரன், நய வஞ்சகக்காரன், சமூக விரோதி என்ற பொருளையே உணர்த்துவதாயுளது.

## வெள்ளாட்டி பொருளாக்கம்

அடுத்து வெள்ளாளன் என்பதின் பெணபால் பெயராகிய வெள்ளாட்டி உணர்த்தும் பொருள்பற்றிப் பார்ப்போம். இப்பெயர் தமிழ் வேந்தர் ஆட்சியில் வேளாண் வகுப்புப் பெண்டிரை உணர்த்தியது. 'அழநாட்டுக் கிழையில் இருந்து வாழும் வெள்ளாட்டி சாத்தன் மல்லி' [1] 'விளத்தூர் நாட்டு சிறு கடம்பூரிலிருக்கும் வெள்ளாட்டி அரிக்காடி' [2] என்ற கல்வெட்டுகள் வெள்ளாட்டி என்ற பெயர் வேளாண் மரபுப் பெண்டிரை உணர்த்தும் என்பதற்குச் சான்ருகும். ஆனல் தெலுங்கர் காலத்தில் வெள்ளாட்டி என்பது வேலைக்காரி, பணிப்பெண், ஆசைநாயகி என்ற பொருளில் வழக்கில் வந்ததாக அறிகிரோம். [3]

தெலுங்கர் ஆட்சியின்போது பள்ளு நூல்களும், குற்ருலக் குறவஞ்சியும் தவிர வேறு குறிப்பிடத்தக்க தமிழ் இலக்கியங்கள் தோன்றவில்லை. நாட்டுப்புற மக்கள் பொழுது போக்கிற்காக அல்லி அரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை, பவளக் கொடி முதலிய இலக்கியங்கள் தோன்றின. இந்த இலக்கியங்களில் வெள்ளாட்டி என்ற பெயர் பணிப்பெண், தாதி, ஆசை நாயகி, என்ற பொருளையே உணர்த்தின என்பது அடியிற்கண்ட மேற்கோள்களால் புலனுகும்.

'வெள்ளாட்டி பெற்றெடுத்த வீரியன் நீன்முகனும்
மீறி வளர்ந்திருந்தான் வீரன் மதுரையிலே'
[பக். 27. அல்லி அரசாணிமாலை]

---

1 ARE. 486 | 1904&476 | 1904.

2 ARE. 542 | 1920.

3 தென்னிந்திய கோயில் சாசனம் முதற் பாகம்.

'வெள்ளாட்டிப் பையனுக்கு வீரியங்களுண்டாமோ
எருது பசுவாமோ, இளைத்த புலியுமுண்டோ
உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாமோ'
[அல்லி அரசாணி மாலை பக். 35]

'வெள்ளாட்டிப் பயலே வீரிய முனக்கேண்டா
தம்பல வட்டிலேந்தும் தாதிபெற்ற மகனே நீ'
[அல்லி அரசாணி பக். 41]

'வெள்ளாட்டி கைதனிலே வெட்கங்கள் கெட்டோமே
தாதியவள் கையிலே தலையிரங்கக் காணோமே'
[புலந்திரன் களவுமாலை பக். 106]

'ஆலாத்திப் பெண்களிலே ஆறுலட்சம் பெண்களுமாம்
பாக்கு நறுக்கிடும் பரிவார மெத்தவுண்டு
வெற்றிலைச் சுருள்மடிக்க வெள்ளாட்டிப் பெண்களுமாம்'
[நல்லதங்காள் கதை பக். 9]

இலக்கியங்களில் மட்டுமின்றிப் பழமொழிகளிலும் ஆசை நாயகி, பணிப்பெண் என்ற பொருளில் வெள்ளாட்டி என்ற பெயர் வழக்கில் இருந்ததென்பது:

'வெள்ளாட்டி பெற்றபிள்ளை விடியற்காலம் செத்துப் போச்சு'

'வெள்ளாட்டியும் பெண்டாட்டியும் சரியா'
என்ற பழமொழிகளால் தெளிவு.

டாக்டர் ஜி. ஒப்பர்ட் கூற்றுப்படி வேளாளப் பெண்டிற்கு வெள்ளாடிச்சி என்ற பெயர் அக்காலத்தில் இலக்கிய அல்லது உலக வழக்கில் இல்லை என்பதற்கு

'வேசி ஆடினால் காசு, வெள்ளாட்டி ஆடினால் சவுக்கு'
'வேசி உறவும், வெள்ளாட்டி அடிமையும்
காசு பணத்தாலே காணலாம்'
என்ற பழமொழிகள் சான்றாகும்.

நெல்சன் பாண்டியர் தம் மரபிலிருந்தும் தம்மைவிடத் தாழ்ந்த மரபிலிருந்தும் பெண் கொண்டனர் எனவும், அவ் வாறு தாழ்ந்த வகுப்பிலிருந்தும் காதற்கிழத்திகள் மூலமும் தோன்றியவர் தம்மை வெள்ளாளர் என வழங்கினர் எனக் குறிட்பிட்டுள்ளது நினைவிருக்கந்தக்கது. இக்கருத்துக்கு அல்லி அரசாணி மாலை சான்று பகர்வதாயுள்ளது என்பது அடியிற்கண்ட மேற்கோள்களால் அறியலாம்.

'வடமதுரைப் பட்டணத்தில் வந்து குடித்தனமாய்
உழவு குடித்தனமாய் உத்தமர்கள் வாசம் பண்ணூர்
வருஷத்திற் கொருதரந்தான் வரவிடுவார் பாற்குடங்கள்'
(பக். 33)

'வெள்ளாட்டி பெற்றெடுத்த வீருன நீன்முகனும்
ஊரில் வரவொட்டாம லோட்டிவிட்டான் புறத்தே
உழவுகுடியாக வூரிற் பிழையுமென்ருன்
ஆருயிரம் பாண்டியற்கு ஆருயிரம் பாற்குடமும்
வருஷத்திற் கொருதரந்தான் வாங்குகிருன் பகுதியாக
[செய் 35]

பாண்டியர்க்கு வாரிசுகள் இல்லாததால் தமது வைப் பாட்டி மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு உழவு தொழில் நடத்திவந்ததாக மேலே கண்ட மேற்கோள் கள் புலப்படுத்துவதாயுள்ளன.

வெள்ளாட்டி என்பது பணிப்பெண் என்பதுபற்றி நிரம்ப வழகிய தேசிகர் பட்டயம் [பக்கம் 100-116] கூறுவதாவது : 'இது சாலி 1549 கலி 4730 [கி.பி. 1627] ஆம் ஆண்டில் ஏழு நகரத்தார் முன்பாகக் குன்றக்குடி ஆதீனம் நிரம்பவழகிய தேசிகர் [துளாவூர் மடம்] கொடுத்த பட்டயம் யுகங்களின் பெயர்களும், நாயக்கர் பெயர்களும் முன்னர் குறிப்பிட்டுள் ளன. தேசிகர் பெருமை, நகரத்தார் பெருமை, கோத்திரம் குலசேகரபுர சவுந்தர பாண்டியன் நகரத்தார்கள் நற்குடி யாகத் தன் சீமைக்கு அழைத்தது; நகரத்தாரின் வெள்ளாட் டிட் பெண்கள் சோழன் உத்தரவிட்டும் [கலாமடம்]

ஈசானிய குரு தேசிகரைத் தொழ மறுத்தது; எங்கள் நிரம்ப வழகிய குருதேசிகர் [துளா மடம்] பாண்டி நாட்டிற்கு வந்தால் நாங்களும் போவோம் என்று உரைத்தது; வெள்ளாட்டிப் பெண்கள் தங்கள் குருவிடம் முறையிட்டது; சோழன் குருதேசிகரை வரவழைத்துப் பாண்டியன் பல கிராமங்களைத் தருவான் என்று மொழிந்து இருபத்திரண்டு கோத்திரத்தார் ஆண்களும், வெள்ளாட்டிப் பெண்களும் பாண்டிய நாட்டிற்கு வந்தது; பாண்டியன் எல்லோரையும் எதிர்கொண்டழைத்து மாகாணங்கள் சர்வ மானியமாக அளித்தது; குன்றக்குடி ஆதீனம் அமைத்தது முதலான நகரத்தார் வரலாற்றுக் குறிப்புகளை இப்பட்டயத்தில் தெளிவாக அறியலாம். நேமங்கோயில் குமரப்பனும் அவன் மனைவி வெள்ளாட்டி சிட்டாளும் உப்பு மாறி எடுத்த மகமையால்...' [1]

நகரத்தார் என வழங்கும் நாட்டுக்கோட்டை செட்டியார் தாம் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வெள்ளாட்டிப் பெண்களை [இன்றைய வேளாளப் பெண்களை] அழைத்துவந்து திருமணம் செய்துகொண்டதாகக் கூறுவர். இதுபற்றி மறைமலையடிகள் கூறுவதைக் காண்போம்: 'நாட்டுக்கோட்டைச் செட்டிமார் முன்னேற்றத்தின் பொருட்டு வெளியிடப்படும் தனவைசிய ஊழியன் என்னும் இதழில் [கி. பி 1923-ஆம் ஆண்டு ஆடித் திங்கள் 12-ஆம் நாள்] அதன் தலைவர் வேளாளர் உண்மை வரலாறுகளை அறியாமல் அவரைச் சூத்திரர் என்று இகழ்ந்து தம் மரபினரில் உள்ள ஆடவர்கட்கு வேளாள மரபினரிலிருந்து பெண்கள் எடுத்து மணம் செய்வித்துக்கொள்ளல் முறையேயாம் என்று எழுதிய கட்டுரை ஒன்றைக் கண்டோம்' [குறிப்பு இக்கட்டுரைதான் 'வேளாளர் யாவர்'? 'வேளாளர் நாகரிகம்' என்ற நூல்கள் மறைமலையடிகளால் எழுதப்படக் காரணமாயிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.]

---

*1 பக். 401. சிந்தனைக் களங்கள் - பழனி அறப் பட்டயங்கள் டாக்டர் வ. சுப. மாணிக்கம்,*

இந்தப் புதிய வேளாளர் [நான்காவது வருணம்; சூத்திரர்] தமது நிலையை உறுதிப்படுத்தவும் ஏன் உயர்த்திக்கொள்ளவும் பல வழிமுறைகளைக் கடைப்பிடித்ததாக அறிகிறோம். முதன்முதலாக ஆரிய மரபுபோன்று தமிழகந்தில நான்கு வருணங்கள் வழக்கில் இருந்ததென நிலைநாட்டத் தொல்காப்பியத்தில் வேண்டாத மரபியல் பகுதியில் சூத்திரங்கள் புனைந்து இடைச் செருகலாக நுழைத்தனர். பட்டினப்பாலை மற்றும் சங்க இலக்கியங்களில் மாருட்டம் நடைபெற்றிருக்கிறது. திவாகர நிகண்டில் வேளாண்மை என்ற சொல்லுக்கு ஈகையும், கொடையும் விளம்பும் என்று பொருள் கண்டுள்ளபோது பிங்கல நிகண்டில் மெய்ம்மையும், கொடையும் என்று கண்டுளது. அதேபோன்று அதில் வேளாளர் என்பதற்கு சதுர்த்தரும், கொடையாளரும் என்று பொருள் கண்டுளது, சதுர்த்தர் எனில் சூத்திரர் எனப் பொருள்படும் என்பது நாம் அறிந்ததே.

பல்வேறு பிரிவினரும் வேளாளர் என வழங்க எத்தனிக்கவும் வேளாளர் தொழில்களும் பல்கிப் பெருகின. தொல்காப்பியத்தில்காணும் 'வேளாண் மாந்தர்க்கு உழுதொழிலன்ன பிறவகை நிகழ்ச்சி இல' என்ற சூத்திரம் இடைச் செருகலாக நுழைந்தபோது வேளாளர்க்கு உழு தொழில்மட்டும் உரியது என்று கற்பிக்கப்பட்டது. ஆனால் பின்னர் தொல்காப்பியத்திற்கு உரைகள் காணும் காலத்தில் வேளாளரது தொழில்கள் அறுவகை என்று கூறப்பட்டது. நிகண்டுகளில் அவற்றை பத்துவகைப்படுத்தினர். தம் சமூகத்திற்கு உயர்வு தேட ஏற்கனவே கூறியதுபோன்று ஏரெழுபது, திருக்கை வளக்கம், வேளாள புராணம், தொண்டை மண்டலச் சதகம், சோழமண்டலச் சதகம், கார்மண்டலச் சதகம் எனப் பல நூல்களை இயற்றினர். சதகங்களில் நால்வகைச் சாதிப் பிரிவுகள்பற்றியும், ஒவ்வொரு பிரிவினர் தொழில்பற்றியும், வேளாளர் உயர்வுபற்றியும், மன்னர்க்கு முடிசூடும் உரிமை பற்றியும் பலபடக் கண்டுளர். இந்த நூல்களுடன் தலபுராணங்களும் ஏராளமாய் இயற்றினர். பண்டைய, இடைக்கால

இலக்கியங்களில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் பெயரால் நான்கு வீதிகள் குறிப்பிடப்பெறவில்லை எனத் தெரிகிறது. ஆனால் தலபுராணங்களில் நான்கு வீதிகள் பேசப்படுகின்றன. கோயில்கள் எழுந்த காலை, அவற்றைச் சூழக் குடி அமர்த்தப்பட்டவர் கோயிற் பணியாளர்களேயாவர். கோயிலைச் சுற்றியுள்ள நான்கு வீதிகளையும் தேர் வீதி என்று தான் வழங்குவது மரபு. ஆனால் அந்தணர் வீதி, அரசர் வீதி, வணிகர் வீதி, வேளாளர் வீதி எனத் தலபுராணங்களில் வருணிக்கப்படுவதைக் காணலாம். இதிலிருந்து கோயிலுக்குப் பணிசெய்ய அமர்த்தப்பட்டவரை அந்தணராகவும், வணிகராகவும், வேளாளராகவும் உயர்த்தும் முயற்சிகள் நடைபெற்றிருக்கின்றன என யூகிக்க இடமாகின்றது.

குலப் பட்டங்கள் [முதலி]

இந்தப் புதிய வேளாள வர்க்கம் சமீப காலமாய், முதலி, பிள்ளை என்ற குலப்பட்டம் பூண்டு வருவது நாம் அறிந்ததே. தமிழ் வேந்தர் ஆட்சி காலத்தில் ஒருவரும் குலப்பட்டம் தரித்துக் கொள்ளவில்லை. நாயக்கர் காலத்தில்கூட முதலி, பிள்ளை என்பவை குலப்பட்டங்களாக வழங்கின என்பதற்குச் சான்று இல்லை. அய்யன், அய்யங்கார் என்ற பட்டங்களும் அப்படியே. பண்டைய நாளில் ஐயன் என்பது தகப்பன், தலைவன், அண்ணன், பெரியவர் என்ற பொருளில் வழங்கியுள்ளன. சோழர் காலத்தில் இச்சொல் அரசனைக் குறித்ததென்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள. இராசேந்திரன் 'பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்டருளிய அய்யன்' என ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளான்.[1] குலோத்துங்கச் சோழன் திருக்கோயிலூர் வட்டம் திருநறுங்கொண்டையில் ஒரு சமணப் பள்ளியில் உள்ள கல்வெட்டில் 'ஐ(ய்)யன்' எனப் பொறிக்கப்பட்டுள்ளான்.[2] விசய நகர மன்னர் தளபதிகள்

1 Page 41. Gangaikonda Cholapuram. R. Nagasamy.

2 தென் இந்தியக் கோயில் சாசனங்கள். பாகம் I. பக். 82. சாசனம் 71. S II. Vol. VII. 1011—ARE. 381 / 1902.

மற்றும் பிரதிநிதிகள் அய்யன் என்ற பட்டம் தரித்திருந்ததாக அறிகின்றோம். விசுவநாத நாயக்கன் மற்றும் அவனுக்குப் பின் வந்த சில நாயக்க மன்னர் அய்யன் என்ற பட்டம் தரித்திருக்கின்றனர் என்று தெரிகின்றது.[1] பின்னர் நாயக்க மன்னர் படைத் தளபதிகளில் சிலர் அய்யன் என்ற பட்டம் பூண்டிருக்கின்றனர். [இராமப்பய்யன், நரசப்பய்யன்] ஆனால் இந்நாளில் பார்ப்பனரில் சிவ மதத்தைத் தழுவியவர் அய்யன் என்றும், வைணவ மதத்தைத் தழுவியவர் அய்யங்கார், ஆச்சாரி என்றும் பலவிதக் குலப்பட்டங்களைத் தரித்து வருகின்றனர். நிற்க, இன்றைய வேளாளரது முதலி, பிள்ளை பட்டங்கள் சமீப காலமாய்த்தான் பெருவழக்கில் வந்துளது. முதலி என்பது ஆரம்பத்தில் சமயத் தலைவர்களுக்கு ஏற்பட்ட பட்டமாகத் தெரிகிறது. அப்பர், சுந்தரர், திருஞான சம்பந்தர் மூவர் முதலி என வழங்கினர் என அறிகின்றோம். மடங்களின் தலைவர்கள், துறவிகள் முதலி என வழங்கியிருக்கின்றனர். பிற்காலச் சோழர் காலத்தில் அரசியல் தலைவர்கள் முதலி, பிள்ளை என்ற பட்டம் வழங்கட்டிருந்ததாக சில கல்வெட்டுகள் செப்புகின்றன.[2] விசுவநாத நாயக்கன் தன்னிடம் அமைச்சனாயிருந்த அரியநாயகத்திற்கு முதலி என்ற பட்டம் வழங்கியதாகக் கூறுவர். ஆக சமயத் தலைவர் தவிர அரசு பணியில் ஈடுபட்டுள்ளவருள் ஒரு சிலர் முதலி என்ற குலப்பட்டம் பூண்டிருந்ததாகத் தெரிகிறது. நாயக்கர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டதாகக் கருதப்படும் சோழன் பூர்வ பட்டயத்தில் சமய முதலி, அரசியல் பணி செய்யும் முதலி, கோயில் பணி செய்யும் முதலி, கணக்கன் முதலி முதலிய பெயர்கள் வருவது காண்க. இதைப் பின்பற்றித் தொண்டை மண்டலப் பகுதியில் வாழும் இன்றையக் கொண்டைகட்டி வேளாளர், பூனமல்லி வேளாளர், துளுவ வேளாளர், கைக்கோளர், செங்குந்தர், அகம்படியர், பள்ளி (வன்னியர்) உவச்சர், பணிசைவர், தேவ

---

1 ARF. 491 / 1937 - 38.

2 A concordance of the names in the Chola-inscriptions Noboru Karashima Y. Subbarayalu and Toru Matsui 1979.

ரடியார் வழி வந்தவர், மேளக்காரர், மருத்துவர் போன்ருேர் முதலி என்ற குலப் பட்டம் பூண்டுவருவது கண்கூடு. தென் மாவட்டங்களில் சேனைத் தலைவர், கள்ளரில் ஒரு பிரிவினர்கூட முதலி என்ற குலப்பட்டம் பூண்டு வருவதாகத் தெரிகிறது. பட்டணவரில் ஒரு சிலர் தம்மை வருண குல முதலி என வழங்குகின்றனர் என்றும் அறிகிருேம்.[1] மூதலி என்பதற்குக் கணக்கர் என ஜே. எஸ். சாண்ட்லர் குறிப்பிட்டுள்ளது நாம் அறிந்ததொன்றே.

பிள்ளை

முதலி என்ற குலப் பட்டம் தொண்டை மண்டலப் பகுதியில் வழங்குவது போன்று, பிள்ளை என்ற குலப் பட்டம் தென் மாவட்டங்களில் வழக்கில் உள்ளது. இப்பட்டம் முதலி என்ற குலப் பட்டம் போன்று ஏற்கனவே சமயத் துறவிகள் பூண்டிருந்ததாகத் தெரிகின்றது. நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, திருமாளிகைப்பிள்ளை, வினாஞ்சோலைப்பிள்ளை, வேம்பத்தூர் பிரசமணப் பிள்ளையன் இவர்கள் இதற்கு எடுத்துக்காட்டு ஆவர். ஆகப் பார்ப்பனர் முதல் தாழ்த்தப்பட்டவர் ஈருகப் பலரும் மரபு வேறுபாடின்றி பிள்ளை, பிள்ளையன் என்ற பட்டம் பூண்டிருந்ததாக அறிகின்ருேம். அரசியல் தலைவர்களுக்கு பிற்காலச் சோழர் காலத்தில் இப்பட்டம் வழங்கப்பட்டதுபற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவுகூரத் தக்கது. நாயக்கர் காலத்தில் தென்பாண்டி நாட்டில் நாயக்கர் பிரதிநிதியாயிருந்த வடமலையப்பன் பிள்ளையன் என்ற பட்டம் பூண்டிருந்தான் என அறிகிருேம்.[2]

திருக்குற்ருலநாத சுவாமி ஆலயத்தின் ஒரு கல்வெட்டில் பிள்ளையன் என்ற பெயர் பொறிக்கப்பட்டிருப்பதுபற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது நினைவிருக்கத்தக்கது. இதைப் பின்பற்றித் தென் மாவட்டங்களில் அரசு பணி, ஆலயப் பணி செய்தவர் அனைவரும் பிள்ளை என்ற குலப் பட்டம் தரிக்கலாயினர்

*1 Page 84. Castes and Tribes of South India Vol. V. E. Thurston.*
*2 பக்கம் 22. முக்கூடற்பள்ளு வித்துவான் ந. சேதுரகுநாதன் உரை.*

எனலாம். கர்ணீகர் வேலை பார்த்தவர் கணக்குப்பிள்ளை என்று வழங்கிப் பின்னர் தம் தம் பெயருக்குப் பின் பிள்ளை என்ற பெயரைக் குலப் பட்டமாகந் தரித்து காலப்போக்கில் இம்மாதிரிப் பட்டக் கூட்டத்தார் தம்மைப் பிள்ளைமார் என்று வழங்கலாயினர்.

இன்று வேளாளர் என வழங்குபவர் மட்டுமின்றி பறையர், இடையர், கள்ளர், அகம்படியர், தேவரடியார் வழிவந்தோர், மேளக்காரர், சேனைத்தலைவர், இலைவாணியர்-பள்ளி, [வன்னியர்] துளுவ நாயக்கர், துளுவ வேளாளர், மருத்துவர், குயவர், நத்தமர், வண்ணார் முதலிய பல்வேறு பிரிவினர் பிள்ளை என்ற குலப்பட்டம் தரித்து வருவதை நாம் காணலாம். பாண்டிய நாட்டில் வேளாளர் என்பவர் தம்மைப் பிள்ளைமார் என்றே கூறமுற்படுவர். காரைக்கட்டுப்பிள்ளைமார் சைவப்பிள்ளை மார், செவளைப்பிள்ளைமார், இல்லத்துப்பிள்ளைமார், கொடிக்காப்பிள்ளைமார் இதற்கு எடுத்துக்காட்டு ஆகும்.

கவுண்டர்

கொங்கு வேளாளர் என்பவர் பொதுவாய் தம்மை வேளாளர் என்று கூருமல் கவுண்டர் என்றே கூறுவர். இங்கு வேட்டுவர், குறும்பர்,வக்கிலியர்-பள்ளி, அனுப்பர் முதலிய பல்வேறு குடியினரும், தம்மைக் கவுண்டர் என்றே கூறுவர். கவுண்டர் என்பதற்கு கவுண் எறிகிறவர் என்று பொருள்படும். தினைப் புலம் காக்கும் குறிஞ்சிநில மக்கள் கவுண் எறிந்து பறவைகள், மிருகங்களை விரட்டியது பற்றி சங்க இலக்கியங்களில் சான்றுகள் பல உள என்பது அடியிற்காணும் மேற்கோள்களால் தேற்றம்.

'அணையக் கண்ட அங்குடிக் குறவர்
கணையர் கிளையர். கைபுனைகவணர்'

[நற். 108]

'ஆரெயிலைத்த கல் கால் கவணை
நாரறி நறவிற் கொங்கர் கோவே'

[பதிற். 88-18-19]

'ஏனல் காவலர் கவண் ஒலி வெரிஇக்
கானயானை கைவிடு பசுங்குழை'

[குறுந். 54-23]

## இன்றைய வேளாளர் இயல்பு

ஆக பண்டைய மருத நில மக்கள் தவிர்த்து இடைக்காலத்தில் கோயில், மடங்கள், அரசு பணிகளில் ஈடுபட்டவர் மற்றும் பல்வேறு தொழில் மக்கள் தம்மை வேளாளர் என்று கூற முன் வந்திருக்கின்றனர் என்பது வெள்ளிடைமலை. இவ்வாறு பலரும் தம்மை வேளாளர் என்று கூறுவது பற்றி வேளாளர் இயல்பு என்ற நூலில் கண்டுள்ளதாவது :

'வேளாளரில் பாண்டிய வேளாளரென்றும், சோழிய வேளாளரென்றும், துளுவ வேளாளரென்றும் பல பிரிவுகளுள் சிலர் தொண்டை மண்டலத்தில பிரபலஸ்தராயிருந்ததை யிட்டுத் தொண்டைமண்டல முதலியாரென்றும் சொல்லப்படுகின்றனர். இக்காலத்தில் எல்லா வருணத்தாரும் பெரும்பான்மையில் வேளாண்மைத் தொழில் அப்பியாசித்து, தங்கள் தொழில் விவசாயத்தொழிலென்று நியாயஸ்தலங்களிலும், கச்சேரிகளிலும் பெருமையாய்ச் சொல்லிக் கொள்கிறார்கள். சில தேசத்திலிருக்கிற சத்திரியரும், சூத்திரரும் தங்களை பிராமணரென்று சொல்வது போலவே தாழ்ந்த சாதிகளில் சிலரும் [கைக்கோள முதலிகள்] தங்களை வேளாளரென்றும், முதலியாரென்றும் சொல்லிக் கொண்டிருப்பதால் அவர்கள் வேளாளர் என்ற சாதியிற் சேர்த்து அவர்களை அனுசரணையின் பேரில் ஜாதி நிர்த்தாரணம் செய்யக்கூடாது.' [1]

பல்வேறு பிரிவினரும் வேளாளர் என வழங்குவதுபற்றி 1901 ஆம் ஆண்டு குடிக்கணக்கெடுப்பு ஆணையர் கூறுவதாவது : 'வேளாளர் என்பவர் பயிர்த்தொழில் செய்பவர் மட்டு

---

1 வேளாளர் இயல்பு-Madras oriental Manuscript Library

மின்றி, செம்படவர் முதல் வளையல்காரர் வரைப் பல்வேறு வகுப்பினரையும் உள்ளடக்கியது ஆகும்,' 1

'Vellala included a wide variety of agricultural communities plus many aspirants ranging from fishermen to bangle-makers who had adopted the same name ?' 1

ஆங்கிலேயர் ஆட்சியின்போது கிறித்துவ மறையைத் தமிழகத்தில் பரப்ப வந்த மதபோதகர் வெள்ளாளர் என்பதற்கு கணக்கர் என்றே பொருள் கண்டுளர்.' 2

எம். சீனிவாச அய்யங்கார் பண்டைய வேளாளர்பற்றி கூறுவதாவது : 'தமிழ் வேந்தர் வழித்தோன்றல்கள் பற்றி இந்த நாட்டில் ஒன்றும் அறிவதற்கில்லை. அனேகமாய் அவர் கலப்பற்ற பண்டைய வேளாண் குடியினருடன் கலந்திருக்க வேண்டும். ஏன் கலப்பற்ற வேளாளர் என்று கூறுகிறேன் எனில், நாளடைவில் பல்வேறு பிரிவினரும் தம்மை வேளாளர் என வழங்கி வந்திருக்கின்றனர்.' 3

'No traces of the Tamil Kings are to be found in this country and it is highly probable that they should have merged with the pure vellala caste as a whole has been receiving additions from time to time from other tribes' 3

---

*1 Page 184. census of India 1901. Madras Vol. I*

*2 Page 15. History of the Jesuit mission in Madurai J. S. Chandler 1909*

*3 Page 62. Tamil Studies. M. Srinivasa Ayyangar*

அவர் மேலும் கூறுகிறார் : ' சிறுபான்மையினரான வேளாளர் தவிர்த்து மற்றத் திணைநில மக்ளாகிய பல்வேறு வகுப்பினர் எல்லாம் நாகமரபினரேயாவர். வேளாளரே திராவிடர் எனலாம்.' [1]

'The numerous castes with the exception of a handful of Vellalas must have grown out from territorial tribes of Nagas. The Velirs or Vellalas were alone Dravidians' [1]

இதுவரை நாம் கண்டவற்றிலிருந்து இன்றைய வேளாளர் மருத நில மள்ளர் குடிதவிர்த்த மற்ற பல்வேறு குடியினரிலிருந்து காலப்போக்கில் குலமாற்றம்பெற்ற கலப்பினம் எனவும், வெள்ளாளர் என்பவர் இடைக்காலச் சோழர் காலத்தில் ஊர்ச் சபைகளில் அங்கம் வகித்து வரிவசூல் செய்தவர் [குடும்பும் புரவுஞ் செய்தவர்] எனவும், அவர் மருதநில மள்ளர் [பள்ளர்] குடி எனவும், அவர் வீழ்ச்சியுற்றபின் அரசு பணியை மேற்கொண்ட பல்வேறு பிரிவினரும் தம்மை வெள்ளாளர் என வழங்க முனைந்தனர் எனவும் முடிவு கொள்வோம். பொதுவாய் தமிழ் அகராதிகளில் வேளாளர் என்பதற்கு ஈகையாளர், பூவைசியர், சூத்திரர் என்றும், வெள்ளாளர் என்பதற்கு மருத நில மக்கள் என்றும் பொருள் கண்டுளது காண்க.

முற்றும்

---

1 Page 381. Tamil Studies. M. Srinivasa Ayyangar.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 22 | நாற்பத்தொண்ணுயிரம் | நாற்பத்தெண்ணுயிரம் |
| 23 | 6 | நாற்பத்தெண்ணுரம் | நாற்பத்தெண்ணுயிரம் |
| 48 | 8 | பளவ மணிகளும் | பவள மணிகளும் |
| 54 | 14 | mumerous | numerous |
| 61 | 9 | recurited | recruited |
| 86 | 24 | Strictiest | Strictest |
| 108 | 9 | பிங்கலத்தை | பிங்கலந்தை |
| 113 | 28 & 29 | வேள்ளான் + ஆளன் | வெள்ளான் + ஆளன் |
| 137 | 1 | மன்னர் குடியினரே | மள்ளர் குடியினரே |
| 171 | 3 | Sudrars | Sudras. |